

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

உலகின் பல்வேறு பகுதியினரும் அறிஞர் வார்டு குறிப்பிடுவது போன்று தமக்கே உரிய கீழ்மட்ட மக்களைக் கொண்டிருந்திருக்கின் றனர். ரோமானியர்கள் அடிமைகளையும், ஸ்பார்ட்டன்கள் ஹியோட்டு களையும், பிரிட்டிஷார் வில்லெய்ன்கள் எனப்படும் கொத்தடிமைக் குடியானவர்களையும், அமெரிக்கர்கள் நீக்ரோக்களையும், ஜெர்மனி யர்கள் யூதர்களையும் அடித்தட்டு மக்களாக நடத்தி வந்திருக்கின்றனர். ஆனால் இவர்கள் எல்லோரையும் விடத் தீண்டப்படாதவர்களின் கதிப்போக்குத்தான் மிக மிக மோசமானதாகும். அடிமைத்தனம், கொத்தடிமைத்தனம், பண்ணையடிமைத்தனம் போன்றவை எல்லாம் மறைந்தொழிந்துவிட்டன. ஆனால் தீண்டாமை மட்டும் இன்னும் ஒழிந்தபாடில்லை; இந்துமதம் இருக்கும் வரை அது நீடித்திருக்கவே செய்யும். ஒரு தீண்டப்படாதவனின் நிலைமை யூதனின் நிலைமையை விட மிக மிக மோசமானது; பரிதாபத்திலும் பரிதாபத்துக்குரியது. யூதனுக்கு ஏற்பட்டுள்ள அவலங்கள் அவனே உருவாக்கிக் கொண் டவை. ஆனால் தீண்டப்படாதவனுக்கு ஏற்பட்டுள்ள துன்பதுயரங்களோ அப்படிப்பட்டவை அல்ல; அவற்றிலும் கொடுமையிலும் கொடுமை யானவை. இந்து சமயத்தின் திட்டமிட்ட சதியே இவற்றிற்கெல்லாம் காரணம்; நாகரிகமற்ற, காட்டுமிராண்டித்தனமான, முரட்டுத்தனமான வன்முறையை விடவும் அதிகக் குரூரங்களை விளைவிக்க வல்லது இந்தத் தீண்டாமை எனும் சாபக்கேடு, சாபத்தீடு. யூதன் வெறுக்கப் படுகிறான் என்பதில் ஐயமில்லை; ஆனால் முன்னேறுவதற்கான வாய்ப்புகள் அவனுக்கு மறுக்கப்படுவதில்லை. ஆனால் அதே சமயம் தீண்டப்படாதவனின் நிலைமை என்ன? அவன் வெறுத்து ஒதுக்கப் படுவதோடு, அவன் முன்னேறுவதற்கான சகல வாய்ப்புகளும் மறுக்கப் படுகின்றன; எல்லாக் கதவுகளும் அவனுக்கு மூடப்பட்டுள்ளன. இவ்வாறு ஏறத்தாழ 6 கோடித் தீண்டப்படாதவர்கள் – 600 லட்சம் ஆத்மாக்கள் – சொல்லொண்ணா துன்பிலும் துயரிலும், வேதனையிலும் வாதனையிலும் ஆழ்ந்து அமிழ்ந்து, பாம்பு வாய்ப்பட்ட தேரையாக உழன்று வருகின்றனர்.

– பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர்,

This Volume XXVIII in Tamil forms the Second part of the English Edition Volume 13 Part II of **Babasaheb Dr. Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

*முதற் பதிப்பு: மார்ச், 2002*
*விஷு ஆண்டு, பங்குனி*



விலை : *ரூ. 40/-*

நூலகப் பதிப்பு : *ரூ. 100/-*

வெளியீட்டாளர்:

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

விற்பனை நிலையம்:

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973

# ஆலோசனைக்குழு

**மாண்புமிகு டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,*
*இந்திய அரசு*

**டாக்டர் பிந்தேஸ்வர் பாதக்,** *பிஎச்.டி., டி.லிட்.,*
*செயல் துணைத்தலைவர்,*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,*
*புதுடில்லி.*

**திரு. சத் பால்**
*இயக்குநர்,*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,*
*புதுடில்லி.*

*நிர்வாக ஆசிரியர் (தமிழ்):*
*ரா. ரங்கசாமி (மாஜினி)*
*சென்னை, தமிழ்நாடு.*

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, 1992.*

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

**திரு. வஸந்த் மூன்**
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்கள்:

*திரு. முனைவர் அ. இளங்கோவன்*
*திரு. கே. நீலகண்டன்*

ஒப்புநோக்கியோர்:

*திரு. கே. நீலகண்டன்*

பிழைதிருத்த உதவி:

*திரு. வி. இராதாகிருஷ்ணன்*

# அணிந்துரை

நமது இந்திய நாட்டின் அரசியல் சாசனம் உலகின் தலை சிறந்த அரசியல் சாசனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இத்தகைய சிறப்புமிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கி, செழுமைப் படுத்தி, வடிவமைத்துத் தந்த பெருமை பிரதானமாக பாரத ரத்னா பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கரையும், அரசியல் சாசன வரைவுக் குழுவையும் சேரும். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்கு அவர் சமர்ப்பித்த இந்திய அரசியல் சாசனத்தின், இந்திய அரசமைப்பின் முன்வரைவு இந்தத் தொகுதியில் அப்படியே வெளியிடப்பட்டுள்ளது.

மேலும், இந்த முன்வரைவு குறித்து அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற காரசாரமான, கருத்தாழமும் செறிவுமிக்க விவாதங்களும், அந்த முன்வரைவுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட திருத்தங்களும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. விவாதங் களின்போது எழுப்பப்பட்ட பல்வேறு பிரச்சினைகளுக்கும், ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும், சர்ச்சைகளுக்கும் டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாகவும், அழுத்தம் திருத்தமாகவும், அசைக்க மறுக்க முடியாத ஆதாரங்களுடனும் பதிலளித்து அனைவரது பாராட்டையும் பெற்றிருப்பதையும் காண்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் நமது பாரதத் திருநாட்டின் ஈடு இணையற்ற சட்ட மேதைகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம் வாசகர்கள் பல்வேறு பயனுள்ள விஷயங்களைப் பற்றித் தெரிந்து புரிந்து கொள்வதற்கும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழும் புதியதோர் சமுதாயம் உருவாகும் திசை வழியில் நாடு முன்னேறுவதற்கும் உதவும் என்றும் நம்புகிறோம்..

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா
சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத் துறை அமைச்சர்,
இந்திய அரசு.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்ப தாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசை யில் 28-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை தமிழ் உட்பட இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றி யைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியை யும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

சத்பால்
இயக்குநர்
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

புதுடில்லி

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடு களின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகை யாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 13 ஆவது தொகுதி தமிழில் 26, 27, 28, 29, 30 ஆவது தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணயசபையில் சமர்ப்பித்த அரசமைப்புச் சட்ட முன்வரைவு குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங் களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷயமாக இருந்தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங்களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித்திருப்பதைக் காணலாம்.

இந்த ஐந்து தொகுதிகளும் பலரால் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்த ஐந்து தொகுதிகளும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்

## பொருளடக்கம்

## பகுதி ஐந்து

## விதி வாரியாக விவாதம்

# இந்திய அரசமைப்பின் முன்வரைவு

## விதி 67-A

[1]திரு. அவைத் தலைவர்: இப்போது அரசியலமைப்புச் சட்ட வரைவு குறித்து ஆய்வுசெய்ய முற்படுவோம். சட்ட வரைவில் விதி-67 வரை ஏற்கனவே அவை ஆய்ந்துள்ளது. தற்போது மேலும் தொடர்ந்து ஆயவிருக்கிறோம். தேர்தல் விவகாரங்கள் பற்றிய விதிகளை முதலில் முடிவு செய்யலாமென்று வழிகாட்டுக்குழு கருதுகிறது. இவ்வவையின் விருப்பமும் அஃதேயென்று கருதுகிறேன். ஆனால் அவ்விதிகள் பற்றிய விவாதத்தை இன்றைய அமர்வில் எடுத்துக்கொள்ள இயலாதென அறிகிறேன்; அதனை நாளைய அமர்வில் எடுத்துக்கொள்ளலாம். நாம் இன்று விதி 68 இல் தொடங்கி இன்றைய விவாதங்களுடன் தொடர்புடைய தேர்தல் விதிகளில் மட்டும் கவனம் செலுத்தி, எஞ்சிய விதிகளை நாளை எடுத்துக் கொள்ளலாம்.

அதற்கு முன்பாக ஒருவிதியில் திருத்தம் தேவையென்று ஏற்கனவே அறிக்கை தரப்பட்டுள்ள விதி 67-A பற்றிய ஆய்வை முதலில் எடுத்துக் கொள்ளலாம்.

## புதிய விதி 67-A

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (பம்பாய்: பொது):

தலைவர் அவர்களே,

'விதி 67க்குப் பின்னர், கீழ்வரும் புதிய விதியினைச் சேர்க்கலாமென முன்மொழிகிறேன்:

விதி 67-A (1) நாடாளுமன்ற அவைகளில் தாக்கல் செய்யப்பட்டுள்ள, தாக்கல் செய்யப் படவுள்ள எந்தவொரு மசோதா குறித்தும், ஆலோசனை

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் (அதிகாரப்பூர்வ அறிக்கை), தொகுதி VIII, 1949, மே 18, பக். 82-83.

வழங்க, மூன்று உறுப்பினர்களுக்கு மிகாமல் குழுவொன்றைக் குடியரசுத் தலைவர் நியமிக்கலாம்.

(2) அவ்வாறு நியமிக்கப்பட்ட குழு உறுப்பினர் ஒவ்வொருவரும், நாடாளுமன்ற அவைகளின் தனித்தனி அமர்வுகளிலும், கூட்டு அமர்வு களிலும், குறிப்பிட்ட மசோதாவின் மீதான விவாதங்களின்போது கலந்து கொள்ளவும், உரையாற்றவும் உரிமைபெறுவர். மசோதா தொடர்பாக அமைக்கப்படும் நாடாளுமன்றக் குழுக்களிலும் அவர்கள் இடம்பெறலாம். ஆனால் அவர்களுக்கு வாக்களிக்கவோ, நாடாளுமன்றத்தின் பிற நட வடிக்கை களில் கலந்து கொள்ளவோ உரிமை இல்லை; நாடாளுமன்றம் பிற விவகாரங்கள் குறித்து அமைக்கும் குழுக்களிலும் அவர்கள் இடம்பெற உரிமை இல்லை.''

ஐயா, அரசியலமைப்புச் சட்டத்தில் இவ்விதி இடம்பெற வேண்டிய அவசியத்தை இனி உரைப்பேன்; நாடாளுமன்ற மேலவை யின் அமைப்பு குறித்து ஒன்றிய அரசியலமைப்புச் சட்டக் குழுவினது அறிக்கையின் 14வது பத்தியில், தெளிவுறுத்தப் பட்டுள்ளது அவையினர் நினைவில் இருக்கும். அறிவியல், இலக்கியம், வேளாண்மை, பொறியியல் முதலான துறைகளிலிருந்து பரிந்துரைக்கப்படும் பட்டியலிலிருந்து 15 பேர் நாடாளுமன்ற மேலவை உறுப்பினர்களாக நியமிக்கப்படலாம் எனும் அயர்லாந்து நாட்டுநடைமுறையை வரைவுக்குழு பின்பற்றவேண்டும் என்று அப்பத்தியில் பரிந்துரைக்கப்பட்டுள்ளது. வரைவுக்குழு இதுபற்றி ஆய எடுத்துக்கொண்டபோது, அயர்லாந்து நாடு சென்று திரு. டிவேலராவுடனும், அயர்லாந்தின் பிற அமைச்சர்களுடனும் இந்த நடைமுறையின் செயல்பாடு பற்றிக் கலந்துரையாடி வந்திருந்த திரு.பி.என்.ராவ், இந்த நடைமுறை எப்படி அயர்லாந்தில் தோல்வி யடைந்தது என விளக்கிக் கூறியதையடுத்து, ஒன்றிய அரசிய லமைப்புச் சட்டக்குழு அறிக்கையின் 14வது பத்தியில் கூறப்பட் டுள்ள பரிந்துரையை விட்டுவிடலாமென வரைவுக்குழு முடிவு செய்தது. எளிய மாற்று நடைமுறையாக, அறிவியல், இலக்கியம், சமூக சேவை முதலிய துறைகளில் அறிவாற்றலும் செயல்திறனும் மிக்க பதினைந்து உறுப்பினர்களை நியமிக்கக் குடியரசுத் தலை வருக்கு அதிகாரம் வழங்கலாமென வரைவுக்குழு முன்மொழிந்துள் ளது. இம்முன்மொழிவு ஒன்றிய அரசியலமைப்புச் சட்டக்குழு வின் மறுபரிசீலனைக்குச் சென்றபோது, அக்குழு, நியமன வல்லுநர் களின் எண்ணிக்கையை மொத்தத்தில் 15 என வரம்பு செய்வதற்கு

மாறாக, நியமன வல்லுநர் உறுப்பினர்களில் ஒரு பகுதியினர் முழுமையான உறுப்பினர்களாக நியமிக்கப்படலாமென்றும், மேலும் அவையில் அவ்வப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் எந்த ஒரு குறிப்பிட்ட நடவடிக்கை சம்பந்தமாக நாடாளு மன்றத்திற்கு ஆலோசனை வழங்க மூன்று உறுப்பினர்கள் நியமிக்கப் படலாமென்றும் பரிந்துரைத்தது.

அவ்வமர்வில் ஒன்றிய அரசியலமைப்புச் சட்டக்குழு செய்த பரிந்துரைகளில் முதல்பகுதி, ஏற்கனவே அரசியலமைப்பு விதி 67இல் செயல்படுத்தப்பட்டுள்ளது. குழுவின் இரண்டாவது பரிந்துரையைச் செயல்படுத்தவே, இப்போதைய திருத்தம் கொண்டு வரப்படுகிறது. இவ்வாறு நியமிக்கப்படும் உறுப்பினர்களின் செயல் பாடுகள் எவ்வாறு வரம்புறுத்தப்படுகின்றனவென்பதை மாண்பு மிகு உறுப்பினர்கள் நோக்கலாம். அதாவது, நாடாளுமன்றத்தின் குறிப்பிட்டதொரு நடவடிக்கை குறித்து நாடாளுமன்றத்திற்கு ஆலோசனை கூறி உதவுதலே, விதி 67-A, இன் கீழ் நியமிக்கப்படும் உறுப்பினர்களின் பங்காகும்; அத்துடன் அவர்களது பங்கு மட்டு மின்றி பதவியும் முடிவடைந்துவிடும்.

சிறப்பு நியமன உறுப்பினர்கள் நாடாளுமன்ற விவாதங் களிலோ, நாடாளுமன்றம் அமைக்கும் துணைக்குழு விவாதங் களிலோ பங்கெடுத்துக்கொள்ள மட்டுமே உரிமை பெறுவர் என்பதும், வாக்களிக்கும் உரிமை அளிக்கப்படாதென்றும் விதி 67A இன் இரண்டாவது பத்தியில் தெளிவுறுத்தப்பட்டுள்ளது. எனவே, இந்த மூன்று உறுப்பினர்கள் கலந்துகொள்வதால் நாடாளுமன்றத் தின் வாக்களிப்பு வலிமையில் மாற்றமேதும் விளையாது. எனவே விதி 67-A இல் அடங்கியுள்ள புது ஒதுக்கீட்டை அவை ஏற்றுக் கொள்ளுமென்று நம்புகிறேன். மேலும் விதி 67-Aஇல் உள்ளவாறு வல்லுநர்களைக் கூடுதல் உறுப்பினர்களாக நியமிக்கும் கருத்து முற்றிலும் புதிய திட்டமல்லவென்பதையும், அவைக்குச் சுட்ட விரும்புகிறேன். மாநிலச் சட்டமன்றச் செயல்பாடுகளில் மசோதாக் களின் குறிப்பிட்ட விஷயத்தை ஒட்டி வல்லுநர்கள் சிலரைச் சிறப்பு உறுப்பினர்களாக மாநில ஆளுநர்கள் நியமிப்பதற்கு 1919 ஆம் ஆண்டின் இந்திய அரசுச்சட்டத்தில் வழிவகுக்கப்பட்டிருந்தது என்பதை அவை உறுப்பினர்கள் பலர் அறிவர். அது நல்லதொரு

திட்டமேயென நான் கருதுவதால் இந்திய அரசியலமைப்புச் சட்டத்திலும் அதற்காக விதி வகுக்கப்பட்டால் மிகுந்த நற்பயன் விளையுமென்று கருதுகிறேன்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இக்கருத்து முன்னதாகச் சுற்றுக்கு விடப்படவில்லையாதலால், மேலும் கால அவகாசம் தேவையென உறுப்பினர்கள் விரும்புகின்றனர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது குறித்துப் பரிசீலிப்பதை ஒத்திப்போடலாமென அவையோர் விரும்பினால் எனக்கு அதில் மறுப்பில்லை.

**திரு. அவைத்தலைவர்:** இது பற்றிய பரிசீலனையை இன்று ஒத்திவைப்போம்; பின்னர் எடுத்துக்கொள்ளலாம்.

## விதி 68

**திரு. அவைத் தலைவர்:** இந்த அவையில்,

''விதி 68 அரசியலமைப்புச்·சட்டத்தின் ஒரு பகுதியாக அமையலாம்''

எனும் தீர்மானம் தாக்கல் செய்யப்படுகிறது. இவ்விதி குறித்த திருத்த முன்மொழிவுகளை இப்போது எடுத்துக்கொள்வோம்.

(திருத்தங்கள் 1453, 1454 ஆகியவை தாக்கல் செய்யப்படவில்லை.)

திரு.நசிருத்தீன் அகமது பெயரியில் 1455 வது திருத்தம் தரப்பட்டுள்ளது. இஃது ஒரு வாய்மொழித் திருத்தம் என்று கருதுகிறேன். இதனைத் தாக்கல் செய்ய விரும்புகிறீர்களா? இந்த வாய்மொழித் திருத்தங்கள் குறித்து, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்கு எனது ஆலோசனையொன்றத் தெரிவிக்க விரும்புகிறேன். இத்தகைய திருத்தங்களைத் தர முன்வரும் உறுப்பினர்களோடு அவர்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே.18, 1949, பக்.84

தனியே கலந்தாலோசித்து ஏற்றுக்கொள்ளத்தகும் எனக் கருதும் திருத்தங்கள் அனைத்தையும் சட்ட விதியைத் தாக்கல் செய்து அவற்றை ஏற்றுக்கொண்டதாக அவையில் அறிவித்தால் அவையின் நேரத்தை கணிசமாகக் குறைக்கலாம்; ஏற்கப்பட இயலாத திருத்தங்களைக் குறித்து என்ன செய்வதென்று பின்னர் பார்த்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த நடைமுறையை, வரைவுக்குழு மிக மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்கிறது.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவைத் தலைவர் அவர்களே,

> 'விதி 68ன் துணை விதி இரண்டில், 'குடியரசுத் தலைவரால்' என்ற பதத்திற்குப் பதிலாக 'நாடாளுமன்ற சட்டத்தினால் என்ற பதம் இடம்பெறலாம்''

என்னும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

நான் முன்மொழிந்துள்ள திருத்தத்திற்கான காரணம் எதையும் விளக்க வேண்டியதில்லை. வரைவு விதியில் நாடாளுமன்றத்தின் பதவிக் காலத்தை நீட்டிக்கும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்குக் கொடுக்கப்பட்டிருந்தது என்பதை அறிவீர்கள். இது நாடாளுமன்றத்தின் அதிகார வரம்பில் தேவையற்ற தலையீடு ஏற்படக் காரணமாகும் என்று கருதப்படுவதால், நாடாளுமன்றச் சட்டம் இயற்றப்படுவதன் மூலமாக மட்டுமே நாடாளுமன்றத்தின் பதவிக் காலத்தை நீட்டிக்க இயலுமேயன்றி வேறு எந்த வகையிலும் இயலாது என இத்திருத்தம் முன்மொழிகிறது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் 1465. இது டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தத்தில் அடங்குகிறது. எனவே இதனை நாம் மேலும் கருதத் தேவையில்லை.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நான் முன்மொழிந்துள்ள திருத்தம் எண் 1466க்கு விளக்கம் அளிக்கப்பட வேண்டுமெனப்படுகிறது. ஆனால் அவையில் நடை

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே.18, 1949, பக். 85.

2. அதே நூலில், பக். 88

பெற்ற விவாதங்களில் எவருமே கோரவில்லை. ஏனெனில் எனது திருத்தம் உறுதியானதோர் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளது. ஆகையால் அதனை அவை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

எனது நண்பர் பேராசிரியர் ஷா முன்மொழிந்துள்ள திருத்தத்தினால் ஏற்படக்கூடிய சில இடர்ப்பாடுகள் குறித்து எனது நண்பர் திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி ஏற்கனவே சுட்டிக்காட்டினார். தேர்தல் என்பது ஓர் எளிய விவகாரமல்ல. அதற்கு ஏராளமாகச் செலவாகும். எனவே அடிக்கடி குறுகியகால இடைவெளிகளில் இந்தச்செலவை அரசின் மீதும், பேராசிரியர் ஷா கூறிய மக்களின் மீதும் சுமத்துவது நியாயமல்ல என்றே கருதுகிறேன். 'போரைத் தொடர்ந்து உடனடியாக நடத்தப்படும் தேர்தல்கள் மக்களின் உள்ளக் கிடக்கையை சரியாக வெளிப்படுத்துவதில்லை என்பதே நமது கடந்த கால அனுபவம் என்று பேராசிரியர் ஷா கூறிய கருத்தை நானும் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் அதே சமயம் போர் ஒன்று மட்டுமே இத்தகைய சமநிலையில்லாத நிகழ்வு என்பதற்கில்லை. மக்களின் மனநிலையை வெகுவாகப் பாதிக்கக்கூடிய வேறுபல சூழ்நிலைகளும் உண்டு. ஆகவே மக்களும் உணர்ச்சிவசப்பட்டு சமநிலை இழக்கக்கூடும் என்றெல்லாம் கருதி அரசியலமைப்புச் சட்டத்தை எழுதஇயலாது. எனவே இயல்புக்கு ஒவ்வா ஒரு சூழ்நிலையை மட்டுமே கருதி மற்றவற்றைப் புறக்கணிக்கும் வகையில் அமைந்துள்ளதாகையால் பேராசிரியர் ஷாவின் திருத்தத் தீர்மானம் ஏற்கத்தக்கதல்ல. எனவே இதுகுறித்து அரசியலமைப்பு சட்ட வரைவில் உள்ளவாறே ஏற்றுக்கொள்வோமானால் மிக நன்று என்று கருதுகிறேன்.

**திரு. அவைத்தலைவர்:** அவ்வாறெனில் இவ்விதியை அம்பேத்கர் திருத்தியமைத்துள்ளவாறு முழுமையாகத் தாக்கல் செய்கிறேன்:

> ''சட்டவிதி 68 தற்போது திருத்தப்பட்டுள்ளவாறு இடம்பெறலாம்'' என்னும் தீர்மானத்திற்கு அவையின் ஒப்புதல் கோரப்படுகிறது.

அவை தீர்மானத்திற்கு ஒப்புதல் வழங்குகிறது.

விதி 68 தற்போதுள்ள திருத்தங்களுடன் அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.

# விதி 68 A

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்போது விதி 68-A ஆக முன் மொழியப்படும் புதிய விதிக்கு இப்போது வருகிறேன். அவ் விதியை டாக்டர் அம்பேத்கர் முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, பின்வரும் தீர்மானத்தை இறைஞ்சி முன்மொழிகிறேன்.

> ''அரசியலமைப்புச் சட்ட விதி 68க்குப் பின்னர், கீழ்வரும் புதிய விதி புகுத்தப்படலாம்.
>
> ''68 A ஒரு நபர் நாடாளுமன்ற உறுப்பினராவதற்குக் குறைந்தபட்சத் தகுதிகளாவன:
>
> (அ) அவர் இந்தியக் குடிமகனாயிருக்க வேண்டும்;
>
> (ஆ) மாநிலங்களைவை உறுப்பினராவதற்கு, 35 வயதுக்குக் குறையாத வயதும், மக்களவை உறுப்பினராவதற்கு 25க்குக் குறையாத வயதும் நிரம்பியிருக்க வேண்டும்;
>
> (இ) நாடாளுமன்றச் சட்டங்களால் அவ்வப்போது வரையறுக்கப்படும் பிற தகுதிகளையும் பெற்றிருக்க வேண்டும்.''

இந்தச் சட்டவிதியின் நோக்கம் தேர்தலில் போட்டியிட விரும்பும் நபர்களின் தகுதிகளை வரையறுப்பதேயாகும். ஒரு தேர்தலில் வாக்களிக்கத் தகுதிபெற்ற ஒருவர், அத்தேர்தலில் போட்டி யிடவும் தகுதியுடையவர் என்பதே பொதுவான நடைமுறைவிதி. இவ்விதியின் மூலம் (68-A) வாக்காளருக்கான தகுதிகள் அனைத்தை யும் பெற்றுள்ள நபர் ஒருவர் வேட்பாளராகப் போட்டியிட வேண்டு மெனில், அதற்கெனக் கூடுதல் தகுதிகளை வரையறுக்க முனை கிறோம். இக்கூடுதல் தகுதிகள் விதி 68A இல் வரையறுக்கப்படு கின்றன.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே.18, 1949, பக். 89.

ஒரு சட்டமன்றத்தின் உறுப்பினராகப் பணியாற்ற விரும்பும் ஒருவர்க்குச் சாதாரண வாக்காளர் ஒருவரை விடக் கூடுதலான தகுதிகள் சில தேவையென்பதை அவை ஏற்றுக்கொள்ளுமென்று நம்புகிறேன். அவையில் அவர் நிறைவேற்ற வேண்டிய பணி களைச் செம்மையாக ஆற்றுதற்கு, ஓரளவு அறிவும், நடைமுறை உலக அனுபவமும் தேவையானவை. இக்கூடுதல் தகுதி வரை யறைகள் ஏற்றுக்கொள்ளப்படுமெனில், எளிய வாக்காளர் பொது மக்களை விட ஆற்றலும் திறமும் கொண்டு, அவையில் செம்மை யாகப் பணிபுரியவல்ல வேட்பாளர்கள் கிடைக்க வழி பிறக்கும்.

★ ★ ★

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** இந்த சாதாரணக் குறிப்பின் மீது, டாக்டர் அம்பேத்கர் கொண்டுவந்த திருத்தம் விஷமத்தன மானது, நேர்மையற்றது என்று பலரும் பேசித் தீர்த்து விட்டார் கள். இவையாவும் உண்மையில் மிகைப்படுத்தப்பட்ட, விவகாரத் திற்குத் தொடர்பில்லாத கூற்றுகள் என்பதை அவை உணரும் என்று நம்புகிறேன். டாக்டர் அம்பேத்கரின் திருத்தத் தீர்மானத்தை, திருமதி துர்க்காபாய் முன்மொழியும் திருத்தத்தோடு நான் ஆதரிக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருமதி துர்க்கா பாயின் திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறேன். பிற திருத்தங்கள் எதை யும் ஏற்கவியலாது.

**திரு. அவைத்தலைவர்:** பதிலளிக்க விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்விவாதத் திற்கு நான் பதிலளிக்கத் தேவையில்லையெனினும் ஒரு கருத்தை மட்டும் சுட்ட வேண்டியுள்ளது. திருமதி துர்க்காபாயின் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால், சில வகையில் விதிகள் 152, 55 ஆகியவற் றுடன் மாறுபாடு தோன்றும். ஏனெனில் மாநில மேலவை உறுப் பினர்களின் வயதுக்குக் கீழ்வரம்பு 35 எனவும், குடியரசுத் துணைத் தலைவர் வயதுக்கும் கீழ்வரம்பு 35 எனவும் நாம் வரையறுத்துள் ளோம். இந்த மாறுபாடு நிலவுதல் பெரிதும் பொருட்டல்ல. மேலும்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே 18, 1949, பக். 94.

அவை விரும்பினால் (மூவகையினர்க்கும்) சீரான வயதுவரம்பு வரையறுக்க இன்றும்கூட இடமுண்டு.

**திரு. அவைத்தலைவர்:** திருமதி துர்காபாய் முன்மொழிந் துள்ள, 'சட்டவிதி 68க்குப் பின்னர் சேர்க்கப்படவுள்ள விதி 68-A இன் துணைவிதி (a) இல், 'முப்பந்தைந்து' என்ற சொல்லுக்கு பதிலாக 'முப்பது' என்று திருத்தியமைக்கலாம்'' என்னும் திருத்தம் வாக்குக்கு விடப்படுகிறது.

மேற்குறிப்பிட்ட திருத்தத்தோடு, விதி 68-A, அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 69

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இவ்விதிக்கு முன்மொழியப்பட்ட திருத்தங்கள் எதையும் ஏற்கவியலாமைக்கு வருந்துகிறேன். இத்திருத்த முன்மொழிவுகளில், ஒன்றேயொன் றுக்கு மட்டும் பதிலளிக்க முனைவேன்; ஏனையவற்றுக்குப் பதில் அளிக்க வேண்டியதில்லை. பேராசிரியர் ஷா முன்மொழிந்துள்ள திருத்தம் சில சிக்கல்களைத் தோற்றுவிக்கும். அவரது முதலாவது திருத்தம் (எண். 1470), இரண்டாவது திருத்தம் (1479) ஆகிய இரண்டும் ஏறத்தாழ ஒரே விஷயத்தைக் குறித்தவையாதலால், இரண்டையும் ஒருசேர எடுத்துக்கொண்டு, அவர் வலியுறுத்திய வாதங்களுக்கு பதிலளிக்க முனைகிறேன். பேராசிரியர் ஷா அவரது திருத்தங்கள் இரண்டின் அடிக்கருத்துமே, நாடாளுமன்றத்தின் இரு கூட்டத் தொடர்களுக்கிடையிலான கால இடைவெளி மூன்று மாதங்களுக்கு மேல் நீளக்கூடாது என்பதே.

பேராசிரியர் ஷாவின் திருத்தங்களைப் போன்றே, திரு. காமத்தின் திருத்தமும் (எண்.1471) அமைந்திருப்பதால் அதற்கும் சேர்த்தே பதிலளித்துவிடுகிறேன். 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில் இவ்விதிகள் புகுத்தப்பட்டதற்கான காரணங்களைப் பேராசிரியர் ஷாவோ, திரு.காமத்தோ புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. இன்றைய காலகட்டத்திற்கும், இந்திய அரசுச் சட்டம் இயற்றப்பட்ட 1935 ஆம் ஆண்டில் நிலவிய அரசியல் சூழ் நிலைக்கும் இடையிலான வேறுபாடுகளைப் பேராசிரியர் ஷாவும்,

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே 18, 1949, பக்.104 - 07.

திரு.காமத்தும் உணர்வார்களென நம்புகிறேன். 1935 ஆம் ஆண்டில் நிலவிய அரசியல்சூழலில், நாடாளுமன்றத்தின் மீது அரசு மேலாதிக்கம் செலுத்த முனைப்பு காணப்பட்டது. அதற்கு முந்தைய காலகட்டங்களில் அரசுக்கு நிதி திரட்டும் கருவியாகவே சட்ட மன்றங்கள் கூட்டப்பட்டுவந்திருந்தன. சட்டமன்றம் கூடுவதே (வரவு செலவுத்திட்ட அமர்வுகள்) அரசின் வரி விதிப்புகளுக்கும் செலவினங்களுக்கும் இசைவளிப்பதற்காகத்தான் என்ற நடைமுறை நிலவிவந்தது. மேலும் சிறு பங்கு நேரமே அவை உறுப்பினர்கள் அரசின் அன்றாடச் செயல்பாடுகள் பற்றிக் கேள்விகள் எழுப்பவும், சமூகக் கேடுகளை நீக்கும் தீர்மானங்களைக் கொண்டு வரவும் ஒதுக்கப்படவேண்டுமென்பதில் அரசு குறியாக இருந்தது. 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின்கீழ் இயங்கிவந்த இந்திய மாநில அரசுகள் சிலவற்றின் செயல்பாடுகளை நான் பல ஆண்டுகள் கூர்ந்து கவனித்து வந்துள்ளேன். அதிலும் குறிப்பாக ஒரு மாநிலச் சட்டமன்றத்தைப் பற்றி (பெயர் குறிப்பிடாமல்) உரைப்பதெனில், அது ஒரு முழு ஆண்டில் 18 நாட்கள் மட்டுமே கூடியது. அரசின் வருவாய் முன்மொழிவுகளுக்கு இசைவளிப்பதைத் தவிர வேறெந்த செயல்பாடும் நடக்கவில்லை.

**திரு. தாஜாமுல் ஹுசேன்:** அதற்கு யார் பொறுப்பு?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதைப் பற்றித்தான் நானும் விளக்க முனைந்தேன். சட்டமன்றப் பேரவையைச் சந்திக்க விருப்ப மின்மை, அரசையும், நிர்வாகத்தையும் பேரவையின் பரிசீலனைக்குட்படுத்தத் தயக்கம் ஆகிய அரசு நிர்வாகத்தின் மனப்பான்மையே இந்த நிலைமைக்குக் காரணமாகும்.

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** இது எந்த மாநிலத்தில் நடைபெற்றது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை இத்தோடு விட்டு விடுவோம். எந்த மாநிலம் என்பதை எனது நண்பருக்குத் தனியாகக் கூறுவேன். 1935 ஆம் ஆண்டுக்கு முன்னர் நிலவிய நடைமுறை போன்றே இனியும் பேரவைகள் நடத்தப்பட்டால், அது மக்களாட்சி முறைக்கு மாறான செயல்பாடாகுமென்றே கருதினோம். அதாவது, பேரவையை அரசின் வருவாய்த் திட்டங்களுக்கு

இசைவுபெற மட்டுமே கூட்டுதல், காரணமின்றிக் கலைத்தல் போன்ற நிர்வாகச் செயல்பாடுகளின் விளைவாக, வினாக்கள் எழுப்புவதன் வாயிலாகவும் சட்டமியற்றுவதன் வாயிலாகவும் அரசு எந்திரத்தின் செயல்பாட்டைக் கண்காணித்துக் கட்டுப்படுத்தும் பொறுப்பு அவைக்கு மறுக்கப்படுதல் மக்களாட்சி நெறிக்கு மாறான பிறழ்வேயாகும். இத்தகைய நிகழ்வுகளைத் தடுக்கும் நோக்குடன் தான் 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச்சட்டத்தில் இப்புதுவிதி சேர்க்கப்பட்டது. அரசியல் சூழல் தற்போது முற்றிலும் மாறுபட்டு விளங்குகிறதென்றும், இனி எந்த அரசு நிர்வாகமும் சட்டமன்ற அவைகள் மீது மேலாதிக்கப் போக்கில் நடந்து கொள்வதியலா தென்றும் கருதினோம். எனவே கூடுதல் பாதுகாப்பாக அரசிய லமைப்புச் சட்டத்திலும் இவ்விதி இடம்பெற வேண்டுமென்று நாங்கள் கருதினோம்; குறிப்பாக நான் கருதினேன். எனதருமை நண்பர்கள் திரு. காமத்தும், பேராசிரியர் ஷாவும் இதுவும் கூடப் போதாது என்று கருதுகிறார்கள். மேலும் கூடுதலான அளவில் அவைகள் கூட வேண்டுமென்று அவர்கள் வேண்டுகின்றனர். இப் போதைய வரைவின் வடிவிலுள்ள விதி, சட்டமன்றங்கள் மேலும் அடிக்கடியாகக் கூட்டப்படுவதைத் தடை செய்யவில்லை. சொல்லப்போனால், உறுப்பினர்களே சலித்துப்போகும் அளவுக்கு மிகுதியான நாட்களுக்கும் அமர்வுகளுக்கும் நாடாளுமன்றம் நடத்தப்பட இடமுண்டு என்றே அஞ்சுகிறேன். இதற்கு முக்கிய காரணம் அரசு மக்களுக்குப் பதிலளிக்க வேண்டிய பொறுப்பு வாய்ந்தது என்பதே. நல்லதொரு நிருவாகத்தை அளிப்பதுடன் அரசின் பொறுப்பு முடிவடைந்து விடுவதில்லை. கட்சித் திட்டங் களின் வடிவில் மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளுக்குச் செயல்வடிவம் தருவதற்குத் தேவையான சட்டங்களை இயற்ற வழிவகுப்பதும் அரசின் பொறுப்பாகும்.

இதைப் போன்றே, தனி உறுப்பினர்கள் பலர், தங்கள் சொந்தக் கருத்துக்களுக்கோ, தமது கட்சியின் திட்டங்களுக்கோ செயல்வடிவம் அளிக்கும் நோக்கில் தனியார் சட்ட மசோதாக் களைக் கொணர முன்வரலாம். மேலும், அரசே அடிக்கடி சட்ட மன்றத்தைக் கூட்ட வேண்டிய கட்டாயத்துக்குள்ளாகும் நிலையும் தோன்றக் காரணமுண்டு. சட்டமன்றங்கள் எத்தனை முறை கூட்டப் பட வேண்டுமென்பதை நிர்ணயிப்பதில், அரசின் வரி விதிப்பு களுக்கும், செலவுத் திட்டங்களுக்கும் விரைந்து சட்டமன்ற ஒப் பிசைவு பெறுதல் ஒரு வலிமையான காரணியாக விளங்குமென்று கருதுகிறேன்.

எனவே, நாம் ஏற்கனவே நிர்ணயித்திருப்பதே, கீழ்வரம்பு என்கிற அளவில் போதுமானது என்பதை அவைக்குப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன். மேல்வரம்பு என்பது வரையறுக்கப் படாமைக்கான காரணங்களை முன்னரே குறிப்பிட்டுள்ளேன். சட்ட விதியின் கீழ் நிர்ணயிக்கப்படும் கீழ்வரம்பு அளவில் அவைகளைக் கூட்டினால் போதுமென்று அரசு நிர்வாகங்கள் இருந்துவிடும் என்று எவ்வித அச்சமும் கொள்ளத் தேவையில்லை.

பேராசிரியர் ஷாவின் திருத்தத்திற்கு (எண் 1477) வருகிறேன். இத்திருத்தத்தின் மூலம், விதி 67(2)(a)இலிருந்து ''ஏதாவது ஓர் அவை'' என்ற தொடரை நீக்கிவிட, பேராசிரியர் ஷா விரும்புகிறார். அவருடைய வாதத்தை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. மேலவையைக் கலைப்பதற்கு இடமில்லையாதலால், அதன் இயல்பான செயல்பாடுகளுக்காகக் குடியரசுத்தலைவர் மேலவை யைக் கூட்ட வேண்டியது அவசியமில்லையென்று கருதுகிறாரோ வென எண்ணத் தோன்றுகிறது; எனது எண்ணம் தவறெனில் நண்பர் திருத்தலாம். இந்த இரண்டு சூழ்நிலைகளுக்கிடையே முழுமையான வேறுபாடு உண்டென்பது தெளிவாகப் புலப்படு கிறது. நாடாளுமன்றத்தின் கீழ் அவை ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை கலைக்கப்படுவது போன்றுப் பிரிதொரு அவையும் கலைக்கப்பட வேண்டுமென்பதில்லை; ஆனால் ஓர் அவை அதற்குரித்தான செயல் பாடுகளை நிறைவேற்றுவதற்காகக் கூட்டப்படுதல் தேவையான நடவடிக்கைதானே. மேலவை (கலைக்கப்படக்கூடாதென்பதனா லேயே) ஓராண்டின் நாட்களனைத்திலும் தினந்தோறும் 24 மணி நேரமும், டில்லியில், அமர்விலிருக்கப் போவதில்லை. அவை (தேவையானபோது) கூட்டப்படும்; கூட்டப்படும்போது உறுப் பினர்களும் அவைக்கு வருவார்கள். எனவே, கீழவைக் கூட்டுவதற்கு அதிகாரம் இருப்பது போன்றே மேலவையைக் கூட்டுவதற்கும் அதிகாரம் தேவையென்பதில் தெளிவாக இருக்கிறேன்.

அடுத்து பேராசிரியர் ஷாவின் வேறு இரண்டு திருத்தங் களை (எண் 1473, எண் 1478) எடுத்துக் கொள்கிறேன். பேராசிரியர் ஷா என்று பேராசிரியர் கருதுவதாய்த் தோன்றுகிறது. எனவே, மக்களவையையோ, மாநிலங்களவையோ கூட்ட வேண்டிய கடமை யைக் குடியரசுத் தலைவர் நிறைவேற்றத் தவறினால், அவற்றைக் கூட்டுவதற்குத் தந்துள்ள திருத்த வாசகங்கள் சிக்கலாக அமைந் துள்ளன. அவற்றின் சாரத்தை நோக்கவும், சாதாரண காலங்களிலோ,

அவசர நிலை நிலவும் காலங்களிலோ குடியரசுத் தலைவர் - நாடாளு மன்றத்தைக் கூட்டத் தவறினால் அதிகாரம் (அந்தந்த அவையின்) அவைத் தலைவர், அவையின் துணைத் தலைவர் ஆகியோருக்கு இருக்க வேண்டுமென்று அவர் கூறுகிறார். பேராசிரியர் கே.டி.ஷா வின் கருத்து, நான் (சரியாகப்) புரிந்து கொண்ட அளவில், சட்ட நிலையை அவர் முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டுள்ளார் என்பதேயாகும். முதலாவதாக, நாடாளு மன்றத்தைக் கூட்டுதல் என்னும் சட்டம் தமக்கு விதித்துள்ள கடமையிலிருந்து குடியரசுத் தலைவர் ஏன் தவற வேண்டும் என்று புரியவில்லை. நாடாளு மன்றத்தைக் கூட்ட வேண்டிப் பிரதமர் முன் மொழியும்போது, காரணமின்றியோ, தன்மூப்பாகவோ குடியரசுத் தலைவர் கூட்ட மறுப்பாரெனில் அத்தகைய குடியரசுத் தலைவரை, நீக்குவதற்கே நமது அரசியல் சட்டத்தில் இடமுண்டு என்பது தெளிவு. அரசியல் சட்டம் தமக்கு விதித்துள்ள கடமையைக் குடியரசுத் தலைவர் நிறைவேற்ற மறுப்பாரெனில் அவர் அரசியல் சட்டத்தை மீறு கிறார்; அவரைப் பதவி நீக்கம் செய்ய நமக்கு முழு உரிமையுண்டு. எனவே, குறிப்பிட்ட சட்ட விதியிலேயே, அத்தகைய சூழ்நிலை வராது காக்க நமக்குப் போதிய மாற்றுத் தீர்வு கிடைக்கிறது என்பது தெளிவாகும்.

பேராசிரியர் கே.டி.ஷாவின் கருத்தை நாம் ஏற்றுக் கொள்வோ மெனில், வேறொரு சிக்கல் எழுகிறது. நாடாளுமன்றத்தைக் குடி யரசுத் தலைவர், ஏதாவது தக்க காரணத்திற்காகக் கூட்டாத நிலை யில், மக்களவைத் தலைவரோ, மாநிலங்கள் அவைத் தலைவரோ, கூட்டுகிறாரென வைத்துக்கொள்வோம். அப்போது என்ன நிகழும்? குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தைக் கூட்டவில்லையென்பது, நாடாளுமன்றத்தின் முன்பு வைப்பதற்கு அரசுக்கு ஏது மில்லை யென்ற காரணத்திற்காக இருப்பின், அந்தச் சூழ்நிலையில் அவைத் தலைவர்கள் மக்களவையையோ மாநிலங்களவையோ கூட்டி என்ன செய்யப்போகிறார்கள்? அரசுக்குத் தேவையான பணியேதும் இல்லையென்ற நிலையில், பிரதமரின் அறிவுரைப்படி மட்டுமே குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தைக் கூட்டாதிருப்பது சாத்தியம். அத்தகைய நிலையில் அவைத்தலைவர் (மக்களவையாயினும், மாநிலங்களவையாயினும்) நாடாளுமன்றத்திற்குப் பணியேதும் தர இயலாது. அரசுநிர்வாகம் மட்டுமே நாடாளுமன்றத்திற்குப் பணியினைத் தரவியலும்; அதாவது, பிரதமர் அறிவுரையின்படி மட்டுமே குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தைக் கூட்டுவார். எனவே, நாடாளுமன்றம் ஆற்றவேண்டிய பணி ஏதும் முன்வைக்கப்

படாத நிலையில் மக்களவைத் தலைவரோ, மாநிலங்களவைத் தலைவரோ அவையைக் கூட்டுதல் பயனற்ற வீண்செயல்பாடாகும் என்றே எனக்குத் தோன்றுகிறது. எனவே அத்திருத்தத்தை ஏற்றுக் கொள்வதால் எவ்விதப் பயனுமில்லையென்றே கருதுகிறேன்.

பேராசிரியர் கே.டி.ஷாவின் திருத்தங்களில் இறுதியானது 1482வது திருத்தமாகும். நாடாளுமன்றத்தைக் கலைக்குமாறு பிரதமர் அறிவுரை தரும்போது, எழுத்துமூலம் தக்க காரணங்களைத் தந்தாலன்றி குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தைக் கலைத்தலாகாது என்பது அத்தீர்மானத்தின் நோக்கம். ஒரு பிரதமர், நாடாளுமன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று குடியரசுத் தலைவருக்கு வாய்மொழியால் அறிவுரை கூறுவதற்கும், கடிதம் எழுதிவேண்டுதற்கும் வேறுபாடேதுமிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. குடியரசுத் தலைவர் பிரதமரிடருந்து எழுதிப்பெறும் ஆவணத்தினால் என்ன பயன் என்று பேராசிரியர் ஷா அவரது உரையில் கூட விளக்கவில்லை. எனவே, அதைப்பற்றி நான் கருத்தேதும் கூறுதற்கில்லை. பிரதமர் (காரணமின்றித்) தன்னிச்சையாக நாடாளுமன்றத்தைக் கலைக்கக் கோருதற்குத் தடையை உருவாக்குதலே பேராசிரியர் ஷாவின் நோக்கமெனில், பாராளுமன்றக் கலைப்பு தொடர்பாகப் பின்பற்றப்பட்டுவரும் மரபு நெறிகளை ஒழுங்காகக் கடைபிடித்தலே போதுமென்று நான் கருதுகிறேன். நான் நன்கு புரிந்து கொண்டவரையில், (இங்கிலாந்து) பாராளுமன்றத்தைக் கலைக்க அரசருக்கு உரிமை உண்டு. பொதுவாகப் பிரதமர் அறிவுரையின்படிதான் அரசர் பாராளுமன்றத்தைக் கலைப்பது வழக்கம்; மெக்காலே இங்கிலாந்து வரலாற்றை எழுதிக்கொண்டிருந்த காலகட்டத்தில் பாராளுமன்றத்தைக் கலைக்கும் உரிமை என்றதோர் கோட்பாட்டை முன் வைத்தார்; அந்தகாலகட்டத்தில் அரசியல்வாதிகள் அனைவரும் ஒப்புக்கொண்ட மரபு நெறியின்படி, பாராளுமன்றத்தைக் கலைக்கக் கோரும் பிரதமரின் அறிவுரையை அரசர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பது கட்டாயமில்லை. அரசர் விரும்பினால், பிரதமரைப் பதவி நீக்கம் செய்துவிட்டு எதிர்க்கட்சித் தலைவருக்கு ஆட்சியமைக்க வாய்ப்பு தரலாம்; அதே பாராளுமன்றம் தொடர்ந்து செயல்படலாம். பாராளுமன்ற உறுப்பினர்களில் வேறு எவரேனும் ஆட்சிப் பொறுப்பை ஏற்க முன்வந்தால், அவருக்கு வாய்ப்பு அளிக்கவும் அரசருக்கு உரிமையுண்டு. அவ்வாறே இந்தியக் குடியரசுத் தலைவருக்கும், நாடாளுன்ற உறுப்பினர்கள் அவை கலைக்கப்

படுவதை விரும்புகிறார்களா, அல்லது நாடாளுமன்றத்தைக் கலைக்காமல், மாற்றுத் தலைவரின் கீழ் அரசு அமைவதை விரும்புகிறார்களா என்பதை மதிப்பிட்டு அதன்படி முடிவெடுக்க அதிகாரம் இருக்க வேண்டும். உறுப்பினர்களின் கருத்துப்படி, மாற்று அரசு அமைக்க வழியேதும் இல்லையென்று கண்டால், பிரதமரின் அறிவுரையை ஏற்று, நாடாளுமன்றத்தைக் கலைப்பதே குடியரசுத் தலைவரின் அரசியல் சட்டபூர்வமான கடமையாகும். எனவே, நாடாளுமன்றத்தைக் கலைக்கக் கோருவதற்கான காரணங்களைப் பிரதமர் எழுத்துவடிவில் அளிக்கவேண்டுமென்று வற்புறுத்துதல் பயனற்ற வீண் வேலையாகும். அவ்வாறு எழுதிக் கொடுக்கப்படும் ஆவணத்திற்கு அது எழுதப்பட்ட வெற்றுத்தாளுக்கு இருக்கும் மதிப்புகூடக் கிடையாதென்பது உறுதி. பிரதமர் தகுந்த காரணங்களுக்காகத்தான் அவைக் கலைப்பைக் கோருகிறாரா அல்லது தமது கட்சியின் நலன்களை மட்டும் கருதியே கோருகிறாரா என்பதைக் குடியரசுத் தலைவர் கண்டறியத் தக்க வழிகள் உண்டு. அவை உறுப்பினர்கள், கட்சிகளுக்கிடையே ஆய்ந்து சரியான முடிவையே குடியரசுத் தலைவர் எடுப்பார் என்று நம்பிக்கை கொள்ளுவோம். எனவே, இத்திருத்தம் தேவையற்றதென்றே கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(திருத்தங்கள் அனைத்தும் தள்ளுபடி செய்யப்பட்டன. விதி 69 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)*

★ ★ ★

## விதி 71

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** 'நாடாளுமன்றம் கூட்டப்படுவதற்கான காரணங்கள்' என்ற தொடரில் தேவையான கருத்து முழுமையாக அடங்கியுள்ளதென எண்ணுகிறேன். பேராசிரியர் கே.டி.ஷாவோ, அவை வெளிப்படையாக எடுத்துரைக்கப்பட வேண்டுமெனக் கூறுகிறார். பேராசிரியர் ஷா சேர்க்க விரும்பும்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே 18, 1949, பக் 104 - 07.

அனைத்துக் கூறுகளையும் உள்ளடுக்குமளவுக்கு இத்தொடர் விரிவாகவே உள்ளதென்று கருதுகிறேன். ''பாராளுமன்றத்தில் உரையாற்றி, அது கூட்டப்பட்டதற்கான காரணங்களைத் தெரிவிக்க வேண்டும்'' என்ற தொடர் பிரிட்டானிய பாராளுமன்ற நடைமுறையில் காணப்படுகிறது. காம்பியரின் காமன்ஸ் சபையின் நடைமுறை விதிகள் என்ற நூலை பேராசிரியர் ஷா நோக்குவாரெனில், இத்தொடர் மிகுந்த தேடல் முயற்சிகளுக்குப் பின்னர் கிடைக்கப் பெற்றதென அறிந்துகொள்ளவியலும். நாம் காம்பியனிடமிருந்து இத்தொடரை எடுத்தாளவியலும் நல்வாய்ப்பு பெற்றுள்ளோம். பேராசிரியர் ஷா சேர்க்க விழையும் கருத்துக்கள் அனைத்தும் அடங்கியுள்ளன. இந்த நல்ல தொடரில் இதனை அப்படியே இருத்திக் கொள்ளல் பயன்மிக்கதாகும். குடியரசுத் தலைவர் தாமாகவே நாடாளுமன்றத்திற்குச் செய்தியனுப்பவும் அரசியலமைப்புச் சட்டத்தில் இடமிருக்க வேண்டுமென்று பேராசிரியர் ஷா விரும்புகிறார். நாம் முன்னதாக நிறைவேற்றிய விதி 70 இலேயே, குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் உரையாற்றவும் நாடாளுமன்றத்தின் பரிசீலனையில் இருக்கும் எந்தவொரு மசோதாமீதும் செய்தியனுப்பவும் தெளிவாக இடமிருக்கிறது. குடியரசுத் தலைவருக்கு, நாடாளுமன்றத்தில் உரையாற்றவும், நாடாளுமன்றத்திற்குச் செய்தி அனுப்புதற்கும் தன்னுரிமை அதிகாரம் அளிப்பது குறித்து விதி 70 இல் தெளிவுறுத்தப்பட்டதற்கு மேல், வேறெதும் தேவையில்லையென்று கருதுகிறேன். எனவே திருத்தத் தீர்மானத்திற்கு அவசியமில்லையென எண்ணுகிறேன்.

*(பேராசிரியர் ஷா முன்மொழிந்திருந்த ஒரேயொரு திருத்தத் தீர்மானத்தை அவை ஏற்கவில்லை; விதி 71 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 72

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, விதி 72 இன் அடிப்படையான நோக்கத்தைப் பேராசிரியர் ஷா அவர்கள் மெய்யாகவே புரிந்து கொள்ளவில்லையென எண்ணுகிறேன். இந்தப் பொருளை நன்கு தெளிவுறுத்துவதற்கு, சில எளிய அடிப்படைக் கருத்துகளைக் கூறித் தொடங்க முனைகிறேன். நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவையும் தன்னாட்சி பெற்றது;

உறுப்பினரல்லாத எவரையும் அவை செயல்பாடுகளில் கலந்து கொள்வதையோ, செயல்பாட்டைத் தொடரும் வாக்கெடுப்பில் பங்குபெறவோ அனுமதிப்பதில்லை. அவை நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவும், வாக்களிக்கவும் உறுப்பினர்களுக்கு மட்டுமே உரிமை யுண்டு. விதிவிலக்குத் தேவைப்படும் மாறுபட்ட சூழல் ஒன்றையும் நாம் எதிர்நோக்குகிறோம். அதாவது நாடாளுமன்றத்தில், கீழவை, மேலவை என இரு அவைகளுமுண்டு. கீழவை உறுப்பினர் ஒருவர் அமைச்சராயிருந்து அவரது பொறுப்பிலிருக்கும் துறை சார்ந்த மசோதா ஒன்றை நாடாளுமன்றத்தில் கொண்டு வரும்போது, அது இரு அவைகளிலுமே நிறைவேறப்படவேண்டுமாதலால், அவர் (மேலவை உறுப்பினர் அல்லரெனினும்) மேலவைக்கு வந்து மசோதாவைத் தாக்கல் செய்துதான் ஆகவேண்டும். அவ்வாறே மேலவை உறுப்பினர் ஒருவர் அமைச்சராயிருப்பின் அவர் துறை யில்கொண்டுவரப்படும் மசோதாவைக் கீழ் அவையில் தாக்கல் செய்ய அங்கு வந்துதான் ஆகவேண்டும். இவ்வாறு, ஓரவையில் உறுப்பினர் அல்லாத ஒருவர் அவ்வவையில் தோன்றி, உரையாற்றி, அவை நிகழ்ச்சிகளில் பங்கெடுத்துக்கொள்ள வழிவகுப்பதற்காகத் தான் அரசியலமைப்புச் சட்டவிதி 72 தேவைப்படுகிறது. அதாவது, ஓரவையின் உறுப்பினரல்லாதவர் எவரும் அவைச்செயல்பாடு களில் கலந்து கொள்ளவோ, வாக்களிக்கவோ கூடாது என்னும் பொது விதிக்கு விலக்களிக்கபதற்காகவே, விதி 72 சேர்க்கப்படு கிறது. கீழவையில் உறுப்பினராக உள்ள அமைச்சர் ஒருவர் தமது துறைசார்ந்த மசோதா ஒன்றுக்கு மேலவையின் ஒப்புதல் பெற வேண்டில், அந்த அவையில் தோன்றி உரையாற்றும் உரிமை அவருக்கு அளிக்கப்பட்டாக வேண்டும். அவ்வாறே மேலவை உறுப் பினரான அமைச்சர் ஒருவருக்குக் கீழவையில் தோன்றி உரை யாற்றும் உரிமை அளிக்கப்பட்டாக வேண்டும். இதற்கு வகை செய்வதே விதி 72. இக்கருத்து அரசுத் தலைமை வழக்கறிஞருக் கும் பொருந்தும். அரசத் தலைமை வழக்கறிஞர் கீழவை உறுப் பினராக இருக்கலாம். மேலவையில் தோன்ற அவருக்கு சட்டபூர்வ உரிமை கிடையாது. அவர் மேலவையில் தோன்றித் தமது கருத்தை உரைக்க அனுமதி வழங்குதற்கும் விதி 72 வகை செய்கிறது. அவ்வாறே அவர் மேலவை உறுப்பினராயிருந்து, கீழவையில் தோன்றி உரையாற்றவும் இவ்விதியின் மூலம் அனுமதி வழங்கப் படுகிறது. இங்கு தரப்படும், விதிவிலக்கான, அனுமதி அவை யின் செயல்பாடுகளில் கலந்து கொள்வதற்கு மட்டுமே; அன்றி வாக்களிக்க உரிமையேதும் தரப்படவில்லை. ஓர் அமைச்சர் தாம்

கொண்டுவரும் மசோதாவுக்கு அவையின் ஒப்புதல் பெற அவர் அந்த அவையில் வாக்களிக்கவேண்டுமென்பது அவசியமில்லை. எனதருமை நண்பர் 'அமைச்சர்' என்ற சொல்லுக்கு பதிலாக 'தேர்ந் தெடுக்கப்பட்ட நபர்' என்ற சொல் பயன்படுத்த வேண்டுமென்று கூறினார். அதில் வேறோர் இடர்ப்பாடு தோன்றும்; ஏனெனில் தேர்ந்தெடுக்கப்படாத நபர் ஒருவர்கூடக் குறிப்பிட்ட காலத்திற்கு அமைச்சராக நியமிக்கப்படுவதற்கு நமது அரசியலமைப்புச் சட்டம் இடமளிக்கிறது. அவ்வாறு நியமிக்கப்பட்ட அமைச்சரும்கூட அவை யின் செயல்பாடுகளில் கலந்து கொள்ள உரிமைபெறவேண்டின் 'நபர்' என்னும் சொல்லைத் தவிர்த்து, 'அமைச்சர்' எனும் சொல்லே இடம்பெற வேண்டும். எனவே, விதியில் 'அமைச்சர்' என்ற சொல் இடம்பெறுதல் தேவையென்பதால், நான் திருத்தத்திற்கு எதிர்ப்பு தெரிவிக்கிறேன்.

*(பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தம் ஏற்கப்படவில்லை. விதி 72 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)*

★ ★ ★

## விதி 73

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே, திரு. நசிருத்தீன் அகமது முன்மொழிந்துள்ள திருத்தமானது பொருளற்றது; இவ்விதி எதற்காகக் கொண்டுவரப் படுகிறது என்பதைப் பற்றிய தவறான கண்ணோட்டத்தின் விளை வாக உருவானது என்று கூறாமலிருக்க முடியவில்லை. புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்படுதலுக்கும், மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுதலுக் கும் இடையிலான தெளிவான வேறுபாட்டை அவர் புரிந்து கொண் டதாகத் தெரியவில்லை. விதி 73 இல் ஒருவர் மீண்டும் தேர்ந் தெடுக்கப்படுதலைப் பற்றி விதி வகுக்க முற்படவில்லை; புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்படுதல் குறித்தே விதி வகுக்க முனைகிறோம். விதி 74 இல் கூறப்படும் சூழல்களின் விளைவாகக் காலியாகும் பதவியை நிரப்ப நடத்தப்படுவது புதியதேர்தல். விதி 74 இல் விளக்கியுள்ள வாறு, பதவியிடம் காலியாவதென்பது, அப்பதவியிலிருக்கும் நபர்,

தகுதியிழப்பது காரணமாகப் பதவியில் இருந்து நீக்கப்படும்போது நிகழ்வது. இப்பதவிக்காக 'ஒரு உறுப்பினர்' தேர்ந்தெடுக்கப்படலாம் என்ற சொற்கள் விதியில் இடம்பெறுமாயின் பதவியிழந்த அதே நபருக்கும் மீண்டும் போட்டியிட வாய்ப்பு கொடுக்கப்பட வேண்டியிருக்கும்; அதனைத் தவிர்ப்பதற்காகவே, 'வேறோர் உறுப்பினர்' என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. எனவே, விதி 73 எழுதப்பட்டிருக்கும் சொல்லாட்சி முற்றிலும் முறையானதாகவே அமைந்துள்ளது. மேலும் ஓர் உறுப்பினர் தமது பதவிக் காலம் முடிவடைவதால், பதவி இழந்து அதன் விளைவாகத் தோன்றும் காலியிடத்துக்கான தேர்தலில் மீண்டும் போட்டியிட விரும்பும் சூழ்நிலையில், அவர் தேர்ந்தெடுக்கப்பட்டால், அவரைப் புதிய உறுப்பினர் என்றே கருத வேண்டுமாதலால், விதி 73 இன் சொல்லாட்சி அவருக்குத் தடையாய் இராது.

(திரு.நசிருதீன் அகமதுவின் திருத்தம் ஏற்கப்படவில்லை; விதி 73 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)

★ ★ ★

## புதிய விதி 75A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, திரு.காமத் சுட்டிக்காட்டிய இடர்ப்பாடுகள் ஏதும் எழ இடமில்லை; விதியில் எவ்விதமான குறைபாடுகளும் இல்லை. சரியான நிலவரத்தை உரைக்க முனைவேன்: (மேலவைத்) தலைவர் குற்றஞ்சாட்டப்பட்டு விசாரிக்கப்படுவாரெனில், நான் பரவலான சொல்லாட்சியையே பயன்படுத்துகிறேன். அவர் அவையில் இருந்தாலும் துணைத்தலைவர்தான் அவைக்குத் தலைமை வகிக்க வேண்டும்; மேலும் துணைத்தலைவர், குற்றஞ்சாட்டப்பட்டு விசாரிக்கப்படும் போது, தலைவர் அவையில் இல்லையெனும் சூழ்நிலையில் விதி 75இன் துணைவிதி (2) பயன்படுத்தப்படும். விதி75 இன் துணை

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே, 19, 1949, பக். 121

விதி (2) கூறுவதாவது: ''மாநிலங்கள் அவையில் அமர்வுகள் எவற்றின் போதாவது தலைவர், துணைத்தலைவர் இருவருமே அவையில் இல்லையெனில், மாநிலங்களவையின் நடைமுறை விதிகள் வகுத்துள்ளவாறு நிர்ணயிக்கப்படும் உறுப்பினர் அவைத் தலைமைப் பொறுப்பையேற்பார்; நடைமுறைவிதிகள் வரையறுக்கும் தகுதி கொண்ட உறுப்பினர் எவரும் இல்லையெனில், மாநிலங்களவையே உறுப்பினர் ஒருவரைத் தற்காலிகத் தலைவராகத் தேர்ந்தெடுத்து அவை நிகழ்ச்சிகளை நடத்தலாம் என்பதே. எனவே, புதிய விதி 75-A இன் காரணமாக இடர்ப்பாடு ஏதும் எழுமெனில், விதி 75, துணைவிதி (2) ஐப் பயன்படுத்தித் தீர்வு காண முடியும்.

**திரு. அவைத் தலைவர்:** திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்துள்ள தீர்மானம் வருமாறு:

''அரசமைப்புச் சட்ட விதி 75 ஐ அடுத்து பின்கண்ட புதிய விதி சேர்க்கப்பட வேண்டும்:

> ''75A. குடியரசுத் துணைத் தலைவரைப் பதவி நீக்கம் செய்வதற்காகக் கூட்டப்படும் மாநிலங்களவைக் கூட்டத்தின், அமர்வுகள் ஏதாவதொன்றில், தலைவரோ, மாநிலங்களவைத் துணைத் தலைவரைப் பதவி நீக்கம் செய்வதற்காக்க் கூட்டப்படும் மாநிலங் களவைக் கூட்டத்தின் அமர்வுகள் ஏதாவதொன்றிலோ, அவைத் துணைத்தலைவரோ, அவை நிகழ்ச்சிகளுக்குத் தலைமையேற்கக் கூடாது. அவ்வாறான அமர்வுகள் ஒவ்வொன்றையும் நடத்துதற்கு, அவைத்தலைவரோ, துணைத்தலைவரோ இல்லாத சூழ்நிலையில் அவை எவ்வாறு நடத்தப்படவேண்டுமென்று முந்தைய விதியின் துணைவிதி (2) இல் வகுத்துள்ளவாறு, அவை நிகழ்ச்சிகள் நடத்தப்பட வேண்டும்.''

புதிய விதியைச் சேர்க்கலாம் எனும் தீர்மானம் வாக்குக்கு விடப்படுகிறது.

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அரசியலமைப்புச் சட்டத்தில் விதி 75 A சேர்க்கப்பட்டது.

## விதி 76

[1]**திரு. அவைத் தலைவர்:** "விதி 76 அரசியலமைப்புச் சட்டத்தின் பகுதியாக அமைகிறது" எனும் தீர்மானம் வாக்குக்கு விடப் படுகிறது.

**திரு. நசிருத்தீன் அகமது:** எனது திருத்தத்தை நான் முறையாகத் தாக்கல் செய்ய விரும்பவில்லை, எனினும் சில கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். இதேபோன்ற திருத்தமொன்றை டாக்டர் அம்பேத்கர் பொருளற்றது என வருணித்தார். ஆனால் எனது திருத்தம் பொருளற்றதன்று எனப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தைப் பற்றி நாம் ஏற்கனவே விவாதித்து விட்டோம். இதேபோன்ற திருத்தம் ஒன்றைத்தான் நமதருமை நண்பர் விதி 73க்கும் தாக்கல் செய்திருந்தார்.

★ ★ ★

## விதி 77

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, எனதருமை நண்பர் திரு.காமத் திருத்தத்தை ஏற்கவியலாதென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். தற்போதைய விதியின் வரைவானது, ஒரு நபர் தமது பதவி விலகல் கடிதத்தைத் தம்மை அப்பதவியில் நியமித்தவருக்குக் கொடுக்க வேண்டும் என்னும் பொதுவான எளிய கோட்பாட்டின் அடிப்படையிலேயே அமைந்துள்ளது. அவைத்தலைவர், அவைத் துணைத்தலைவர் இருவருமே அவையால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள்; அதாவது அவையால் நியமிக்கப்படுபவர்கள். எனவே, அவர்கள் பதவி விலக விரும்பினால், விலகல் கடிதத்தைத் தம்மை நியமித்த அவைக்கே (அவையின் துணைத்தலைவர் அல்லது தலைவருக்கே) எழுத

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே, 19, 1949, பக். 121
2. அதே நூலில் பக். 123

வேண்டும். அவை என்பது உறுப்பினர் தொகுப்பாய் விளங்குவ தாலின் பதவி விலகல் கடிதத்தை அவை உறுப்பினருக்கு எழுத வியலாதென்பதால் அவையின் சார்பில், தலைவர் துணைத்தலைவ ருக்கும், துணைத்தலைவர் தலைவருக்கும் பதவி விலகல் கடிதத்தை எழுதலே முறையாகும். ஆயினும், கொள்கையளவில், பதவி விலகல் கடிதம் நியமிக்கும் அவைக்கு எழுத்தப்பட்டதாகவே கொள்ள வேண்டும். அவை என்பது தன்னுரிமை கொண்ட, குடியரசுத் தலைவரின் அதிகார வரம்பிற்கு உட்படாத அமைப்பாதலின், அவையின் நியமனங்களில் குடியரசுத் தலைவருக்கு எவ்விதத் தொடர்புமில்லையாதலாலும், அவைத் தலைவரோ, துணைத் தலைவரோ தமது பதவி விலகல் கடிதத்தைக் குடியரசுத் தலைவ ருக்கு அனுப்ப வேண்டுமென்பது பொருத்தமற்றது. இதன் வாயிலாக, அவையின் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவரின் அதிகாரத்திற்கோ, அரசாங்க நிர்வாகத்திற்கோ கட்டுப்படாத தன் னுரிமை அதிகாரமாக நிலைநாட்டுகிறோம்.

**திரு. எச்.வி. காமத்:** மத்திய சட்டமன்றப் பேரவையின் தலைவர் விஷயத்தில் இன்றைய நடைமுறை என்னவென்பதை டாக்டர் அம்பேத்கர் தகவலாக நமக்களிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இன்றைய நிலைமை மிகவும் மாறுபட்டதுதான். திரு. காமத் இன்றைய நிலை யைப் பற்றி அறிந்து கொள்ள விரும்புகிறாரா? அல்லது, தாம் உருவாக்க விரும்பும் நிலையைப் பற்றி வினவுகிறாரா? இந்திய அரசுச் சட்டத்தின் (1935) கீழ் பேரவை, அவைத்தலைவர் எல்லாம் கவர்னர் ஜெனரலால் உருவானவை யாதலின் அவைத் தலைவர் தமது பதவி விலகலை கவர்னர்-ஜெனரலுக்கு அனுப்ப வேண்டு மென்ற நடைமுறை நிலவி வருகிறது. இத்தகைய நிலைமையே தொடர்ந்து நீடிப்பதை நாம் விரும்பவில்லை. அவைக்கு எந்த அள வுக்குத் தன்னுரிமை அளிக்கவியலுமோ அந்த அளவு, அரசு நிர் வாகத்தின் அதிகாரத்திற்குட்படாது, வழங்க விரும்புகிறோம்.

**திரு. எச்.வி. காமத்:** இந்திய அரசுச் சட்டத்தின் கீழும்கூட, அவைத்தலைவர், பேரவையால்தானே தேர்ந்தெடுக்கப்படுகிறார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது தவறான எண்ணம். அவைத் தலைவரைப் பேரவைதான் தேர்ந்தெடுக்கிறது

என்றாலும், அவரது தேர்தல் கவர்னர்-ஜெனரலின் ஒப்பிசைவைப் பெற்றாக வேண்டுகிறேன்.

**திரு. எச்.வி.காமத்:** ஆயின், எனது திருத்தத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள இறைஞ்சுகிறேன்.

அவையின் அனுமதியுடன் திருத்தம் விலக்கிக் கொள்ளப் பட்டது.

★ ★ ★

## புதிய விதி 79 A

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, டாக்டர் அம்பேத்கர், திரு.ஞான்ஷயாம் சிங்குப்தா ஆகியோர் முன்னறிவிப்புக் கொடுத்துள்ள, விதி 79 A எடுத்துக்கொள்ளப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 79A ஐத் தள்ளிப் போடலாம் என்று கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** விதி 79 A தள்ளிப்போடப்படுகிறது.

★ ★ ★

## விதி 80

[2]**திரு. அவைத் தலைவர்:** எனக்கு நினைவிருக்கிறது; எனவே திரும்பக் கூற வேண்டியதில்லை. அந்தத் திருத்தம் தாக்கல் செய்யப் படவில்லையென்றே நாம் கொள்ளலாம். இப்போது விதி80க்குச் செல்வோம். 'விதி 80 அரசியலமைப்புச்சட்டத்தின் பகுதியாகச் சேர்க்கப்படுகிறது' எனும் தீர்மானம் வாக்களிப்புக்கு விடப்படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே, 19, 1949, பக். 126
2. அதே நூல் அதே பக்கம்.

'விதி 80 இன் துணைவிதி(1) இல் 'இவ்வரசியலமைப்புச் சட்டத்தில் வகுக்கப்பட்டுள்ளதைத் தவிர்த்து' என்ற தொடருக்கு பதிலாக, 'மாற்றாக இவ்வரசியலமைப்புச் சட்டத்தில் வகுக்கப்பட்டுள்ளதைத் தவிர்த்து' என்னும் தொடர் இடம்பெறலாம்'' என முன்மொழிகிறேன்.

இது கவனக் குறைவால் நிகழ்ந்த பிழை; சரியாகத் திருத்தப் பட வேண்டியுள்ளது.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** திரு.காமத் முன்மொழிய விரும்பும் திருத்தத்தை முற்றிலும் ஒத்த திருத்தமொன்றை விதி 68 A என இந்த அவை முன்னரே நிறைவேற்றியுள்ளது என்பதைச் சுட்ட விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதே கருத்தை உள் ளடக்கிய விதி 68-Aஐ நேற்று நாம் நிறைவேற்றியுள்ளோம்.

**அவைத் தலைவர்:** அவர் எடுத்துக் கொண்டிருப்பது திருத்தம் 1538 -ம், திருத்தம் 1541 இன் முதற்பகுதியும்தான்.

**திரு. டி.டி. கிருஷ்ணாமாச்சாரி:** வருந்துகிறேன்:

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** திரு. காமத் தமது திருத்தங்களைத் தனித்தனியே முன்மொழியலாமெனக் கருது கிறேன். ஏனெனில், நாங்கள் ஒரு திருத்தத்தை ஆதரிக்கிறோம்; மற்றொன்றை எதிர்க்கிறோம்.

**திரு. எச்.வி. காமத்:** திருத்தங்கள் 1538, 1541 இரண்டும் ஒருசேர எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். இல்லையெனில் திருத்தம் முழுமை பெறாது. எனது திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப் பட்டால், விதியின் வாசகம் பின்வருமாறு அமையும்

''இவ்வரசியலமைப்புச் சட்டத்தில் மாற்றாக வகுக்கப்பட்டுள்ளதைத் தவிர்த்து, எல்லாப் பிரச்சினைகளும், அவைகளின் தனித்தனி அமர்வு களாயினும், கூட்டு அமர்வுகளாயினும், அவையில் குழுமியிருக்கும் உறுப்பினர்களுக்கிடையே கீழவைத் தலைவரோ, மேலவைத் தலைவரோ வாக்கெடுப்பு நடத்திப் பெரும்பான்மை வாக்குகளின்படியே முடிவு எடுக்கப்படும்.''

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. காமத்தின் திருத்தத்தை ஏற்கவியலாமைக்கு வருந்துகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** நான் தனித்தனியே மூன்று திருத்தங் களை முன்மொழிந்துள்ளேன். எந்தத் திருத்தம் ஏற்கப்படவில்லை யென அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் தற்போது முன் மொழிந்த திருத்தத்தை ஏற்க இயலவில்லை. அவைக் குறிப் பில் தொகுப்பாக ஒரு திருத்தத்தையே காணமுடிகிறது. அவர் திருத்தத்தின் வெவ்வேறு பகுதிகளைப் பற்றித் தனித்தனியே பேசியிருக்கலாம். ஆனால் திருத்தம் என்னவோ ஒன்றேயொன்று தான்.

**திரு. எச்.வி.காமத்:** ஐயா, நான் மூன்றையும் தனித்தனியே அனுப்பியுள்ளேன். அவற்றைப் பற்றித் தனித்தனியே பேசியும் உள்ளேன். மீண்டும் அவற்றைக் குறிப்பிட்டுச் சுட்ட விரும்புகிறேன். முதலாவது, 'எந்தவொரு அமர்விலும்' என்ற தொடருக்கு முன்ன தாக, 'எந்தவொரு அவையின்' என்ற தொடர் சேர்க்கப்பட வேண்டுமென்பது; இரண்டாவது, 'மேலவைத்தலைவர், கீழவைத் தலைவர் அல்லது தற்காலிகத் தலைமையேற்றிருக்கும் நபர்' என்ற தொடர் நீக்கப்படவேண்டுமென்பது; மூன்றாவது, இரண்டாம் பத்தியில் 'இருக்கும் எனில்' என்ற தொடர் சேர்க்கப்பட வேண்டு மென்பது. இம்மூன்றில் எதனை மாண்புமிகு உறுப்பினர் ஏற்றுக் கொள்ளவில்லை? ஒன்றையா, இரண்டையா அல்லது மூன்றை யுமேயா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் குறிப் பிடுவது மதிப்பிற்குரிய உறுப்பினரின் திருத்தம் எண் 1538 ஐப் பற்றியே. அலுவல் ஆவணம் என்ற வகையில் அஃதொரு ஒற்றை ஆவணமாகவே எனக்குப்படுகிறது.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே, 19, 1949, பக். 128-29

**திரு. எச்.வி. காமத்:** தலைவர் அவர்களே, நான் அவற்றைத் தனித்தனியாக முன்மொழிவதற்குத் தங்கள் அனுமதியைக் கோரியுள்ளேன்.

**திரு. அவைத் தலைவர்:** திரு.காமத் மூன்று திருத்தங்களைத் தனித்தனியே முன்மொழிந்துள்ளார். எனினும் அவற்றை ஒட்டு மொத்தமாகவும் கருதலாம். அவரது திருத்தங்கள் சேர்க்கப்பட்டால், விதியின் வாசகம் பின்வருமாறு அமையும்:

'எந்தவொரு அவையின், எந்தவொரு அமர்விலோ, கூட்டுக் கூட்டத்தின் அமர்விலோ, அரசியலமைப்புச் சட்டத்தில் விதிக்கப்பட்டுள்ளவை தவிரப் பிற சிக்கல்கள் அனைத்தும்..........''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தொகுக்கப்பட்டுள்ள திருத்தங்களின் பட்டியல்படி, திருத்தம் எண் 87ஐ ஏற்றுக் கொள்ள இயலுமெனக் கருதுகிறேன்.

(விதி 80, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெறுகிறது).

★ ★ ★

## விதி 81

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

''விதி 81 இல், 'சாற்றுமொழி' என்ற சொல்லுக்கு மாற்றாக, 'ஒப்புறுதி, அல்லது உறுதிமொழி' என்ற சொல் இடம்பெறலாம்''
என முன்மொழிகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** தலைவர் அவர்களே, சற்றுமுன்னர் எனதருமை நண்பர் டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தம்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே 19, 1949, பக் 130 - 132

*1554 குறித்து எனது ஐயங்கள் சிலவற்றைத் தெளிவுபடுத்திக் கொள்வதற்காகவே, இங்கு போந்தேன். அவர் 'சாற்றுமொழி' என்ற சொல்லுக்கு மாற்றாக, 'ஒப்புறுதி அல்லது உறுதிமொழி' எனும் தொடரை பயன்படுத்தலாமென முன்மொழிந்துள்ளார். குடியரசுத் தலைவரோ குடியரசுத் தலைவரின் பொறுப்புகளைத் தற்காலிக மாக ஏற்கும் நபரோ, பதவியேற்கு முன்பாக ஒப்புறுதி அல்லது உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூறும் விதி 49ஐ இவ்வவையில்தான் முன்னர் நிறைவேற்றினோம். அவ்வமயம் குடியரசு தலைவரோ குடியரசுத் தலைவரின் பொறுப்புகளைத் தற்காலிகமாக ஏற்கவிருக்கும் நபரோ பதவியேற்கு முன் எடுத்துக் கொள்ள வேண்டிய 'ஒப்புறுதி' அல்லது உறுதிமொழியின் வடி வமும் பின் வருமாறு திருத்தப்பட்டிருந்தது.*

*''அ, இ ஆகிய நான், கடவுளின் பெயரால் உறுதிமொழி யெடுத்துக்கொள்கிறேன்.....''*

*அல்லது*

*''அ, இ ஆகிய நான், உளமாற உறுதிமொழி எடுத்துக் கொள்கிறேன்.......''*

*விதி81 இன் கீழ் எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய உறுதி மொழியும் அரசியலமைப்புச் சட்ட விதி 49 இல் நிறைவேற்றப் பட்ட உறுதிமொழியின் வடிவில்தான் அமையுமாவென்பதை, எனதருமை நண்பர் டாக்டர் அம்பேத்கரும், இவ்வவையும் உறுதி செய்யுமாறு வேண்டுகிறேன்.*

***திரு. அவைத்தலைவர்:*** *இத் துணை விதியைப் பயன்படுத்தப் படும் சொல்லாட்சிக்கு ஒத்திசைவாக, இணைப்புப் பட்டியலும் திருத்தப்படுமென எடுத்துக் கொள்கிறேன்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, என தருமை நண்பர் பேராசிரியர் ஷாவின் திருத்தத்தை ஏற்கவியலாது எனக்கூற வருந்துகிறேன். மெய்யாகவே, பேராசிரியர் ஷா ஒரு வேட் பாளர் தேர்ந்தெடுக்கப்படுவதிலிருந்து அவை உறுப்பினராகும் வரையான நிகழ்ச்சிகளின் தொடரைத் தவறாகப் புரிந்து கொண் டுள்ளார்.*

*பேராசிரியர் ஷா விதி 81 ஐ நோக்குவதோடு 'உறுப்பினர் கள் தகுதியிழப்பு' என்று தலைப்பையும் நோக்குவாரெனில், ஒரு*

வேட்பாளர், நாடாளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டதனால் மட்டுமே அவையின் உறுப்பினராகி விடமுடியாது என்பதை எளிதில் உணர்ந்து கொள்வார். முறையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நபர் ஒருவர் நாடாளுமன்ற அவையின் உறுப்பினராக ஆவதற்கு முன்னால், சில மரபுவழிச் சடங்குகள் நிகழப் பெற வேண்டும். அவற்றுள் ஒன்றுதான் அவர் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது. நாடாளுமன்ற அவையில் உறுப்பினராக அமர்வதற்கு முன்பாக அவர் உறுதிமொழி எடுத்து கொள்வது அவசியம். அவ்வாறு உறுதிமொழி எடுத்துக் கொள்ளும் வரை அவர் நாடாளுமன்ற அவையில் உறுப்பினராக மாட்டார்; அவையில் சென்று அமரவும் அவருக்கு உரிமை கிடையாது என்பதே தெளிவான நிலைமை. வேட்பாளர்கள் உறுதிமொழி எடுத்துக் கொண்டு அவையின் உறுப்பினர் எனும் தகுதியைப் பெறாத வரையில் அவைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையையும் அவர்கள் பெறவியலாது. எனவே, அவைத்தலைவர் தேர்தலுக்கு முன்னதாகவே, உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

இந்த அடிப்படையில் நோக்கினால், உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக்கொண்ட பின்னர்தான் அவைத் தலைவரையே தேர்ந்தெடுக்க இயலுமாதலால், உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக்கொள்ளும் தருணத்தில் அவைத் தலைவரென எவரும் இருக்க மாட்டார். எனவே, உறுப்பினர்கள் அவைத்தலைவரின் முன்னிலையில் உறுதிமொழி எடுத்துக் கொள்வதென்பது இயலாத நிகழ்வு. ஆதலால், உறுப்பினர்களுக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்க அவைத் தலைவர் அல்லாத நபர் ஒருவர் தேவைப்படுவார்; நிலைமை இவ்வாறிருப்பதால், உறுப்பினர்களுக்குப் பதவிப் பிராமணம் செய்துவைக்கும் பொறுப்பை யாரிடம் ஒப்புவிக்கலாம் எனும் வினா எழுகிறது. இதனைக் குடியரசுத் தலைவரோ, குடியரசுத் தலைவரின் சார்பாளராக அவர் நியமிக்கும் ஒருவரோதான் ஏற்க முடியும். இந்தக்கட்டத்தில் அவைத்தலைவர் என ஒருவர் இருக்க மாட்டாராதலின், அவைத்தலைவரிடம் இப்பொறுப்பை ஒப்படைக்கும் பேச்சுக்கே இடமில்லை.

அவைத்தலைவர் எழுப்பியுள்ள சிக்கலுக்கு இப்போது வருகிறேன். இடைத்தேர்தலில் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர் ஒருவர்

எவ்வாறு உறுதிமொழி எடுப்பது? அவரும் குடியரசுத் தலைவரிடம் தான் போக வேண்டுமா? அல்லது அவர் அவைத் தலைவரிடம் உறுதிமொழி எடுத்துக் கொள்ளலாமா? இவ்வாறு வினவப்படு கிறது. இதற்கான விடை அரிதல்ல. அவைத் தலைவர் தேர்ந்தெடுக்கப் பட்டவுடனேயே, குடியரசுத் தலைவரின் சார்பில் இப்பொறுப் பினை அவர்பால் குடியரசுத் தலைவர் ஒப்படைத்து விடுவா ராதலின், அவைத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர் எவரும் உறுதிமொழி எடுத்துக் கொள்வதற்காகக் குடியரசுத் தலைவரிடம் செல்ல வேண்டியதில்லை. அவர் இதற்கென வேறுயாரையும் நியமிக்க வேண்டியதும் இல்லை.

இந்நிகழ்ச்சிகளின் தொடர் வரிசையை நன்கு புரிந்து கொண் டால், அதனோடு பொருந்தும் வகையில் விதி 81 உருவாக்கப்பட் டுள்ளதென்பது தெளிவு. பார்க்கப்போனால், இன்றையநிலையில் கூட இதே நடைமுறைதான் பின்பற்றப்படுகிறதென்பதை உணர லாம். அவை முதன்முதலாகக் கூடும்போது, அவைக்குத்தலைமை வகிப்பதற்கு ஒருவரைக் குடியரசுத் தலைவர் (அல்லது கவர்னர் ஜெனரல்) நியமிக்கிறார். இதன்பேரில் தொடர்ந்து உறுப்பினர் ஒவ்வொருவரும் உறுதிமொழி எடுத்துக் கொள்கின்றனர், உறுதி மொழிகள் முடிந்தவுடன், தற்காலிகத் தலைவரே அவைத்தலைவர் தேர்தலையும் நடத்தி, அவைத்தலைவரிடம் பொறுப்புகள் அனைத் தையும் ஒப்படைத்துவிட்டுத் தமது தற்காலிகத் தலைமைப் பதவி யையும் துறந்து விடுவார். எனவே, தேர்ந்தெடுக்கப்பட்ட அவைத் தலைவர், குடியரசுத் தலைவரின் சார்பாளர் என்ற நிலையில், அடுத்துப் புதிதாய் வரும் உறுப்பினர்களுக்கு உறுதிமொழி எடுக்கச் செய்யும் பணியை மேற்கொள்வார். எனவே, நான் குறிப்பிட்ட வாறு, நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகளின் வரிசை முறைமையை நோக்கும்போது, அவைத் தலைவர் குடியரசுத்தலைவரது சார்பதி காரம் பெறுவதால், புதிய உறுப்பினர்களும் கூட உறுதிமொழி எடுத்துக் கொள்வதற்காகக் குடியரசுத் தலைவரை அணுகுதல் தவிர்க்கப்படுகிறது.

**திரு. அவைத் தலைவர்:** அவைத் தலைவர், உறுப்பினர் களுக்கு உறுதிமொழியேற்கச் செய்யும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவரிடம் இருந்துதான் பெறவேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியலமைப்புச் சட்டத் தின்படி அதுவே முறையானதாகும். 'உறுதிமொழி. எடுத்தல் என்பது அவையை நிறுவும் செயல்பாட்டின் ஒரு பகுதியேயாகும்; அவையை நிறுவும் செயல்பாட்டில் அவைத் தலைவருக்கு எவ்வித அதிகாரமும் இருப்பதற்கில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அவையினை நிறுவும் கட்டத்தைப் பற்றி நான் கருதவில்லை. அவை நிறுவப்பட்டு அவைத்தலைவரும் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பொறுப்பேற்றுள்ள நிலையைப் பற்றியே கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவையை நிறுவுதல், (அவையின் காலியிடங்களை) நிரப்புதல், அவைச் செயல் முறையில் சட்டவடிவம் ஆகிய யாவும் அவைத் தலைவரது அதிகார வரம்பிற்கு அப்பாற்றபட்டவையென்பதால், அவைத் தலைவர், உறுதிமொழியேற்பிக்கும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவரிடமிருந்து பெறுவதில் தாழ்ச்சியேதும் இல்லையென்றே கருதுகிறேன். நாடாளுமன்றம் நிறுவப்பட்ட பின்புதான் அவைத் தலைவர் அதன் செயல்பாடுகளுக்குப் பொறுப்பேற்று நடத்துகிறார்; ஆனால் நாடாளுமன்றமோ உறுப்பினர்கள் உறுதிமொழி எடுத்துக் கொண்ட பின்னர்தான் நிறுவப்படுகிறது. எனவே, நாடாளுமன்றத்தை நிறுவுதலின் பிரிக்கவியலாத பகுதியே உறுப்பினர்களை உறுதிமொழியேற்கச் செய்தல் என்பதால் அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி அந்த அதிகாரம் அவைத்தலைவருக்கு இல்லை; இருக்க வேண்டிய அவசியமும் கிடையாது.

**திரு. அவைத் தலைவர்:** பிந்தைய காலகட்டத்தில், புதிதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒருவர் உறுதிமொழி எடுத்துக் கொள்ளவரும்போது, அவைத்தலைவர் அவையில் இல்லாதிருந்து, அவைத்தலைவரோ, பிறிதொருவரோ அவையின் தலைமைப் பொறுப்பையேற்று நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருக்கும் நிலை தோன்றுவதாய்க் கருதுவோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குடியரசுத் தலைவரிடமிருந்து பெறப்படும் அதிகாரம், அவைத்தலைவருக்கு

மட்டுமே யன்று; அவைத் துணைத்தலைவருக்கும், அவையின் தலைமைப் பொறுப்புக்கான பட்டியலிலுள்ள உறுப்பினர்களில் அந்தச்சமயத்தில் யார் அவைக்குத் தலைமையேற்கிறாரோ அவருக்கும் அந்த அதிகாரம் கிடைக்கிறது என்பதுதான் பொருள்.

***திரு. அவைத்தலைவர்:*** *தமக்குக் குடியரசுத்தலைவரால் கொடுக்கப்படும் அதிகாரத்தைச் சார்ந்துதான் அவைத்தலைவர் செயல்பட வேண்டுமா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அரசியல் அமைப்புச் சட்டத்தால் உருவாக்கப்படும் பொறுப்பான தலைவர்கள் அனைவரின் நல்லெண்ணத்தையும் சார்ந்துதான் நாம் செயல்பட வேண்டும்.

*(மேலே விளக்கப்பட்டவாறு, அம்பேத்கர் முன்மொழிந்த திருத்தம் ஏற்கப்பட்டு, விதி 81 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)*

## விதி 82

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தலைவர் அவர்களே, பின்வரும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்:

"விதி 82 இன் பிரிவு (1)க்குப் பின்னர்,

"1(a) அரசியலமைப்புச் சட்டத்தின் முதல் இணைப்புப் பட்டியலின் பகுதி I, பகுதி III ஆகியவற்றுள் வரையறுக்கப் பட்டுள்ள காலவரம்பில், எந்தவொரு நபரும் பாராளுமன்றத் திலும், மாநிலச் சட்டமன்றப் பேரவையிலும் ஒரே காலத்தில் உறுப்பினராக இருத்தல் கூடாது. எவரேனுமொருவர், நாடாளுமன்றத்திற்கும், சட்டமன்றத்திற்கும் ஒரே சமயத்தில் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் வரையறுக்கப்பட்ட காலவரம்பில், அவர் தமது சட்டமன்ற உறுப்பினர் பதவியைத் துறந்தாலன்றி நாடாளுமன்ற உறுப்பினராகப் பதவி யேற்க இயலாது என்ற பிரிவு புதிதாய் சேர்க்கப்படலாம்."

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே 19, பக். 133.

ஐயா, இது ஒரு சாதாரண விதியே; இதுகுறித்து விளக்கக் குறிப்புகள் ஏதும் தேவையில்லை.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. நசிருத்தீன் அகமது, திரு. காமத் ஆகியோரின் திருத்தங்கள் எதையும் ஏற்பதற் கில்லை.

**திரு. அவைத்தலைவர்:** இப்போது திருத்தங்களை ஒவ்வொன் றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் மட்டுமே ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தத்துடன் விதி 82 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)*

## விதி 83

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> "விதி 83, பிரிவு(1) துணைப்பிரிவு (d)க்குப் பதிலாக,
>
> "(d) அவர் இந்தியக் குடிமகன் எனும் நிலையை இழந்திருந்தாலோ, தன்னிச்சையாகப் பிற நாடொன்றின் குடியுரிமை யைப் பெற்றிருந்தாலோ, வேறொரு நாட்டின் பற்றாளராகத் தம்மை அறிவித்துக்கொண்டிருந்தாலோ, எனும் பகுதியைச் சேர்க்கலாம்.''

★ ★ ★

[3]**திரு. அவைத் தலைவர்:** வரைவுக்குழு ஒரு கருத்தைப் பரிசீலனை செய்யவேண்டுமென்று விரும்புகிறேன். இவ்விதியின் பிரிவு (2) ஐ நோக்கினால், அங்கு மேலவைத் தலைவர், துணைத் தலைவர், மக்களவைத் தலைவர், மக்களவைத் துணைத்தலைவர் போன்ற சொற்கள் இடம்பெறவில்லை. அவர்களும் ஆதாயம் பெறும் பதவிகளில் இருப்பவர்களே. மேலும் அவர்கள் சம்பளம் வாங்கும் அலுவலர்களே.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 19, பக்கம் 136.
2. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 19, பக். 138.
3. அதே நூல் 141.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்கள் அரசாங்கத்தின் கீழ்ப் பணிபுரிவர்களல்லர். எனவே, அவர்கள் இவ்விதியின் கீழ் வருவதற்கில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அவ்வாறாயின் சரி.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இன்னும் யாராவது பேச விரும்பு கிறீர்களா? டாக்டர் அம்பேத்கார் ஏதாவது கூறவேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாண்புமிகு திரு.ஜி.எஸ். குப்தா பெயரிலுள்ள திருத்தம் 1587 தவிர வேறெந்த திருத்தத்தையும் நான் ஏற்கவில்லை.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்கப்பட்டது)

★ ★ ★

[2]**திரு. அவைத்தலைவர்:** மேலும், 1585 ஆம் எண்கொண்ட, திரு.காமத்தின் திருத்தமும் உளது. ஆனால் டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தை ஏற்றுக்கொண்டதன் பின்னர் அத்திருத்தத்திற்குத் தேவையிலாது போயிற்று.

அடுத்து திரு.குப்தாவின் திருத்தம் 1587 உளது. அது 'உம்' (and) எனும் சொல் நீக்கப்படவேண்டுமென முன்மொழிகிறது. அச்சொல்லை நீக்கிவிட்டால் மட்டும் போதுமா? அந்த இடத்தில் 'அல்லது' எனும் சொல் இடம்பெற வேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'உம்' எனும் சொல்லை நீக்கினாலே போதும். அதன் இடத்தில் 'அல்லது' எனும் சொல்லைப் போட்டாலும் போடாவிட்டாலும் பொருளில் மாற்றமிருக்காது.

**திரு. அவைத் தலைவர்:**

'விதி 83 பிரிவு(1), துணைப் பிரிவு (D) இன் இறுதியில் இடம் பெறும் 'உம் (and) எனும் சொல் நீக்கப்படலாம்''

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 19, பக். 142.
2. அதே நூலில் பக். 143.

திருத்தம் ஏற்கப்பட்டது.

*(விதி 83ல், திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)*

★ ★ ★

## விதி 85

[1]**திரு. அவைத் தலைவர்:** எந்தத் திருத்தத்துடனும் தொடர் பில்லாத பொருள் ஒன்றைப்பற்றிச் சுவையானதொரு விவாதத் தினை நடத்தி முடித்துள்ளோம். பண்டித மைத்ரா பேசிய துணை விதியைத் திருத்துதற்கோ, மாற்றுதற்கோ தீர்மானம் ஏதும் முன் மொழியப்படவில்லை. அவரது கருத்தையொட்டிய திருத்தத் தீர்மானம் எதுவும் கிடையாது.

தற்போது வாக்கெடுப்புக்கு வருகிறேன். டாக்டர் அம்பேத்கர் ஏதேனும் கூற விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.காமத் தமது உரைக்கு நான் பதிலளிக்க வேண்டுமென்று விரும்பினாலன்றி நானாக ஏதும் கூறுதற்கில்லை. திரு. அல்லாடியும் ஏனையோரும் அவருக்கு ஏற்கனவே பதிலளித்துவிட்டனர். நானும் அவர்கள் கூறியதையேதான், வேறு சொற்களில் கூற வேண்டியிருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து வருவது, திரு.ஜஸ்பத்ராய் கபூர் முன்மொழிந்துள்ள 1627 ஆம் திருத்தம். டாக்டர் அம்பேத்கர் அதனை ஏற்க இசைகிறாரா என அறிய விரும்புகிறேன்.

> 'விதி 85, பிரிவு(4) இல் 'நாடாளுமன்றத்தின் அவை ஒன்றில்' என்ற சொற்களைத் தொடர்ந்து, 'அல்லது குழு எவற்றிலேனும் எனும் சொற்கள் ஏற்கப்படலாம்' எனும் தீர்மானம் வாக்குக்கு விடப்படுகிறது.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 17, பக் 155-56

தீர்மானம் ஏற்கப்பட்டது.

(விதி 85, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)

## விதி 86

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): அருமை நண்பர் லாரி முன்மொழியும் திருத்தத்தை ஏற்கவியாலமைக்கு வருந்துகிறேன். திருத்தத்திற்கு எதிராகத் திரு.அனந்த சயனம் ஐயங்கார், திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி ஆகிய இருவரும் பேசிய கருத்துக்களை நான் அப்படியே முழுமையாக ஒப்புக்கொள்கிறேன். எனவே, திருத்தம் முன்மொழிந்தவரின் வாதங்களுக்கு நான் விரிவாகப் பதில் அளிக்க வேண்டியதில்லை. அவ்விருவரின் பதிலுரையும் முழு நிறைவாயிருக்கக் காண்கிறேனாதலால், அவையின் நேரத்தை மேலும் வீணடிக்க விரும்பவில்லை.

எனினும், 'இந்திய டொமினியனின் சட்டமன்றப் பேரவை' எனும் தொடருக்குப் பதிலாக 'அரசியல் நிர்ணயசபை' எனும் தொடரைப் பயன்படுத்தலாம்'' எனும் சந்தானம் சமர்ப்பித்துள்ள திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

(திரு. சந்தானத்தின் திருத்தத்தைத் தவிர ஏனைய திருத்தங்கள் தள்ளுபடி செய்யப்பட்டன. திருத்தத்துடன், விதி 86, அரசிய லமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது).

## விதி 88

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:**

'விதி 88, பிரிவு (2) இல், 'இரு அவைகளும்' என்ற தொடருக்கு மாற்றாக, 'அப்பிரிவின், துணைப் பிரிவு (C)யில் குறிப்பிடப்பட்டுள்ள அவை' எனும் தொடர் இடம்பெறலாம்.

---

1. அரசியல் நிர்ணய சபை, தொகுதி VIII, மே 20, 1949, பக் 172.

2. அதே நூல் 178.

மேற்கண்ட தீர்மானத்தை முன்மொழிகிறேன். துணைப் பிரிவு (C) யில் கூறப்படும் 'அவை' என்பதை நன்கு தெளிவுறுத்துவதற்காகவே, இத்தீர்மானம் கொண்டுவரப்படுகிறது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 1651. அது பரிசீலிக்கப் பட்டு விட்டது என நினைக்கிறேன்.

(திருத்தம் 1652 தாக்கல் செய்யப்படவில்லை)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்வரும் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

'விதி 88 இன் பிரிவு (2) இல் 'நாட்கள்' எனும் சொல்லுக்கு முன்பாக, 'அடுத்துத் தொடரும்' எனும் சொல் சேர்க்கப்படலாம்''

(திருத்தம் 1654 தாக்கல் செய்யப்படவில்லை.)

**திரு. கே. சந்தானம்:** தலைவர் அவர்களே,

(''விதி 88 இன் பிரிவு 4) இல், 'மொத்த எண்ணிக்கையில்' என்ற தொடர் நீக்கப்படலாம்'' என முன்மொழிகிறேன்.

ஐயா, இந்த ஏற்பாடு முழுமையாக நீக்கப்பட வேண்டுமென நான் விரும்பவில்லை; திருத்தத்தை அந்த வரம்புவரை திருத்த மட்டுமே விரும்புகிறேன்....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது மாண்புமிகு நண்பர் இப்பொறுப்பை வரைவுக்குழுவின்பால் விட ஒப்புவாராயின் மிக நன்றி பாராட்டுவேன்.

**திரு. கே. சந்தானம்:** இதை ஒப்புக்கொள்கிறேன்.

★ ★ ★

# விதி 88

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தலைவர் அவர்களே, அருமை நண்பர் காமத் முன்மொழிந்துள்ள திருத்தம் ஒன்றுக்கு மட்டுமே நான் பதிலளிக்க வேண்டும். அவர், திருத்தம் எண் 1656 வாயிலாக, 'இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் நோக் கங்களுக்காக' எனும் சொற்கள் நீக்கப்படவேண்டுமெனக் கோரு கிறார். இச்சொற்கள் மிக இன்றிமையாதவை இடம்பெற வேண்டி யவை எனப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். நான் இவ்வாறு கூறுவதற்கான காரணத்தை விதி 87இன் பிரிவு (2) இலும் விதி 91 இலும் காணமுடியும். இத விதி 87ன் பிரிவு (2) இன்படி, மசோதா ஒவ்வொன்றும், நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு அவை யாலும், அவற்றின் உறுப்பினர்களால் தனித்தனி அமர்வுகளில் நிறை வேற்றப்பட வேண்டும். இவ்வாறு நிகழ்ந்த பின்னர், அரசிய லமைப்புச் சட்ட விதி 91 இன்படி, மசோதா குடியரசுத் தலைவரின் ஒப்பிசைவுக்காக அனுப்பி வைக்கப்பட வேண்டும். விதி 88 கூறும் நடைமுறை, விதி87 இன் பிரிவு (2) இன் நடைமுறைக்கு மாறுபட்டது என்பதை நண்பர் காமத் உணரவேண்டும். எனவேதான் இவ்விதி யின்படி நாடாளுமன்ற அவைகளின் கூட்டமர்வில் நிறைவேற்றப் படும் மசோதாவும், விதி87 (2) இன் நடைமுறைக்கு மாறானதா யிருப்பினும், குடியரசுத் தலைவரின் ஒப்பிசைவுக்காக அனுப்பப் பட வேண்டியது அவசியமாகிறது. எனவேதான், 'அரசியலமைப்புச் சட்டத்தின் நோக்கங்களுக்காக' என்ற சொற்கள் இடம்பெறல் எவ்வகையிலும் மிகையன்று; அவசியமானவையே எனக் கருது கிறேன்.

விதி 88 வரையறுக்கும் நடைமுறைகுறித்துப் பேசிய உறுப் பினர்கள் பலரும் பலவிதமான அச்சங்களைத் தெரிவித்துக் கருத் துக்களை வெளியிட்டார்கள். எனினும் இஃதொன்றும் புதிது அல்ல; பல்வேறு அரசியலமைப்புச் சட்டங்களில் இடம்பெற்றுள்ள நடை முறைதான் என்பதையும் வேறுபல உறுப்பினர்கள் சுட்டிக்காட்டி னார்கள். எனவேதான், இந்தவிதி (88) இப்போதைய வடிவிலேயே நமது அரசியலமைப்புச் சட்டத்தில் இடம் பெறட்டும். காலப் போக்கில் எவ்வாறு செயல்படுகிறது என்பதை நோக்குவோம்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 20, பக். 188

அவர்களது அச்சங்கள் மெய்யென்று காலம் காட்டினால், நமது அரசியலமைப்புச் சட்டமே அதனைத் திருத்துவதற்கு வகுத்துள்ள நடைமுறையின்படித் திருத்துதற்கு, இப்போதைய (அரசியல் நிர்ணய சபை) உறுப்பினர்கள் எவரேனும் முன்வர வாய்ப்பு உண்டு.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இவ் விதியைப் பற்றி மேலும் கருதிப் பார்க்கும்போது, இதைப் பற்றி மேலும் பரிசீலனை தேவைப்படுகிறதெனக் காண்கிறேன். எனவே, இவ்விதியை இன்று வாக்கெடுப்புக்கு விட வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த விதிக்கு, நான்கு திருத்தங் கள் தாக்கல் செய்யப்பட்டுள்ளன. முதலாவதாக, திருத்தம் 1669, விதி 90 இன் பிரிவு(1) இல் 'மட்டும்' என்ற சொல் நீக்கப்படலாம் என்பதாகும். இத்திருத்தத்தின் முக்கியத்துவத்தை திரு. நசிருத்தீன் அகமது வலியுறுத்த விரும்புகிறார். இதை, வரைவுக்குழு கவனத் தில் கொள்ளவேண்டும். எனவே, விதியை முழுமையாக மறுபரி சீலனை செய்தல் வேண்டும்.

★ ★ ★

## விதி 91

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

> விதி 91 இல் கூறப்படும் நடைமுறையில், 'ஆறு வாரங்களுக்குள்ளாக' என்ற சொற்களுக்கு பதிலாக, 'முடிந்தவரை விரைவில்' எனும் சொற்கள் இடம்பெறலாம் என முன்மொழிகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்தத் திருத்தத்திற்கு நான் ஒரு திருத்தம் தாக்கல் செய்துள்ளேன். அதன் எண் 94.

**திரு. அவைத் தலைவர்:** அது வரைவின் பால்பட்டது என்று எண்ணுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** நடைமுறை நிகழ்வில் வேறுபாடு இருக்குமென்றே கருதுகிறேன்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே 20, 1949, பக். 191.
2. அதே நூல், மே 20, பக். 195

*திரு. அவைத் தலைவர்:* வேறுபாடு கணிசமானதென்றா கருதுகிறீர்கள்?

★ ★ ★

*திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:* மொழிநடையில்தான் சிறிது வேறுபாடு உள்ளது. டாக்டர் அம்பேத்கரின் முன்மொழிவே சிறந்த தென்று கருதுகிறேன்.

*திரு. அவைத்தலைவர்:* இதை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அது தாக்கல் செய்யப்பட வேண்டுவதில்லை. திருத்தம் 1689; அம்பேத்கர் தாக்கல் செய்த திருத்தம் 1688 ஐப் போன்றதே இதுவும். இத்திருத்தம் தாக்கல் செய்யப்பட்டதாகக் கொள்வோம். இதை மீண்டும் தாக்கல் செய்வது அவசியமா? சிறிதளவு வேறுபாடு இருப்பதாய்க் கருதினால், தாங்கள் இதனைத் தாக்கல் செய்யலாம்.

★ ★ ★

[1]*திரு. அவைத் தலைவர்:* இப்போது திருத்தங்களை வாக் கெடுப்புக்கு விடக் கருதுகிறேன். தாங்கள் ஏதாவது கூற விரும்பு கிறீர்களா, டாக்டர் அம்பேத்கர்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் ஏதும் பதிலளிக்கத் தேவையில்லை என்று கருதுகிறேன்.

திரு. நசிருத்தீன் அகமதுவின் திருத்தம் தள்ளுபடியானது.

*திரு. அவைத் தலைவர்:* திருத்தங்களை இப்போது வாக் கெடுப்புக்கு விடவிருக்கிறேன். தாங்கள் ஏதாவது கூற விரும்பு கிறீர்களா, டாக்டர் அம்பேத்கர்?

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப் பட்டன. ஏனைய திருத்தங்கள் அனைத்தும் தள்ளுபடி செய்யப் பட்டன. திருத்தப்பட்டவாறு, விதி 91 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)

★ ★ ★

## விதி 67A

[2]*திரு. அவைத் தலைவர்:* முன்பு எடுத்துக்கொள்ளப்பட்டு, ஒத்திவைக்கப்பட்ட விதி 67-A இப்போது எடுத்துக் கொள்ளப்படுகிறது.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, மே 20, 1949, பக். 195.
2. அதே நூல், மே 20, 1949, பக். 197

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** *(பம்பாய்: பொது): தலைவர் அவர்களே. அவ்விதியை விலக்கிக் கொள்ளுவதற்கு அவையின் அனுமதியை வேண்டுகிறேன்.*

***திரு. அவைத் தலைவர்:*** *அவர் இவ்விதியை முன்னதாகத் தாக்கல் செய்யவில்லை. எனவே, அதனை விலக்கிக் கொள்ளுதல் தேவையற்றது.*

***திரு. பி. போக்கர் சாகிபு:*** *(சென்னை: முஸ்லீம்): மன்னிக்கவும். இவ்விதி ஏற்கனவே எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. எனவே தற்போது அவையின் நடப்பில் உள்ளது. எனவே அதனை விலக்கிக் கொள்வதெனில், அதற்கான காரணங்களை மாண்புமிகு உறுப்பினர் தெரிவிக்க வேண்டும்.*

***திரு. அவைத் தலைவர்:*** *எனது பிழைக்கு வருந்துகிறேன். டாக்டர் அம்பேத்கர், அவ்விதியை விலக்கிக் கொள்வதற்கான காரணங்களை அவையின் முன் வைக்கலாம்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, நான் கூற விரும்பும் காரணம் இதுதான்: முந்தைய அமர்வில் நான் விளக்கியவாறு நாடாளுமன்றத்தில் நியமன உறுப்பினர்கள் சிலர் இடம்பெற வகை செய்துள்ளோம். தொடக்கத்தில் பதினைந்து உறுப்பினர்கள் இடம் பெறலாமென முன்மொழிந்திருந்தோம். பின்னர் இப்பதினைந்து நியமன உறுப்பினர்களை இரண்டு வகையாகப் பிரிக்கக் கருதினோம். அதாவது இலக்கியம், அறிவியல், கலை, சமூகப்பணி முதலான துறைகளைச் சார்ந்து பன்னிரண்டு நிரந்தர உறுப்பினர்கள் ஒரு வகையாகவும், தாக்கல் செய்யப்படும் மசோதாக்களின் தன்மையையும் பொருண்மையையும் ஒட்டி ஒவ்வொரு மசோதாவிற்கும் நாடாளுமன்றத்திற்கு ஆலோசனை அளித்து உதவும் வல்லுநர் உறுப்பினர்கள் மூவர் மற்றொரு வகையாகவும் நியமிக்கப்படலாமென்று கருதினோம். நாடாளுமன்றத்திற்குப் பன்னிரண்டு உறுப்பினர்களை நியமிக்க விதி 67 இலேயே குடியரசுத் தலைவருக்கு அனுமதி வழங்கப்பட்டுள்ளது. எனவே, விதி 67A இன் வாயிலாக நாம் எய்தவிரும்பும் நோக்கத்தை விதி 67 இன் வாயிலாகவே நிறைவேற்றிக் கொள்ள வழியிருப்பதால், விதி 67A நிறை வேற்றினால் அது இரட்டிப்புச் செயலாகிவிடும். மேலும் தன்னுரிமையும் முழுமையான இறைமையும் வாய்ந்த நாடாளுமன்றத்தின் மீது மிகுந்த எண்ணிக்கையில் நியமன உறுப்பினர்களைத்*

திணித்தல் முறையற்றதாகும். ஏற்கனவே, பன்னிரெண்டு நியமன உறுப்பினர்களுக்கு வழிவகுக்கப்பட்டுள்ளது. ஆங்கிலோ- இந்திய சமூகத்தின் சார்பில் மேலும் ஒருசிலர் இடம்பெறலாம். இதனினும் கூடுதலாக நியமன உறுப்பினர்கள் இடம்பெறல் பாராளுமன்றத்தின் மக்களாட்சி முறைக்கும், மக்கள் சார்புடைமைக்கும் இழுக்காய் அமையும். எனவேதான் விதி 67-A ஐ விலக்கிக்கொள்ள நான் விரும்புகிறேன்.

அவையின் அனுமதியுடன் விதி 67-A விலக்கிக் கொள்ளப் பட்டது.

## 92 முதல் 99 வரையுள்ள விதிகள் குறித்த அறிக்கை

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, விதி 100 ஐ இப்போது தொடங்கலாமென முன்மொழி கிறேன்.

**திரு. அவைத்தலைவர்:** நிதி, மற்றும் நிதி மசோதாக்கள் குறித்த விவகாரங்களை முதலில் எடுத்துக்கொள்ளும் பொருட்டு 92 முதல் 99 வரையுள்ள விதிகளின் பரிசீலனையை இப்போதைக்கு ஒத்திவைக்கலாம் எனக் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். மேலும், இப்போதைய நிலையையும் தெளிவுபடுத்த விரும்புகிறேன். விதி 90 ஐப் பற்றிய விவாதத்தின்போது, அவ்விதியில் குறையொன்று இருப்பதைக் கடைசி நேரத்தில் உணர்ந்ததனால்தான், அவ் விதி யின் மீது வாக்கெடுப்பு வேண்டாம் என்றும் அவ்விதியைக் குறித்த விவாதத்தையும் முடித்துக் கொள்ள வேண்டாமென்றும் வேண்டு கோள் விடுத் திருந்தேன். அக்குறை திருத்தப்பட வேண்டுமென்ப துடன், திருத்தத்தின் அடிப்படையில்தான் 96-முதல் 99 வரையி லான விதிகள் கருதப்பட வேண்டும். விதி 91 ஐ நாம் ஏற்கனவே நிறைவேற்றி விட்டோம். எனவே, 92 இலிருந்து 99 வரையிலான விதிகள் மேலும் கூர்ந்து நோக்கப்பட வேண்டியவையாதலின், அவற்றை தற்போதைக்கு நிறுத்தி வைக்கலாம் எனக் கருதினேன். ஆனால் விதி 100 குறித்த பரிசீலனையை இப்போது தொடங்க இயலும்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 23, பக் 197 - 98.

*(டாக்டர் அம்பேத்கரின் ஆலோசனைப்படி விதி 100 நிறைவேற்றப்பட்டு, ரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)*

## விதி 101

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நாடாளு மன்றத்தின் செயல்பாடுகளை, ஒரு நீதிமன்றத்தைத் தவிர வேறெங் கும், சட்ட வழியில் வினவ முடியாதாகையால், திரு.காமத்தின் திருத்தம் தேவையில்லையென்று கருதுகிறேன். நாடாளுமன்றத்தின் செயல்பாடுகளைக் குறைகூறி மாற்றுதற்கு வாய்ப்பு உள்ள ஒரே இடம் நீதிமன்றம் தானாகையால், திரு.காமத்தின் திருத்தத்தில் காணப்படும் சொற்களைச் சேர்த்தல் தேவையற்றது.

குடியரசுத் தலைவருக்கோ, அவைத் தலைவருக்கோ, நாடாளு மன்ற அலுவலர் ஒருவருக்கோ, உறுப்பினர் ஒருவருக்கோ எதிராக அவர்களது செயல்பாடுகளைக் குறைகூறிப் பரிகாரம் காணவாய்ப் புள்ள ஒரே வாய்ப்பு நீதிமன்றத்தில்தான் கிடைக்குமென்பதற்கான காரணங்களை நான் ஏற்கெனவே விளக்கியுள்ளேன். ஆதலால் பரிகாரம் காணுதற்குரிய அமைப்பு எது என்பதைத் தனியான சொற் களால் சுட்டவேண்டுமென்பது தேவையில்லையென்பதைத் திரு. காமத் உணர்வார்.

எனதருமை நண்பர் திரு.நசிருத்தீன் அகமது தாக்கல் செய் துள்ள திருத்தத்தை நோக்கினால், பிரிவு (2) இல் இடம்பெற்றுள்ள, 'அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டிருப்பவர் எவரோ அவர்' என்ற சொற்களின் முக்கியத்துவத்தை அவர் புரிந்து கொள்ளவில்லை யென்பது புலப்படும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஒழுங்கை நிலைநிறுத்தும் பொருட்டே எனது திருத்தம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எவரிடம் அதிகாரம் ஒப்படைக்கப்பட்டுள்ளதோ அந்த நாடாளுமன்ற அலு வலரோ, மற்ற உறுப்பினரோ' என்ற சொற்களால் சுட்டப்படும்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 23, பக். 200-01.

நபர்களே, துணைப்பிரிவு (2) இனால் பாதுகாக்கப்படுபவர். அவைத் தலைவர் ஏற்கனவே நாடாளுமன்ற அலுவலரும் உறுப்பினருமாக இருப்பவர். அவருக்கு எவ்வித அதிகாரமும் அளிக்கப்பட வேண்டிய தில்லை. எனவே, சட்டப் பாதுகாப்பு தேவைப்படுவோர், அவைத் தலைவரையும் துணைத்தலைவரையும் தவிர்த்து மற்றைய உறுப் பினர்களே. ஆகவே, 'மற்றைய' என்ற சொல் முக்கியமானதே.

**திரு. அவைத் தலைவர்:** 'அல்லது ஒழுங்குமுறையை நிலை நிறுத்துதற்காக' எனும் சொற்களின் பயன் விளைவு என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவையில் பூசல் ஏற்படக்கூடும் என்பதை நான் கூறவிரும்பவில்லையெனினும், அவையில் பூசல் ஏதும் ஏற்படநேரிடும்போது, பூசலுக்குக் காரணமான அவை உறுப்பினர் ஒருவரை வெளியேற்றக் கருதும் அவைத் தலைவர், அச்சமயத்தில் அவர்கருத்தை நிறைவேற்ற உதவி செய் வதற்கு அலுவலர் எவரும் கிடைக்கவில்லையெனில், அவையின் பிறிதொரு உறுப்பினர் உதவியை நாடலாம். அச்சமயத்தில் அவைத் தலைவரின் கட்டளையை நிறைவேற்றும் பொறுப்பையேற்கும் உறுப்பினரே 'மற்றைய உறுப்பினர்' என்ற சொல்லால் சுட்டப் படுபவர்.

**திரு. அவைத் தலைவர்:** 'அல்லது அவை உறுப்பினரல் லாத பிற அலுவலர் எவரும்' இதன்கீழ் இடம்பெறுவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'அலுவலர்' இதில் இடம்பெறுவார்.

**திரு. எச்.வி. காமத்:** இங்குச் சற்றுத் தெளிவுறுத்த வேண்டு கிறேன். எனது திருத்தத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது, திரு. சந்தானம் எந்தத் திருத்தமும் செல்லுமாவென்பதை நீதிமன்றத் தில் மட்டுமின்றிச் சட்டப்பேரவையிலும் கூடக் கேள்விக்குள்ளாக் கலாம் என்று கூறினார். டாக்டர் அம்பேத்கர் இதனை ஒப்புக் கொள்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கார்:** நான் அளித்த விளக்கத்திற்கே நான் பொறுப்பேற்கவியலும்.

*திரு. எச்.வி. காமத்:* டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்ட மற்றொரு கருத்துக்கு வருகிறேன். துணைப் பிரிவுகளின் குறிப்புச் சுட்டல்கள் தெளிவாயிருப்பதாய் அவர் கூறினார். ஆனால் சட்டப் பேரவையாகிய மாற்று அரங்கில் சட்டமியற்றலில் குறிப்புச் சுட்டல்களுக்கு இடமில்லையென்றும், சட்ட விதிகளோ, பிரிவுகளோ குறிப்புச் சுட்டல்களுடன் தொடர்புறுத்தப்படாமல் அவற்றின் அமைவு நிலையிலேயே கருதப்படுமென்றும் உரைக்கப்பட்டது. ஆனால், விதிகளையும் குறிப்புச் சுட்டல்களையும் ஒருசேர நோக்கினாலன்றி அவற்றின் பொருளைத் தெளிந்துகொள்ள வழியில்லை.

*மாண்புமிகு டாக்டர். பி.ஆர். அம்பேத்கர்:* இதுகுறித்து இரண்டுவிதக் கருத்துகள் நிலவுகின்றன. குறிப்புச் சுட்டல்கள் சட்டப் பிரிவோடு சேராதவை என்பதொன்று; சேர்ந்தவையே என்பது மற்றொன்று. எடுத்துக்காட்டாக, திரு. மாங்லங்கர் பம்பாயிலிருந்தபோது அவை சட்டப் பிரிவினைச் சேராதவையே என்று கருத்து கொண்டிருந்தார். ஆனால் பம்பாய்ச் சட்டப் பேரவையின் இன்றைய அவைத் தலைவரோ குறிப்புச் சுட்டல்களும் சட்டப் பிரிவுகளின் பகுதிகளேயென்றும், சட்டத்தின் உட்கிடக்கையை விளக்க அவை அவசியமானவையே என்றும் தீர்ப்பளித்துள்ளார்.

(இரண்டு திருத்தங்களும் தள்ளுபடி செய்யப்பட்டன. விதி 101 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

★ ★ ★

## விதி 102

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தலைவர் அவர்களே, அருமை நண்பர் பண்டித குன்ஸ்ரு, விதி 102 இன் உட்பிரிவுகள் குறித்துச் சில அடிப்படையான எதிர்ப்புகளை எழுப்பினார். அவரது உரையின்போது, எல்லாக்கட்சிகளாலும் கண்டனம் செய்யப்பட்ட இந்திய அரசுச் சட்டம் 1935 இன் மறுமதிப்பாக

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 23, பக் 213-17.

இவ்விதி அமைந்திருப்பதாய்க் கூறினார். 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில் இரு வெவ்வேறு விதமான பகுதிகள் இருப்பதை நண்பர் பண்டித குன்ஸ்ரு கருத்தில் கொள்ளத் தவறி விட்டார் என்றே தோன்றுகிறது. பிரிவு 42 இல் ஒருவகையான விதிகளும், பிரிவு 43 இல் மற்றொருவகையான விதிகளும் காணப் படுகின்றன. கவர்னர் ஜெனரல் தமக்கு அரசியலமைப்புச் சட்டம் விதித்துள்ள கடமைகளைச் செம்மையாக நிறைவேற்றும் நோக் கில், அவர் தேவையென்று கருதுகின்ற காலங்களில் அவசரச் சட்டம் இயற்றுவதற்குப் பிரிவு 43 இன் கீழுள்ள விதிகள் இட மளிக்கின்றன. இப்பிரிவின்கீழ் கவர்னர்-ஜெனரல் அவசரச் சட்டம் இயற்றும்போது சட்டப்பேரவையைக் கருத்தில் கொள்ள வேண்டிய தில்லை. சட்டப்பேரவை அமர்வில் இருக்கும்போதும் கூட இத் தகைய அவசரச் சட்டங்கள் இயற்றப்படலாம். சுருங்கக்கூறின், கவர்னர் ஜெனரல் இணையானதொரு மாற்றுச் சட்டமன்றமாகச் செயல்படச் சட்டம் வழிவகுக்கிறது. ஆனால், விதி 102 இல் இந்திய அரசுச் சட்டத்தில் காணப்படும் இத்தகைய அதிகாரங்கள் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்படவில்லை என்பதைத் தெளிவாகக் காணமுடியும். நாடாளுமன்றம் அமர்வில் இல்லாத காலத்தில்தான் குடியரசுத் தலைவர் அவசரச் சட்டம் இயற்ற இயலும். மத்திய சட்டப் பேரவைக்கு இல்லாத அதிகாரம் எதனை யும் இவ்விதி குடியரசுத் தலைவருக்கு வழங்கிவிடவில்லை; ஏனெனில் குடியரசுத் தலைவருக்கென்று தனியான பொறுப்பு களோ, முடிவெடுக்கும் அதிகாரமோ, தனித்த கருத்தோ இருக்க நமது அரசியல் சட்டத்தில் இடமில்லை. எனவே, பண்டித குன்ஸ்ரு தெரிவித்த கருத்துக்கள் விதி 102 இன் வரம்புகளுக்கு அப்பாற் பட்டவையென்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஒருவகையில் ஒப்புநோக்கினால் எனது சொற்களை நான் வெகு கவனமாகவே இங்கு பயன்படுத்துகிறேன் - விதி 102 இனை, 1920 ஆம் ஆண்டின், பிரிட்டிஷ் அவசர நிலை அதிகாரச் சட்டத்திற்கு இணையானது எனக் கருதலாம். அந்தச் சட்டத்தின் கீழ், நாடாளு மன்றம் அமர்வில் இல்லாத காலத்தில்தான் மன்னர் அவசரச் சட்டம் எதனையும் அறிவித்தல் இயலும்; அத்தகைய அவசரச் சட்டப் பிரகடனத்தின்படி அரசாங்கமும் ஆணைகளைப் பிறப்பிக்க இயலும். திடீரென உருவாகும் அவசரநிலைக் காலங்களில், அன்றாட நடைமுறைச் சட்டங்களைக் கொண்டு அரசு நிலைமை யைச் சமாளிக்க இயலாமற்போகும் சூழ்நிலைகளைக் கற்பனை

செய்துபார்த்தல் கடினமல்ல என்பதை, இந்த அவைக்குப் பணிவோடு சுட்ட விரும்புகிறேன். அத்தகைய நிலையில் அரசு செய்ய வேண்டியது என்ன? தனக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு கட்டுப் படுத்தவியலாத சூழ்நிலைகள் உருவானாலும் கூட அவற்றை எதிர் கொள்ளவேண்டியது அரசின் கடமையே. இத்தகைய சூழ்நிலையை எதிர்கொள்ள அரசாங்கத்துக்கு அதிகாரமளிக்கும் வகையில் அவசரச் சட்டங்களை இயற்றும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப் படுதல் அவசியமானதென்றே கருதுகிறேன். மேலும் இந்த அதிகாரத்தை நாடாளுமன்றம் அமர்வில் இல்லாதபோதுதான் பயன்படுத்த முடியும் என்பதால், இதற்கு அடிப்படையில் மறுப்பு ஏதும் இருக்கக் காரணமில்லையென்றே கருதுகிறேன்.

அருமை நண்பர் போக்கர், தமது திருத்தம் எண் 1796 குறித்த உரையில், இந்த அவசரச்சட்டம் குடிமக்கள் எவரது அடிப்படை உரிமையையும் பறிக்கலாகாது என்றும், குற்றம் சாட்டப்பட்டு நீதிமன்றத்தால் தண்டனை அளிக்கப்படாத எவரது தனிநபர் சுதந் திரத்தையும் பறிக்கும் வகையில் அவசரச்சட்டம் அமையலாகாது என்றும் வலியுறுத்திப் பேசினார். விதி 102 இல் பிரிவு(3) ஐ அவர் ஊன்றிப்படிக்காததனாலேயே இந்தத் திருத்தத்தை அவர் கொண்டு வந்துள்ளாரெனத் தோன்றுகிறது. அப்பிரிவு, குடியரசுத் தலைவர் இயற்றும் அவசரச்சட்டம் எதுவும் நாடாளுமன்றம் வழக்கமான அமர்வில் நிறைவேற்றும் சட்டங்களுக்கான வரம்புகளுக்கு உட் பட்டே அமையும் என்று தெளிவுறுத்துகிறது. நாடாளுமன்றம் (சட்டப்பேரவையும்கூட) வழக்கமான நடைமுறையில் இயற்றும் சட்டம் எதுவும், வரைவு அரசியலமைப்புச் சட்டத்தில் வரையறுக் கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளின் வரம்புகளுக்குட்பட்டே அமையவேண்டும். நிலைமை இவ்வாறிருக்க விதி 102 இன் கீழ் இயற்றப்படும் எந்தச் சட்டமும் இதே மாதிரியான வரம்புகளுக் குட்பட்டே அமைய வேண்டுமாதலால், அவசரநிலைச் சட்டம் எதுவும் குடிமக்களின் அடிப்படை உரிமைகளைப் பறித்துவிட இயலாது. எனவே அருமை நண்பர் போக்கர் தமது திருத்தம் எண். 1796 இன் வாயிலாக உறுதி செய்ய விரும்பும் பாதுகாப்புகளுக் கான தேவை ஏதும் எழவில்லை.

நண்பர் காமத் முன்மொழியும் திருத்தம் 1793 இன் வாயி லாய் எவ்விதப்பயனும் இல்லை. ஓர் அவை அமர்வில் உள்ளது. மற்றோர் அவை அமர்வில் இல்லை எனும் நிலையைக் கருதிப்

பார்ப்போம். நாடாளுமன்றச் சட்டங்கள் எவையும் தனித்ததோர் அவையால் மட்டும் நிறைவேற்றப்பட இயலாதவையாதலால் அத்தகைய நிலையில் விதி 102 தரும் அவசர நிலைச் சட்டமியற்றும் அதிகாரம் தேவையேயென்பது தெளிவு. சட்டம் இயற்ற இரு அவைகளின் ஒப்புதலும் தேவையென்பதால் ஓர் அவை மட்டும் தனித்தியங்கி எந்தச் சட்டத்தையும் நிறைவேற்ற இயலாது.

**திரு. எச்.வி. காமத்:** அதாவது, ஓர் அவை மட்டுமே அமர்வில் இருந்தால், அது மக்களவையாக இருந்தாலும்கூட அவசரச் சட்ட மியற்றும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவர் பயன் படுத்த இவ்விதி இடமளிக்கிறது, அப்படித்தானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். ஏனெனில் சட்டமியற்றத் தேவையான அவைக் கட்டமைப்பு இல்லாமை யால், அந்நிலையில் அவை சட்டமேதும் இயற்றவியலாது.

**திரு. எச்.வி. காமத்:** இதை வெட்கக்கேடான நிலை என்றே நான் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நண்பர் திரு. குன்ஸ்ருவின் 1802 ஆவது திருத்தத்தில் கூறப்பட்டுள்ள கருத்தை அடுத்தபடியாக எடுத்துக்கொள்கிறேன். விதி 102 இன் கீழ் குடியரசுத் தலைவர் அறிவிக்கும் அவசரச்சட்டங்கள் எவையாயினும் அவை பிறப்பிக்கப்பட்டதிலிருந்து முப்பது நாட்களானவுடன் தாமாகவே முடிவுக்கு வந்துவிடவேண்டுமென்பது அவர் தெரிந்துள்ள கருத்து. வரைவு விதியின்படி அவை நாடாளுமன்ற அமர்வு தொடங்கும் நாளிலிருந்து ஆறு வாரங்கள் வரை நடைமுறையில் இருக்கும். நண்பர் பண்டித குன்ஸ்ரு தமது திருத்தத்தை முன்மொழிவதற் கான காரணத்தை நோக்குவோம். இவ்விதியின்படி இயற்றப்படும் அவசரச் சட்டங்களின் ஆயுள் ஆறுவாரகாலத்திற்கு மேலும் மிக நீடிக்குமோ என அவர் ஐயுறுகிறார். எடுத்துக்காட்டாக, நான்கு மாதங்கள் கழித்துத்தான் நாடாளுமன்றம் கூட்டப்படுகிறதெனில், அதற்குப் பிறகு ஆறு வாரங்கள் என்பது மிக நீண்டகாலமாகி விடும்; மேலும் அதை விட மிகுதியாகக்கூட நாடாளுமன்றத்தைக் கூட்டுதற்கு அரசு தாமதம் செய்யலாமென்ற அச்சமும் காரணமா யிருக்கலாம். நடைமுறையில் என்ன நடக்கக்கூடுமென்பதை இப்போது

எண்ணிப் பார்க்க இயலாது. எனினும், நாம் அரசியலமைப்புச் சட்டத்தின் பிறிதொருபகுதியில், அதாவது விதி 69 இல், நாடாளு மன்றத்தின் தொடர்ந்த இரு அமர்வுகளுக்கிடையே ஆறு மாத காலத்திற்குமேல் இடைவெளி இருத்தலாகாது என வகுத்துள்ளோ மாகையால், இவ்வச்சம் தேவையற்றதெனக் கருதுகிறேன். மேலும் அரசாங்கச் செயல் பாடுகளின் தேவைகளை நோக்கினால் இதை விடவும் குறைவான கால இடைவெளிகளில் நாடாளுமன்றத்தின் நம்பிக்கையை உறுதி செய்து கொண்டு ஆட்சிநடத்துதல் அரசாங்கத் தின் அடிப்படைத் தேவைகளில் ஒன்று என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். எனவே, நாட்டையாளும் அரசு விதி 102ஐப் பயன்படுத்தி, வேண்டுமென்றே நாடாளுமன்ற அமர்வுகளைத் தாமதப்படுத்துமென்று நான் கருதவில்லை. எனவே, விதி 102ஐ வரைவு வாசகத்தின்படியே அனுமதிக்கலாம் என வேண்டுகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** எங்களைப் போன்றே டாக்டர் அம்பேத்கரும் மக்களாட்சி, சுதந்திரம் ஆகிய கருத்துக்களில் ஆழ்ந்த பற்றுகொண்டவர் என்பதால், அவசரச் சட்டங்களின் ஆயுளை அளவுக்கு மேல் நீளஅனுமதிப்பது, இக்கருத்துகளுக்கு எதிரான தல்லவா என்று கேட்க விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்கு என்ன தோன்றுகின்றது என்றால், அரசியலமைப்புச் சட்டத்தின்படி இந்தப் பகுதிக்கு, 'குடியரசுத் தலைவரின் சட்டமியற்றும் அதிகாரம்' என்ற தலைப்பு கொடுக்கப்பட்டதனாலேயே மதிப்பிற்குரிய நண்பர் கள் காமத், குன்ஸ்ரு ஆகியோர் இதற்கு எதிரான கண்ணோட்டத் துடனேயே அணுகிறார்களோ என்ற ஐயம் எழுகிறது. உண்மை யில், 'நாடாளுமன்றம் அமர்வில் இல்லாதபோது சட்டமியற்றல்'' என்ற தலைப்பே இப்பகுதியின் தன்மைக்கேற்றதாகும். அப்படி யொரு தலைப்பு கொடுக்கப்பட்டிருந்தால் இப்பகுதிக்கு இந்த அளவில் மறுப்பு தோன்றியிருக்காதெனத் தோன்றுகிறது. 'அவசரச் சட்டம்' என்பது நல்லசொல் அல்லவென்பதை ஒப்புக்கொள் கிறேன். கற்பனை வளம்மிக்க நண்பர் காமத் வேறு பொருத்தமான சொல்லொன்றைத் தருவாரெனில் அதை வரவேற்கும் முதல் நபராக நான் முன்னிற்பேன், 'அவசரச் சட்டம்' என்ற சொல் எனக்கு கொஞ் சமும் விருப்பமானதன்று. எனினும் என்னால் வேறு மாற்றுச் சொல் எதையும் காணமுடியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திரு.சர்தார் ஹுக்கும் சிங் முன் மொழிந்துள்ள, 'அமைச்சரவையோடு கலந்தாலோசித்த பின்னர், குடியரசுத்தலைவர் அவசரச் சட்டமியற்றல் ' எனும் திருத்தத் தீர் மானமும் ஆராயப்பட வேண்டியுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்தத் திருத் தத்தைப் பற்றி நினைவூட்டியதற்கு நன்றி செலுத்துகிறேன். ஆனால், அமைச்சரவையின் அறிவுரையின்படி யல்லாமல் குடியரசுத் தலைவர் செயல்படமாட்டார்; செயல்பட முடியாது என்பதால் இத்திருத்தத்திற்கு அவசியமில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அமைச்சரவையின் அறிவுரையின் படிதான் செயல்பட வேண்டுமென்று குடியரசுத் தலைவரைக் கட்டுப் படுத்துவதற்கான விதி நமது அரசியல் அமைப்புச் சட்டத் தில் எங்கே உள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அப்படியொரு விதியுண்டு என்பதை உறுதிப்படக் கூறுவேன். அதாவது, குடியரசுத் தலைவர் தனது கடமைகளை நிறைவேற்ற உதவவும், அறிவுரை கூறவும் அமைச்சரவையொன்று இருக்க வேண்டும் என்று அரசிய லமைப்புச் சட்டத்தில் விதி வகுக்கப்பட்டுள்ளது.

**திரு. அவைத்தலைவர்:** நாம் உருவாக்குவது எழுத்து வடிவிலான அரசியலமைப்புச் சட்டமாதலால், ஏதாவதொரு பகுதி யில் இதைத் தெளிவாகவே உரைத்துவிட்டால் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்தப் பகுதியில் என்பது எனக்கு இப்போது நினைவில்லையெனினும், அவ்வாறு விதி வகுக்கப்பட்டுள்ளது என்பதை உறுதியாய்க் கூறமுடியும். அதாவது, அமைச்சரவையின் அறிவுரையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டவர்; அமைச்சரவையின் அறிவுரை யின்றிக் குடியரசுத் தலைவர் செயல்பட முடியாது.

**சில மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** விதி 68, பிரிவு (1)

**திரு. அவைத்தலைவர்:** அதில் அமைச்சர்களின் கடமைதான் வகுத்தளிக்கப்பட்டுள்ளதேயன்றி, குடியரசுத் தலைவர் அமைச்

சரவையின் அறிவுரையை ஏற்றுக்கொண்டுதான் ஆக வேண்டு மென்று கட்டுப்படுத்துவதாக அது அமையவில்லை. அமைச் சரவையின் அறிவுரைப்படி நடத்தல் குடியரசுத் தலைவரின் கடமை யெனத் தெளிவுறுத்தப்படவில்லை. அரசியலமைப்புச் சட்டத்தின் வேறுபகுதி எங்கேனும் அவ்வாறு கூறப்பட்டுள்ளதா? அவ்வாறு கூறப்படவில்லையெனில், அமைச்சரவையின் அறிவுரையை ஏற்க மறுத்தமைக்காகக் குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்ய வும் இயலாதன்றோ?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குடியரசுத் தலைவர் தமது கடமைகளை நிறைவேற்றல் குறித்த விதி 61 இல் கவனம் செலுத்துமாறு வேண்டுகிறேன். அவர் 'தனது பொறுப்பு களை நிறைவேற்றுதலில்' அமைச்சரவையின் அறிவுரையில்லாது செயல்படவியலாது. ஆதலின், அமைச்சரவையின் அறிவுரை யைக் குடியரசுத்தலைவர் ஏற்றுக்கொண்டாக வேண்டுமென்பது தெளிவு. 'அவரது பொறுப்புகளை நிறைவேற்றுவதில்' என்பவை மிக முக்கியமான சொற்கள்.

**திரு. அவைத் தலைவர்:** இச்சொற்களால் குடியரசுத் தலைவரைக் கட்டுப்படுத்தவியலுமா என ஐயுறுகிறேன். இவ்விதி யில் குடியரசுத்தலைவருக்கு அறிவுரை கூறியுதவ, பிரதம அமைச்சர் தலைமையில் அமைச்சரவையொன்று இருக்க வேண்டுமென்று தான் கூறப்படுகிறதேயன்றி, அமைச்சரவையின் அறிவுரையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுக்கொண்டேயாக வேண்டும் என்று உரைக் கப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதவியிலிருக்கும் அமைச்சரவையின் அறிவுரையைக் குடியரசுத் தலைவர் ஏற்றுக் கொள்ளவில்லையெனில், அவர் (அவ்வமைச்சரவையைக் கலைத்து விட்டு) வேறொரு அமைச்சரவையை அமைத்து அதன் அறிவுரை யைப் பெற்றுச் செயல்படலாமேயன்றித் தன்னிச்சையாக ஒருபோதும் செயல்பட இயலாது.

**திரு. அவைத்தலைவர்:** குடியரசுத் தலைவர் அமைச்சரவை யின் அறிவுரையின்படிதான் செயல்படவேண்டுமென்று தெளிவாக உரைப்பதில் இடர்ப்பாடு ஏதேனும் உளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தெளிவாகத்தான் உரைக்கிறோம். மேலும் கூறுவதெனில், செயல்முறைக் கட்டளை கள் எனும் ஏற்பாட்டுக்கும் வழிவகுக்கப்பட்டுள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** அதையும் பார்த்துவிட்டுத்தான் எனது கருத்தைக் கூறுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதன் மூன் றாவது பத்தியில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. 'ஒன்றிய அரசின் ஆட்சிப் பொறுப்புகளில் வரம்பிற்குள்ளான செயல்பாடுகள் அனைத் திலும், குடியரசுத் தலைவர் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங் களை அமைச்சரவையின் அறிவுரையின்படியே செலுத்துவார்' என உரைக்கப்பட்டுள்ளது. இதற்கும் சிலதிருத்தங்களைச் செய்யக் கருதியுள்ளோம்.

**திரு. அவைத்தலைவர்:** நீங்கள் அதில் திருத்தம் செய்ய விரும்புவதாக உரைக்கிறீர்கள். இப்போதுள்ள வரைவின்படி, குடியரசுத் தலைவர் ஆட்சியதிகாரத்தைச் செலுத்துவதில் அமைச் சரவையின் அறிவுரைப்படி செயல்பட வேண்டுமென்று கூறப்படு கிறதேயன்றிச் சட்டம் இயற்றும் அதிகாரம் குறித்து ஏதும் கூறப் படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பெரும்பாலும் பல்வேறு நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களில் காணப் படும் வரைவின்படியே நாம் இவ்விதியை உருவாக்கியுள்ளோம். பல்வேறு நாட்டுக் குடியரசுத் தலைவர்களும் அமைச்சரவையின் அறிவுரைப்படிதான் குடியரசுத் தலைவர் செயல்பட வேண்டு மென்றே இத்தொடருக்குப்பொருள்கொண்டு அதன்படி செயல் பட்டு வந்துள்ளனர். இதில் மெய்யாகவே இடர்ப்பாடு ஏதேனும் இருக்குமெனில், தக்க திருத்தத்தின் வாயிலாகக் குறைபாட்டைச் சரிசெய்து கொள்ளலாம்.

**திரு. எச்.வி. காமத்:** அவசரச் சட்டங்களின் செயல்பாட்டுக் காலத்திற்கு உச்ச வரம்பு விதித்தல் குறித்து இவ்விதியில் ஏதும் கூறப்படாமல் இருப்பதால், அஃது ஏழரை மாத காலம் வரை நீண்டு விடுதற்கு வாய்ப்பு உண்டு. இந்நிலை ஏற்கவியலாத தொன்று.

***திரு. அவைத் தலைவர்:*** திரு. காமத் தமது திருத்தத்தைக் குறித்து இரண்டாம் முறையாக உரையாற்றப் போகிறாரா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியரசுத் தலைவருக்கும், நமது நாட்டின் குடியரசுத் தலைவருக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

*(6 திருத்தங்களும் தள்ளுபடி செய்யப்பட்டன. விதி 102 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தலைவர் அவர்களே,

> *'(அரசியலமைப்புச் சட்டத்தின்) பகுதி V அதிகாரம் IVக்கு 'கூட்டரசின் நீதித்துறை' என்று கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்புக்கு பதிலாக, 'ஒன்றியத்தின் நீதித்துறை' எனும் தலைப்பு கொடுக்கப்படலாம் என முன்மொழிகிறேன்.*

முந்தைய விதி ஒன்றில் இந்தியாவை 'ஒன்றியம்' என நாம் குறிப்பிட்டிருப்பதன் விளைவாக எழும் திருத்தமே இது.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## விதி 102-A

★ ★ ★

***திரு. அவைத் தலைவர்:*** இப்போது (இரவு) எட்டுமணியாகிறது. எனவே இத்துடன் இன்றைய விவாதங்களை முடித்துக் கொள்ளல் நன்று எனக் கருதுகிறேன்.

***திரு. பிராஜேசுவர் பிரசாத்:*** *(பீகார்: பொது):* இந்தத் தீர்மானத்தின் மீது நான் ஒரேயொரு நிமிட நேரம் பேச அனுமதி வேண்டுகிறேன்.

***திரு. அவைத்தலைவர்:*** இதற்கு மேலும் உரைகளைச் செவிமடுக்க அவை தயாராக இல்லை எனக் கருதுகிறேன்.

---

*1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 23, பக்218*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பதிலுரை ஏதும் தேவையென்று நான் கருதவில்லை. பேராசிரியர் ஷா அவர்கள் இந்தத் திருத்தத்தை முன்மொழிந்தது நமது துரதிருஷ்டம் எனக் கருதுவேன். 'அரசுக் கொள்கைகளின் வழிகாட்டு நெறிமுறைகள்' குறித்து ஆலோசிக்கும்போது இதைப் பற்றியும் மிக விரிவாக விவாதித்திருக்கிறோம். எனவே, இதை நாம் இங்கே மீண்டும் எழுப்பி விவாதிப்பது ஏன் என வியப்படைகிறேன். இதனைப் பற்றி விதி 39A இல் முடிவாகக் கூறப்பட்டுள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

*(திருத்தம் தள்ளுபடி செய்யப்பட்டது).*

## விதி 103

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே,

> *'விதி 103 இன் பிரிவு (1) இல், நாடாளுமன்றம் சட்டமியற்றி நிர்ணயிக்கும் எழுவருக்குக் குறையாத எண்ணிக்கையிலான, மேலும் பிற நீதிபதிகள்' என்ற சொற்களுக்கு மாற்றாக, நாடாளு மன்றம் கூடுதலான எண்ணிக்கையை வரையறுக்கும் வரை, மேலும் ஏழு நீதிபதிகள்' எனும் சொற்கள் இடம் பெறலாம்' என முன்மொழிகிறேன்.*

உச்சநீதிமன்றத்தில் எத்தனை நீதிபதிகள் இருக்கலாம் என்று நாடாளுமன்றம் சட்டமியற்றி வரையறுக்கும் வரை உச்சநீதிமன்றம் அமைதல் தாமதிக்கப்படலாகாது என்ற நோக்கிலேதான் இத்திருத்தம் கொண்டு வரப்பட்டுள்ளது. உச்சநீதிமன்றத்தில் இப்போது ஏழு நீதிபதிகள் இருப்பர் என இத்திருத்தம் வரையறுக்கிறது.

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 23, பக். 227.
2. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 24, பக். 230.
3. அதே நூல், 1949 மே 24, பக். 242-43.

*'பிரிவு (3)க்கான விளக்கம் (II) இல், 'நீதித்துறைப் பதவி' எனும் சொற்களுக்கு அடைமொழியாக, 'மாவட்ட நீதிபதியின் தகுதிக்குக் குறையாத' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்'' என்று முன்மொழிகிறேன்.*

*மேலும், விதி 103, பிரிவு (4) இல் காணப்படும், நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் அமர்வுக்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றுக் குடியரசுத் தலைவருக்கு அனுப்பி வைக்கப்படும்' எனும் சொற்களுக்குப் பதிலாக, 'நாடாளுமன்றத்தின் ஒவ்வோரவையிலும் மொத்த உறுப்பினர்களில் பெரும் பாலோராலும், அமர்வுக்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் இரு பங்குக்குக் குறையாத உறுப்பினர்களாலும் ஆதரிக்கப்பட்டு குடியரசுத் தலைவருக்கு அனுப்பிவைக்கப்படும்' எனும் சொற்கள் இடம்பெறலாம்''*

***திரு. அவைத் தலைவர்:*** *இந்தத் திருத்தத்திற்கு, டாக்டர் பக்ஷி தேக் சந்து ஒரு திருத்தம் முன்மொழிவதாக அறிவிப்புச் செய்துள்ளார். திருத்தத்துக்கான திருத்தங்களின் அச்சிட்ட பட்டியலில் அதன் எண் 101.*

*திருத்தம் தாக்கல் செய்யப்படவில்லை.*

★ ★ ★

[1]***திரு. அவைத் தலைவர்:*** *திருத்தம் 1857 வெறும்சொல் திருத்தமே. திருத்தம் 1858 பேராசிரியர் கே.டி.ஷா பெயரில் உள்ளது. உங்கள் கருத்து, 'திறமையின்மையும் தீய நடத்தையும்' என்ற சொற்களில் அடங்கவில்லையா?*

***பேராசிரியர் கே.டி. ஷா:*** *எனது கருத்து அதில் அடங்கும் எனில் மறுப்பின்றி ஏற்றுக்கொள்கிறேன். எனது திருத்தத்தை தாக்கல் செய்யாது விடுகிறேன்.*

★ ★ ★

***திரு. அவைத் தலைவர்:*** *திருத்தம் 1862 டாக்டர் அம்பேத்கர் பெயரிலுள்ளது. இதுவும், 'ஓர் ஒப்பறிக்கை' என்பதற்கு மாறாக, 'ஓர் உறுதிப்பாடு அல்லது உறுதிமொழி' எனும் சொற்களை மாற்றி*

---

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 24, பக்கம் 244*

யமைக்கும் திருத்தமே. இதுபோன்று வரும் இடங்களிலெல்லாம் நாம் சொற்களை மாற்றியமைத்துள்ளோம். தீர்மானம் தாக்கல் செய்யப்பட்டதாகக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா,

*'விதி 103 இன் பிரிவு (6) இல் ''ஓர் ஒப்பறிக்கை'' எனும் சொற்களுக்கு பதிலாக, ''ஓர் உறுதிப்பாடு அல்லது உறுதிமொழி' எனும் சொற்கள் இடம்பெறலாம்'' என முறைப்படி முன்மொழிகிறேன்.*

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, இத்திருத்தங்களைப் பற்றி ஏதேனும் கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நான் இரண்டு திருத்தங்களை ஏற்றுக்கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். ஒன்று திரு.சந்தானம் சமர்ப்பித்துள்ள திருத்தம் எண். 1829. மற்றொன்று, திரு.காமத் தந்துள்ள திருத்தம் எண் 1845. அதில் திரு.காமத் நடுவர் ஒருவர்கூட உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப் படலாம் என்று முன்மொழிகிறார். ஆனால் திரு.காமத்தின் திருத்தத்தை (எண் 1845) ஏற்பதில் எனக்குச் சற்று தயக்கம் உள்ளது. குறிப்பிட்ட வரைவுப் பகுதியில், 'தனிச் சிறப்பு வாய்ந்த' எனும் சொல் பொருத்தமாயிருக்குமாவென்று உறுதிபடத் தீர்மானிக்க இயலவில்லை. மாற்றுச் சொல்லாக முன்மொழியப்பட்டுள்ள 'தகுதி சான்ற' எனும் சொல் இதைவிடப் பொருத்தமாயிருக்கலாம். ஆனால் நான் முன்னரே குறிப்பிட்டவாறு இன்னும் உறுதியானதோர் முடிவுக்கு வர இயலவில்லை. எனவே, அரசியலமைப்புச் சட்டத்தை, வரைவுக்குழு மறுபரிசீலனை செய்யும்போது தக்கவாறு திருத்தியமைக்கலாமென விடுப்பதே தற்போதைக்கு ஏற்றது எனக் கருதுகிறேன். 'தனிச் சிறப்பு வாய்ந்த' அல்லது 'தகுதி சான்ற' என்ற இரண்டையும் சீர்தூக்கிப் பார்த்துத் தேர்ந்தெடுக்கவோ அல்லது இரண்டுக்கும் மாற்றாகப் புதிய சொல்லைத் தேர்ந்தெடுக்கவோ வரைவுக் குழுவுக்கு முழு அனுமதி தந்துவிடலாம்.

---

1. அ.நி. விவாதங்கள், தொகுதி VIII, 1949, மே 24, பக். 257 -60.

இவ்விதிக்கு முன்மொழியப்பட்டுள்ள வேறு பல திருத் தங்கள் குறித்து நமது கருத்தைச் செலுத்துவோம். இவையனைத் திலும் அடிப்படையாக மூன்று சிக்கல்கள் எழுப்பப்பட்டுள்ளன? முதலாவது, உச்சநீதிமன்ற நீதிபதிகளை நியமனம் செய்வதற்கான முறைமையாதென்பது. இச்சிக்கல் குறித்து மூன்று வெவ்வேறு முன் மொழிவுகள் தரப்பட்டுள்ளன. தலைமை நீதிபதியின் ஒப்பிசை வோடு உச்சநீதிமன்ற நீதிபதிகள் நியமிக்கப்படவேண்டும் என்பது முதலாவது முன்மொழிவு. குடியரசுத்தலைவர் நியமனம் செய்ய லாம்; அதற்கு நாடாளுமன்ற அவைகளில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்களின் ஒப்பிசைவு பெறப்பட வேண்டும் என்பது இரண் டாவது வகை முன்மொழிவு. உச்சநீதிமன்ற நீதிபதிகள் மாநிலங் களவையுடன் கலந்தாலோசனை செய்து நியமிக்கப்பட வேண்டும் என்பது மூன்றாவது கருத்து.

எழுப்பப்பட்டுள்ள சிக்கல் மிக மிக முதன்மை வாய்ந்த தென்பதை முழுமையாக ஒப்புக்கொள்கிறேன். நீதித்துறையானது ஆட்சியாளரின் தாக்கத்திற்குட்படாதவாறு சுதந்திரம் வாய்ந்ததாக வும், அதே சமயம் தகைநேர்மை வாய்ந்ததாகவும் விளங்க வேண்டு மென்பதில் கருத்து வேறுபாட்டுக்கு இடமில்லை. ஆனால் இவ்விரு குறிக் கோள்களையும் எய்துவதெப்படி என்பதே நம்மை எதிர் நோக்கும் வினா. பிறநாடுகளில் இச்சிக்கல் இருவேறு வழிமுறை களில் அணுகப்படுகிறது. எடுத்துக்காட்டாக, பிரிட்டனில் நியமனங் கள் யாவும், தடைவரம்புகளின்றி அரசரால், அதாவது அப்போதைய ஆட்சியாளரால் செய்யப்படுகின்றன. மாறாக, அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உச்சநீதிமன்ற நீதிபதிகள் போன்ற அரசு உயர் பதவிகள் யாவும், செனட் எனப்படும் மேலவையின் ஒப்பிசைவு பெற்றே செய்யப்படுகின்றன. இன்று நாம் வாழ்கின்ற சூழலில், அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் போன்று நமது ஆட்சிமுறைமையில் பொறுப் புணர்ச்சி வளர்ந்திருப்பதாக நம்பிக்கை கொள்ள இயலவில்லை. ஆட்சியாளர்களின் அறிவுரையை மட்டுமே கொண்டு குடியரசுத் தலைவர் கட்டற்றவாறு நியமனங்கள் செய்தல் என்பது ஆபத்தான போக்காக முடியும். அவ்வாறே நியமனங்கள் ஒவ்வொன்றும் நாடாளுமன்றத்தின் ஒப்பிசைவைப் பெற வேண்டுமென்பதும் தகுதி யான தீர்வென்று கருதமுடியாது. இது சற்றுசிக்கல்மிகுந்த நடை முறை என்பது மட்டுமல்ல, இந்த நடைமுறையில், அரசியல் நிர்ப் பந்தங்களும் அரசியல் காரணங்களும் மிகுதியான பாதிப்பை ஏற் படுத்தக்கூடும் என்பதாலும் இந்த முறை ஏற்கத்தக்கதல்ல வெனலாம்.

எனவே, இவ்விரண்டுக்கு மிடையிலான வழியொன்றை நிறுவ வரைவு விதியில் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது. அதாவது, நியமனம் தொடர்பாக ஆலோசனை கூறத் தகுதி வாய்ந்தவர் களுடன் கலந்தாலோசித்து இவ்வித நியமனங்கள் செய்யப்படும் என இவ்விதியில் உரைக்கிறோம். இப்போதைக்கு இந்த அளவில் இருத்தல் போதுமென்றே கருதுகிறேன்.

உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதியின் ஒப்பிசைவு பெற்றே நீதிபதிகள் நியமிக்கப்பட வேண்டும் என்று கருதுபவர்கள், தலைமை நீதிபதியின் நடுவுநிலைமை, தேர்ச்சி மதிப்பீட்டுத்திறம் ஆகிய வற்றில் முழு நம்பிக்கையையும் வைத்து முடிவெடுக்கலாம் என்று நம்புகிறார்கள். தலைமை நீதிபதி என்பவர் சிறப்புத் தகுதி வாய்ந்த வராயிருப்பார் என்பதில் எனக்குச் சற்றும் ஐயமில்லை. ஆனால், தலைமை நீதிபதி என்பவரும், தனிப்பட்ட உணர்ச்சிகள், நிறை குறைகள், விருப்புவெறுப்புகள் வாய்ந்த மனிதர்களில் ஒருவரே. எனவே நியமனங்களல் அவருக்கு மறுப்பதிகாரம் (வீடோ) வழங் குவதென்பது, நியமன அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கும், அரசாங்கத்திற்கும் தர விருப்பமின்றி அவருக்கு வழங்குவதாய் முடியும். எனவே இதுவும் மற்ற இரு மாற்றுவழிகளையும் போன்றே கூடுதலான அளவில் ஆபத்து வாய்ந்ததென்றே கூறுவேன்.

பல்வேறு திருத்த முன்மொழிவுகளிலும் எழுப்பப்படும் இரண்டாவது வினா வயது பற்றியதாகும். இதனைப் பற்றிப் பல்வேறு விதமான கருத்தோட்டங்கள் எடுத்துரைக்கப்பட்டன. நீதிபதிகள் அறுபது வயதில் பணி ஓய்வுபெற வேண்டும் என ஒரு சாரார் கருதுகின்றனர். பார்க்கப் போனால், உயர்நீதிமன்ற நீதிபதி களின் பணி ஓய்வு வயது அறுபதுதான். பணி ஓய்வு வயது வரம்பை அரசியல் சட்டம் வரையறுக்கக் கூடாதென்றும், நாடாளுமன்றம் சட்டமியற்றி அவ்வயது வரம்பை வரையறுக்க வேண்டுமென்றும் சிலர் கூறுகின்றனர். ஆனால் அது ஏற்கத்தக்க நடைமுறையென்று கருதவியலாது. நாடாளுமன்றம் பணிஓய்வு வயதை அவ்வப்போது சட்டமியற்றி வரையறுத்துக் கொண்டிருக்க விதி வகுப்போமெனில் நீதிபதி பதவிகளை ஏற்றுப் பணிபுரியத் தகுதியான நபர்கள் முன்வரா நிலைமை உருவாகும். ஏனெனில், ஒருபதவிப் பொறுப்பையேற்க முன்வரும் ஒருவர், இயல்பான சூழலில், எவ்வளவு காலத்திற்கு அப்பதவிப் பொறுப்பில் இருக்க முடியும் என்பதை அறிந்து

கொண்டே பொறுப்பேற்க முன்வருவார். எனவே, பணி ஓய்வு வயதை வரையறுக்க நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டமியற்றிக் கொண் டிருக்கும் என்பது ஏற்புடைய முறைமையன்று. எனவே, பணி ஓய்வு வயது அரசியலமைப்புச் சட்டத்திலேயே வரையறுக்கப்பட வேண்டுமென்பது அவசியம். இதற்கு மாற்றுக் கருத்தாக, வயது வரம்பு என்று எதையும் வரையறுக்கக் கூடாது; அப்படி வரை யறுத்தால் (65 வயது என வரையறுத்துக் கொள்வோம்) அந்த வயதைத் தாண்டியிருப்பினும், உடல்நலமும், அறிவுத் திட்பமும் கொண்டு விளங்கி நாட்டுக்கு மேலும் பலகாலம் நற்பணியாற்றக் கூடியவர்களை வலிந்து துரத்துவதாக அமையுமென்றும் ஒரு சாரார் வாதிடுகின்றனர். ஒரு மனிதனின் அறிவாற்றல் திறமைகள் அறுபத்தைந்து வயதில் முடிவடைந்து போய்விடுமென்று நானும் கூட நினைக்கவில்லை. அதே சமயம், இத்தகைய திருத்தங்களை முன்மொழிந்துள்ள உறுப்பினர்கள் ஒன்றைக் கவனிக்க வேண்டும். குறிப்பிட்ட வழக்கு அல்லது வழக்குகளில் ஓய்வுபெற்ற நீதிபதிகளில் ஒருவரை அழைத்து, விசாரித்துத் தீர்ப்பளிக்கும் பொறுப்பை அவரிடம் ஒப்படைக்கத் தலைமை நீதிபதிக்கு நாம் விதி 107இன் கீழ் உரிமை வழங்குகிறோம் என்பதை அவர்கள் மறந்துவிட்டார் கள். எனவே, உச்சநீதிமன்ற நீதிபதிகளாயிருந்து ஓய்வு பெற்றவர் களில் திறம் வாய்ந்தோரின் பணியை முற்றாக இழந்துவிடாமல் பயன்படுத்திக்கொள்ள விதி 107 மூலம் வழி வகுக்கப்பட்டிருப் பதால் வயதுவரம்பை வரையறுத்தல் குறித்து அச்சம் தெரிவித்துக் கூறப்பட்ட கருத்துக்களை விட்டு விடாலாமெனக் கருதுகிறேன்.

அடுத்து, பணிஓய்வு பெற்ற நீதிபதிகள் அதற்குப்பின் வேறு பதவிகளை ஏற்றுக் கொள்ளுதல் குறித்த வினாவுக்கு வருகிறேன். இது குறித்து, பேராசிரியர் ஷா, திரு. ஜஸ்பத் ராய் கபூர் ஆகியோர் முன்மொழிந்துள்ள இரண்டு திருத்தங்கள் நிரலில் உள்ளன. இவ் விரண்டு திருத்தங்களுமே ஏற்றுக்கொள்ளத் தக்கனவல்ல என்பதே எனது தனிப்பட்ட கருத்து. இவ்விரு திருத்தங்களுமே அரசுப் பணித் தேர்வாணையம் குறித்து அரசியலமைப்புச் சட்ட வரைவில் காணப்படும் விதிமுறைகளைப் பற்றியனவாகும். ஆங்கு, அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர் எவரும், அதிலிருந்து பணி ஓய்வு பெற்றபின்னர், குறிப்பிட்ட காலத்திற்கு பிற அரசுப் பணி எதனையும் ஏற்கலாகாது என விதி வகுக்கப்பட்டுள்ளது. ஆனால்,

கூட்டரசின் அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர்களுக்கும் நீதித் துறைப் பணியிலிருப்போர்க்கும் அடிப்படையில் வேறுபாடு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. அரசுப் பணித் தேர்வாணையம் அரசுக்காகப் பணியாற்றுகிறது; அரசு நிருவாகத்துக்கான அலுவலர் களைத் தேர்ந்தெடுத்தல் போன்று அரசுக்கு நேரடியாகத் தொடர் புள்ள பணிகளைச் செய்து வருகிறது. குறிப்பிட்டதொரு துறை யின் பொறுப்பு வாய்த்திருக்கும் அமைச்சர் ஒருவர், தமக்கு வேண்டிய ஒருவரைப் பணிக்குத் தேர்ந்தெடுத்தால், பணி ஓய்வுக் குப் பின்னர் வேறு புதிய பதவி தருவதாகத் தேர்வாணைய உறுப் பினர்களுக்கு இச்சை காட்டித் தவறான தாக்கம் செலுத்துதற்கான வாய்ப்புகள் இல்லையெனக் கூறிவிட முடியாது. கூட்டரசுக்கும் பணித் தேர்வாணையத்துக் கிடையிலான உறவு நெருங்கி ஒன்றிய தாகும். வேறு விதமாய்க் கூறுவதெனில், அரசாங்கத்துக்கு மிகவும் தொடர்பான பணிகளையே தேர்வாணையம் செய்து வருகிறது. நீதித்துறையோ அரசாங்கத்துக்கு ஆர்வம் குன்றிய, ஆர்வமற்ற விவ காரங்களிலேயே பெரும்பாலும் ஈடுபட்டு முடிவெடுத்து வருகிறது. நீதித்துறை பெரும்பாலும் குடிமக்களுக்கிடையிலான பூசல்களை ஆய்ந்து தீர்ப்பு கூறுவதில் ஈடுபட்டுள்ளது; அரிதாகவே குடிமக்க ளுக்கும் அரசாங்கத்திற்குமிடையே எழும் பூசல்களில் தலை யிட்டுத் தீர்ப்பளிக்கும் பணியையும் மேற்கொள்கிறது. எனவே, நீதித்துறையைச் சார்ந்த பணியாளர் (நீதிபதி)கள் பால் அரசு தனது தாக்கத்தைப் பயன்படுத்தித் தீர்ப்புக்களைத் திசை திருப்புதற் கான வாய்ப்புகள் மிகக் குறைவே. ஆதலால் தான் அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர்களுக்காக உருவாக்கப்படும் விதிகள் நீதித்துறைக்குப் பொருந்தமாட்டா என்று கருதுகிறேன். மேலும், நீதித்துறை சார்ந்தவர்கள் அறிவாற்றல் திறன்கள் தொடர்ந்து நாட்டு நலநோக்கில் பயன்படுத்தத் தேவைப்படும் சூழல்களை யும் ஏராளமாகக் காணவியலும். ஏன் நமதருமை நண்பர் திரு. வரதாச்சாரியரையே எடுத்துக் கொள்வோமே. இப்போது அவர் வருமான வரிச்சிக்கல்கள் சிலவற்றை ஆயும் ஆணையத்தின் உறுப் பினராகப் பணியாற்ற நியமிக்கப்பட்டிருக்கிறாரன்றோ?

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** அது ஊதியமில்லாத பணியாக இருக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை. அவர் அதற்காக ஊதியம் பெறுகிறார். அரசின் கீழ் ஊதிய மேற்புப் பணி அது.

எனவே, இத்தகைய பொறுப்புகளுக்கு, நீதித்துறை வல்லு நரைத் தவிர வேறு எவரை நியமிக்க இயலும்? திரு ஜஸ்பத் ராய் கபூர் கூறுவது போல இத்தகைய பணிகளை ஊதியமில்லாப் பணி களாக நாம் கருதத் தொடங்கினால் எவ்வளவு பெரிய பின்னடைவை நாம் சந்திக்க நேரிடும்? மேலும் ஆட்சித்துறை நீதித்துறை இரண் டும் மிகத் தெளிவாகவே வேறுபட்டவை, ஆட்சித்துறை, நீதித்துறை யின் மீது செல்வாக்கைப் பயன்படுத்துதற்கான வாய்ப்புகள் ஏதும் இல்லையெனலாம். எனவே திருத்த ஆலோசனையே தேவை யில்லையென்று கருதுவதால் திருத்தத் தீர்மானங்கள் அனைத்தை யும் எதிர்க்கிறேன்.

கீழே காணப்படும் இரண்டு திருத்தங்கள் ஏற்கப்பட்டன:

1) திரு. சந்தானத்தின்:

''விதி 103, பிரிவு (2) இல், 'இருக்கலாம்' எனும் சொல்லுக்கு பதிலாக, 'குடியரசுத்தலைவர்... கருதலாம்' எனும் சொற்கள் இடம்பெறலாம்.''

எனும் திருத்தத் தீர்மானம்;

2) திரு. காமத்தின்:

''விதி 103, பிரிவு (3) இல்,

"(c) அல்லது தகுதி சான்ற நடுவர் ஒருவர்' எனும் துணைப் பிரிவு சேர்க்கப்படலாம்''

எனும் திருத்தத் தீர்மானம்;

இவற்றுடன், முன்னதாக டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த நான்கு தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன. பிற உறுப்பினர்கள்

முன்மொழிந்த 18 திருத்தத் தீர்மானங்கள் தள்ளுபடி செய்யப் பட்டன.

(விதி 103, திருத்தப்பட்டவாறு, அரசியல் அமைப்புச் சட்டத் தில் சேர்க்கப்பட்டது.)

## விதி 103 - A

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த விஷயம் குறித்து முடிந்தவரை சுருக்கமாகவே முடித்துவிட விரும்புகிறேன். அதற்கு முன்பாக இந்தத் திருத்தத்தைக் கொண்டு வந்ததன் அடிப் படைக்கருத்து என்பதை நான் புரிந்து கொண்டவாறு உரைக்க விரும்புகிறேன். இதன் மையக்கருத்தைத் தெளிவுறுத்துதற்கு மூன்று வெவ்வேறு எடுத்துக்காட்டுகளை நாம் கருத வேண்டும். முதலாவது, உச்ச நீதிமன்ற நீதிபதி யொருவர், அரசுப் பதவி யொன்றுக்கு, மீண்டும் நீதிமன்றத்திற்குத் திரும்பும் உரிமையில்லாதவாறு, நிய மிக்கப்படுதல். இரண்டாவது, உச்சநீதிமன்ற நீதிபதி யொருவர், தமது பதவிக் காலம் முடிந்த பின்னர், அரசு நிருவாகப் பதவி யொன்றுக்கு நியமிக்கப்படுதல். மூன்றாவது, உச்சநீதிமன்ற நீதிபதி யொருவர், நீதிப்பணி சாராத அரசுப் பதவியொன்றுக்குத் தற்காலிக மாக நியமிக்கப்பட்டுத் தற்காலிகப்பணி முடிந்தபின்னர் நீதிபதி பதவிக்கே திரும்ப வகை செய்தல். இந்த மூன்றாவது வகையான நியமனம் குறித்துத்தான் திருத்தம் முன்மொழியப்பட்டு இருப் பதாக நான் புரிந்து கொள்கிறேன். எனது எண்ணம் தவறாயின் நண்பர் டாக்டர் சென் திருத்தலாம். அதாவது, நாம் கருத வேண்டிய திருத்தம், உச்ச நீதிமன்ற நீதிபதி ஒருவரைத் தற்காலிகமாகக் குறுகிய காலத்துக்கு நீதித்துறை சாரா ஆட்சிப் பணியொன்றுக்கு, மீண்டும் நீதிபதியாகத் திரும்பும் உரிமையுடன், நியமித்தல் பற்றியது எனலாம்.

நான் குறிப்பிட்ட முதலாவது எடுத்துக்காட்டில், உச்சநீதி மன்ற நீதிபதி, தமது நீதிபதி பதவியைத் துறந்துவிட்டுப் புதிய

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, மே 24 1949, பக். 266-67.

பதவியை ஏற்கிறார், அதன் பிறகு அவருக்கு உச்சநீதிமன்றத்துடன் தொடர்பில்லை. இந்நிலையில் சிக்கல் ஏதுமில்லையென்பதால் இதனை மறுப்பு ஏதுமின்றி ஏற்றுக் கொள்ளலாம்.

இரண்டாவதாக, நீதிபதி பதவியிலிருந்து ஓய்வு பெற்ற ஒருவர் அதன் பிறகு வேறு பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளுதல் குறித்தும் சிக்கல் எழ இடமில்லை. இதற்கு வரம்பு ஏதும் விதிக்கவும் இயலாது.

மூன்றாவது வகைப் பொறுப்புதான் சற்று ஆழ்ந்த கவனத்திற்குரியதாகும். நமது நாட்டில் இரண்டு நிகழ்ச்சிகள் அவ்வாறு நடந்துள்ளன. போர்க் காலத்தில் உச்சநீதிமன்ற நீதிபதியொருவர் அயல்நாட்டு தூதுப் பணிக்கும், மற்றொரு உயர்நீதிமன்ற நீதிபதியொருவரும் - தலைமை நீதிபதியா என்பது சரியாக நினைவில்லை - தூதர் பணிக்கும் அனுப்பப்பட்டனர். இரண்டு சமயத்திலும் இந்நியமனங்கள் கடுமையாகக் குறை கூறப்பட்டன. நமதருமை நண்பர் திரு. சிமன்லால் செதால்வாடும், அரசின் இந்த நடவடிக்கையைக் கண்டித்து ''டைம்ஸ் ஆப் இந்தியா'' இதழில் கட்டுரை எழுதியிருந்தார். அவருடைய உணர்வுகள் எனக்கும் உண்டு. ஆனாலும் இப்போது டாக்டர் பி.கே. சென்னின் திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்ளவியலாமைக்குக் காரணம், திருத்தத்தின் பாங்கு சில வகைகளில் தேவைக்கு மேல் பரந்தும் சில வகையில் மிகக் குறுகியும் இருப்பதுதான். இது குறித்து மறுகவனம் தேவையென்று வரைவுக் குழுவுக்குப் பரிந்துரைக்க தயாராக இருக்கிறேன். இந்த உறுதியை ஏற்று, திருத்த முன்மொழிவை விலக்கிக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர் :** எங்களில் பலர் இது குறித்து ஆழ்ந்து நோக்க விரும்புவதால், இதைப்பற்றி முடிவெடுப்பதை நாளை வரை ஒத்திவைக்க வேண்டுகிறேன்.

**திரு. அவைத்தலைவர் :** டாக்டர் அம்பேத்கர்தான் இதை வரைவுக் குழுவின் மறு கவனத்திற்கு அனுப்பலாமென்கிறாரே?

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** அதையும் கூடத் தள்ளி வைக்கலாம்.

**திரு. அவைத் தலைவர் :** வரைவுக் குழுவிற்குப் போகிற தென்றாலே ஒத்திவைக்கப் படுவதாகத்தான் பொருள். வரைவுக் குழுவின் ஒப்புதல் பெற்ற வடிவில் அது மீண்டும் இங்கு திரும்பி வரும்.

★ ★ ★

## விதி 104

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (பம்பாய் : பொது): ஐயா, விதி 104 பற்றிய விவாதம் தள்ளிவைக்கப்படலா மென்று வேண்டுகிறேன்.

## விதி 106

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பட்டியல் VIஇல் உள்ள திருத்தம் எண் 124, திருத்தம் எண். 1883 ஆகிய இரண்டு திருத்தங்களையும் ஏற்றுக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இரண்டு திருத்தங்கள் முன் மொழியப்பட்டுள்ளன. இரண்டையும் டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்கிறார். எனவே,

> ''பட்டியலில் காணும் திருத்தத்தீர்மானம் 1883ஐ யொட்டி, விதி 106, பிரிவு (1)இல், 'தலைமை நீதிபதியவர்கள்.... நியமிக்கலாம்' என்ற சொற்களுக்கு முன்னால், 'குடியரசுத் தலைவரின் ஒப்பிசைவோடு' என்ற சொற்கள் சேர்க்கப்படலாம்''.
>
> ''விதி 106, பிரிவு (1)இல், 'உயர்நீதிமன்ற (நீதிபதி)' என்ற சொற்களுக்கு முன்னால், 'உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்பட முற்றிலும் தகுதி வாய்ந்த' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்''

+ அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 375.

★ அதே நூல், அதே தொகுதி VIII, 1949 மே 27, பக். 377

என்னும் இரு திருத்தங்கள் வாக்கெடுப்புக்கு விடப்படுகின்றன. திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

(திருத்தப்பட்டவாறு, விதி 106, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)

★ ★ ★

## விதி 107

**திரு. அவைத் தலைவர்:** அடுத்து, திருத்தம் 1884. இது எதிர்மறைத் திருத்தம் ஆதலின் இதனைத் தள்ளுபடி செய்கிறேன்.

திருத்தம் 1885 இன் பொருள் குறித்து ஏற்கனவே முடிவு செய்யப்பட்டு விட்டதால், இதைத் தாக்கல் செய்ய வேண்டிய தில்லை.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** எனது திருத்தம் 1886 ஐப் போன்றே வேறொரு திருத்தமும் இருப்பதால், நான் அதைத் தாக்கல் செய்யவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் 1887, சொல் மாற்றம் குறித்த ஒன்றுதான் ஆகையால், தாக்கல் செய்யப்பட வேண்டிய தில்லை.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா,

''விதி 107 இல், 'இவ்விதியில் கூறப்படும் வரம்புகளுக்கு உட்பட்டதாக' எனும் சொற்கள் நீக்கப்படலாம்.'' எனும் தீர்மானத்தைத் தாக்கல் செய்ய அனுமதி இறைஞ்சுகிறேன். ஏனெனில் அச்சொற்கள் சற்றும் தேவையில் லாதவை.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:**

''விதி 107 இன் மூன்றாவது வரியில், 'எந்தவொரு சமயத்திலும்' எனும் சொற்களையடுத்து, 'குடியரசுத் தலைவரின் முன் ஒப்புதலுடன்' எனும் தீர்மானத்தைத் தாக்கல் செய்கிறேன்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக்.377.

(திருத்தங்கள் 1889, 1890 ஆகியவை தாக்கல் செய்யப்பட வில்லை.)

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்போது விதி(107) ஐயும், அதற்கான திருத்தங்களையும், விவாதத்துக்கு எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. டி.டி. கிருஷ்ண மாச்சாரியின் திருத்தம் 125ஐ மட்டும் ஏற்றுக் கொள்கிறேன்.

திருத்தத்தை அவை ஏற்றுக்கொண்டது.

★ ★ ★

## விதி 108

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, 'திருத்தங்களின் பட்டியலில் காணப்படும் 1891 ஆம் திருத்த வாசகத்திற்கு மாற்றாக,

> ''விதி 108க்குப் பதிலாகப் பின்வரும் விதிகள் இடம்பெறலாம்: 108. உச்சநீதிமன்றம் பதிவு நீதிமன்றமாகவும் விளங்கும். உச்சநீதிமன்ற அவமதிப்புக்காக தண்டனை வழங்கும் அதிகாரமும் அதற்கு உண்டு.
>
> 108 A 'உச்சநீதிமன்ற அமர்வுகள், டில்லியிலோ, அவ்வப்போது, குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன், தலைமை நீதிபதி நிர்ணயிக்கும் பிற இடங்களிலோ நடைபெறும் எனும் வாசகம் இடம் பெறலாம்' என முன்மொழிகிறேன். ஐயா, அவையின் பொது விவாதத்தையடுத்து இத் தீர்மானத்தின் தேவையை விரிவாக விளக்குவேன்.

★ ★ ★

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நான் தாக்கல் செய்துள்ள திருத்தம், திரு.காமத்தும், திரு. ஜஸ்பத் ராய் கபூரும் எழுப்பியுள்ள சிக்கல்கள் அனைத்தை யும் நடைமுறையில் உள்ளடக்குகிறது.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக்.377.
2. அதே நூல், பக். 379.
3. அதே நூல், பக். 379.

ஐயா, அரசியலமைப்புச் சட்ட வரைவில், வேறெந்த இடத்திலும் உச்சநீதிமன்றத்தின் தகுநிலை குறித்து வரையறுக்கவில்லை யாதலால், விதி 108 இன்றியமையாதது எனத் தெரிவித்துக் கொள்கிறேன். அவையோர் விதி 192 ஐ நோக்கினால், உயர்நீதிமன்றங்கள் குறித்து இதனைப் போன்றே விதிவரைவு செய்யப்பட்டிருப்பதை நோக்கலாம். எனவே, உச்சநீதிமன்றத்தின் தகுநிலையைத் தெளிவுறுத்த இதைப் போன்றதொரு தனி விதி தேவையென்பது உறுதி. 'பதிவு நீதிமன்றம்' என்பதன் பொருளை சுருக்கமாகவே விளக்கி விட இயலும். அதாவது, இத்தகைய நீதிமன்றத்தின் பதிவேடுகள் சான்றுமதிப்பு வாய்ந்தவை. அதாவது இப்பதிவேடுகள் வேறெந்த நீதிமன்றத்திலும், ஐயத்திற்கிடமில்லாத சான்றுகளாக ஏற்றுக்கொள்ளப்படும் தகுதியுடையவை. பதிவு நீதிமன்றம் என்பதன் தெளிவான பொருள் இதுவே. விதி 108 இன் இரண்டாம் பகுதி, உச்சநீதிமன்றத்திற்கு, தன்னை அவமதிப்பு செய்வோருக்கு தண்டனை வழங்கும் அதிகாரம் உண்டு என்று கூறுகிறது. உண்மையில் பார்க்கப்போனால், பதிவு நீதிமன்றம் என்றாலே, அதனை அவமதிப்பு செய்வோரைத் தண்டிக்கும் அதிகாரமும் பெற்றது எனும் பொருள் அடங்குகிறது. ஆனால், இங்கிலாந்தில் இத்தகைய அதிகாரம் பொதுச் சட்டத்தின் வாயிலாகக் கிடைக்கப் பெறுகிறது. அதேசமயம் இந்தியாவிலோ பொதுச் சட்டம் என்று ஏதும் இல்லையாதலால், சட்டத்தின் முழுப் பொருளையும் தெளிவாகக் கூறி விடுதல் நன்று எனக் கருதினோம். எனவேதான் விதி 108 சேர்க்கப்படுதல் அவசியமாகிறது.

அடுத்து விதி 108A ஐக் குறித்துப்பேசுகையில், திரு.காமத் டில்லி என்ற சொல் ஏன் இடம்பெற வேண்டுமென வினா எழுப்பினார். அதற்கான விடை மிக எளிதே. ஒரு நீதிமன்றமிருப்பின் அது எங்கே அமைந்து அமர்வுகளை நடத்துமென்பது தெளிவுறுத்தப் பட வேண்டும். அப்போதுதான் வழக்காடு குடிமக்கள் எங்கு, யாரிடம் தங்கள் வழக்குகளுக்காக அணுக வேண்டுமென்பதையறிவார்கள். எனவே, நீதிமன்றம் எங்கு அமைந்து வழக்குகளை விசாரிக்குமென்பது சட்டத்தில் வரையறுக்கப்படல் அவசியம். அதனால்தான் டில்லி என்ற சொல் இடம்பெறல் தவிர்க்க வியலாதது.

ஆனால் என்றென்றும் டில்லியே இந்தியாவின் தலைநகராயிருக்குமாவென உறுதியாகக் கூற முடியாதாகையால், இவ்விதியின் வாசகத்தில் இடம்பெற்றுள்ள ஏனைய பிற சொற்களும் இடம்பெறுதல் அவசியமே. அதாவது, 'அல்லது குடியரசுத் தலைவரின் ஒப்புதலோடு, தலைமை நீதிபதி நிர்ணயிக்கும் இடங்களில்' என்ற சொற்கள் 'டில்லியில்' உச்சநீதிமன்றம் இடம்பெறவில்லையெனில் விளைவு என்னவாகும்? ஒருவேளை இந்தியாவின் தலைநகரம் மாற்றப்பட நேரிடுமெனில், ஒவ்வொரு முறையும், நாடாளுமன்றம் எந்த ஊரைத் தலைநகராக முடிவு செய்கிறதோ, அங்கு உச்சநீதிமன்றம் அமைய, அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தவேண்டியிருக்கும். ஆகவேதான் தொடரும் சொற்களும் தேவைதான் என்பதை வலியுறுத்துகிறேன். மேலும், அருமை நண்பர் கபூர் எழுப்பிய சிக்கலுக்கு, எனது நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரி பொருத்தமான பதிலைக் கூறிவிட்டாராதலின், அதற்குமேலே நானும் பதிலளிப்பது தேவையில்லையென விடுக்கிறேன்.

*   *   *

[1]திரு. ஜஸ்பத் ராய் கபூர்: டாக்டர் அம்பேத்கரிடம் நான் ஒரு சிறிய விளக்கம் கேட்கலாமா? உச்சநீதிமன்றம் தனது அமர்வுகளை டில்லியில் நடத்தும் அதே தருணத்தில், நாட்டின் வேறெந்த இடத்திலேனும், கிளை அமர்வுகள் நடத்தலாம் என முடிவு செய்யும் உரிமை உச்சநீதிமன்றத்திற்கு உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உறுதியாக, கிளை அமர்வுகளும் நீதிமன்ற அமர்வுகளே.

*அம்பேத்காரின் திருத்தங்கள் யாவும் ஏற்கப்பட்டன.*

*பிற திருத்தங்கள் அனைத்தும் தள்ளுபடி செய்யப்பட்டன. திருத்தப்பட்டவாறு விதி 108, விதி 108-A ஆகியவை அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டன.*

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 383

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, விதிகள் 109 முதல் 114 வரையிலானவற்றை தற்போதைக்குத் தள்ளிப் போட விரும்புகிறேன். காரணமென்னவென்றால், அவை பொதுவான விதிகளை உரைப்பதுடன், அட்டவணை I இன் பகுதி III இல் சமஸ்தானங்களைப் பற்றிய சில சிறப்பு விதிகளையும் உள்ளடக்கி யிருக்கின்றன. பகுதி III இல் பட்டியலிடப்படும் சமஸ்தானங்களின் தகுநிலை குறித்து மறுஆய்வு செய்ய முடிவெடுத்துள்ளோமாகையால் அவை பகுதி I இல் பட்டியலிடப்படும் மாநிலங்களோடு ஒப்பான நிலையைப் பெற ஆவன செய்வோம். அந்தக் கட்டமே 109 முதல் 114 வரையிலான விதிகளைப் பற்றி விவாதிக்கவும் உற்ற தருணமாகும். எனவே தான் இவற்றைப் பற்றிய விவாதத்தைத் தள்ளிவைக்க வேண்டுகிறேன்.

**அவைத் தலைவர்:** அவற்றை இப்போதைக்கு ஒத்தி வைப்போம்.

* * *

[2]**அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் பெயரிலுள்ள திருத்தம் 1939 ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''விதி 115 இல், '(அடிப்படை உரிமைகளை நிலை நாட்டுதல் தொடர்பாக') எனும் சொற்கள் அடைப்புக் குறிகளுடன் நீக்கப்படலாம். ஏனெனில் இச்சொற்கள் மிகையே.

**திரு. அவைத் தலைவர்:** தற்போது தாக்கல் செய்யப்பட்டதைப் போன்றதே திருத்தம் 1940உம்; எனவே அது தாக்கல் செய்யப்பட வேண்டியதில்லை. திரு. நசிருத்தீன் அகமது பெயரிலுள்ள திருத்தம் 1941 வரைவு மொழி தொடர்பானதாகையால் தாக்கல் செய்யப்பட வேண்டியதில்லை. திருத்தம் 1942 தாக்கல் செய்யப்படவில்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 383 - 384.
2. அதே நூல் பக். 385

நம்முன் கொண்டு வரப்பட்ட திருத்தங்கள் இவ்வளவே. உறுப்பினர் எவரேனும் கருத்து கூற விரும்புகின்றனரா?

இவற்றைத் தற்போது வாக்கெடுப்புக்கு விடுவோம்.

முதலில் டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 1939 (மேலே குறிப்பிடப்பட்டது) வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

திருத்தத்தை அவை ஏற்றுக் கொண்டது.

***(டாக்டர் பக்ஷி தேக்சந்து பெயரிலான திருத்தம் 1938 கீழ்க்காணும் வடிவில் ஏற்றுக் கொள்ளப்பட்டது.)***

> ''விதி 115 இல் 'அல்லது ஆணை வடிவிலான கட்டளைகள்' எனும் சொற்களுக்கு பதிலாக' 'கட்டளைகள் அல்லது ஆணைகள், ஆணை வடிவிலான கட்டளைகள்' எனும் சொற்கள் இடம்பெறலாம்.''

***(திருத்தப்பட்டவாறு விதி 115 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது).***

* * *

## விதி 117

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நான் ஈண்டு ஒரு கருத்தினைக் கூற விரும்புகிறேன். முன்மொழியப்பட்டுள்ள விதியின் நோக்கம், நமது உச்சநீதிமன்றத் தையும், பிரபுக்கள் சபையைப் போன்று தனது முடிவுகளுக்குக் கட்டுப்பட்டதாக ஆக்குதல் அன்று. நமது உச்சநீதிமன்றத்திற்கு முன்னர் (உச்சநீதிமன்றத்தில்) எடுக்கப்பட்டுள்ள முடிவுகளை மாற்றி, புதியதொரு முடிவினை எடுப்பதற்கான உரிமை உண்டு. விதியின் வரைவு மொழியைப் பொறுத்தமட்டில், நோக்கத்தை முழுமையாக நிறைவேற்றத் தேவையான வகையில் அமைந்துள்ள தென நிறைவு கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** 'பிற நீதிமன்றங்கள் அனைத்தும்' என ஏன் சேர்க்கக் கூடாது?

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 386.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 'நீதிமன்றங்கள் அனைத்தும்' என்பதற்கு, 'பிற நீதிமன்றங்கள் அனைத்தும்' என்பதே பொருள்.

(விதி 117 எவ்விதத் திருத்தமுமின்றி நிறைவேற்றப்பட்டு, அரசிய லமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

★ ★ ★

## விதி 119

[1]**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் எண் 1951 தள்ளுபடி செய்யப்படுகிறது.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, எனது திருத்தம் எண். 1952இன் வாயிலாக நான் எழுப்ப முனையும் கருத்து மிக எளியதே. இந்த விதியின்படி, உச்சநீதிமன்றம், குடியரசுத் தலைவருக்குத் தனது கருத்தைத் தெரிவிக்கலாம், அல்லது மாறாக முடிவெடுத்தால் தெரி விக்காமலும் இருக்கலாம் எனக் கூறப்படுகிறது. எனக்குத் தோன்றுவது என்னவென்றால், குடியரசுத் தலைவர் உச்சநீதி மன்றத்திடம் கருத்துக் கேட்டால், உச்சநீதிமன்றம் கருத்து தெரி விக்காமலிருக்கவும் வழியுண்டு என்பதாய் விதி அமைகிறது என்பதே. அவ்வாறு பொருள் தரவில்லையெனில், வரைவு வாசகம் சரியானதே. மாறாகக் குடியரசுத் தலைவர் கேட்கும்போது, உச்ச நீதிமன்றம் கருத்துத் தெரிவித்துத்தான் ஆக வேண்டுமென்பது நமது நோக்கம் எனில், '(தெரிவிக்க) வேண்டும்' என்ற சொல் இடம்பெற வேண்டும். இதனைப் பற்றித் தெளிவுறுத்த வேண்டு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உச்சநீதிமன்றத்தைக் கட்டுப்படுத்த முடியாது.

**திரு. எச்.வி. காமத்:** அப்படியென்றால் என் தீர்மானத்தை முன்மொழியப் போவதில்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 387.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, விதி 119ஐ ஒத்திவைக்கலாம் என்று கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் நாம் ஒத்திவைக்கத் தீர்மானித்துள்ள விதிகள் 109லிருந்து 114 விதிகளுக்கு சம்பந்தமுள்ளது அது.

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, அப்படியென்றால், திருத்தத்தை முன்மொழியும் உரிமையைப் பின்னால் உபயோகித்துக் கொள் கிறேன்.

★ ★ ★

## விதி 121

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த விதியை ஒத்திவைக்கலாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

## விதி 122

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''தற்பொழுதுள்ள விதி 112க்குப் பதிலாக பின்வரும் விதியைச் சேர்த்துக்கொள்வது,
>
> ''122. உச்சநீதிமன்றத்தின் அலுவலர்களும், பணியாளர்களும் மற்றும் செலவுகளும் - (1) உச்சநீதிமன்றத்தின் அலுவலர்களையும், பணியாளர் களையும் இந்தியாவின் தலைமை நீதிபதி அல்லது அவர் பணிக்கும் மற்றொரு நீதிபதி அல்லது அலுவலர் நியமிப்பார்.
>
> இருப்பினும், நீதிமன்றப் பணியில் இல்லாத ஒருவரை மத்திய பொதுத்துறை ஆணையத்தை கலந்தாலோசியாது நீதிமன்றப் பணி களுக்கு நியமிக்கக்கூடாது என சில நேர்வுகளைக் குறிப்பிட்டு குடியரசுத் தலைவர் விதி இயற்றலாம்.
>
> (2) நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களின் வகைமுறை களுக்குட்பட்டு இந்தியாவின் தலைமை நீதிபதி அல்லது அவரால் அதற்கெனப் பணிக்கப்பட்ட அந்த நீதிமன்றத்தின் நீதிபதி அல்லது அலுவலரால் உச்சநீதிமன்ற அலுவலர்கள் மற்றும் பணியாளர்களின் பணிநிலைமைகள் வகுக்கப் படும்.
>
> இருப்பினும், இந்த அலுவலர்கள் மற்றும் பணியாளர்களின் ஊதியம், படிகள் மற்றும் ஓய்வூதியங்கள் குடியரசுத் தலைவரைக் கலந்து கொண்டு தலைமை நீதிபதியால் முடிவு செய்யப்படும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 387.
2. மேற்படி அதே நூல், பக். 388.

(3) உச்சநீதிமன்றத்திற்கான நிர்வாகச் செலவுகள், அந்த நீதி மன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்களின் ஊதியங்கள், படிகள், ஓய்வூதியங்கள் உட்பட எல்லா செலவுகளும் இந்திய வருவாயிலிருந்து செலவழிக்கப் படுவதுடன் கட்டணம் அல்லது வேறு ஏதாவது தொகை அந்த நீதிமன்றம் பெறுமானால் அது இந்த வருவாயில் சேர்த்துக் கொள்ளப்படும்.

இந்த மறுவரைவின் குறிக்கோள் யாதெனில் உச்சநீதிமன்றம் சுயேச்சையாக இயங்குவதற்கான நல்லதொரு வழிமுறையைச் செய்வதுதான். மேலும் உச்சநீதிமன்றத்தின் நிர்வாகச் செலவுகளை இந்திய வருவாய் கணக்கில் சர்வ செய்வதுமாகும்.

ஐயா, இந்த திருத்தத்திற்கான திருத்தத்தை இந்தக் கட்டத்தில் முன்மொழிய விரும்புகிறேன்.

''திருத்தம் எண் 1967ல் கொண்டுவரப்படவுள்ள விதி 122ன் பிரிவு (2)ன் வரம்புரைக்குப் பதிலாக பின்வரும் வரம்புரையை சேர்த்துக் கொள்வது:

'இருப்பினும் இந்தப் பிரிவின் கீழ், ஊதியங்கள், படிகள், விடுப்புகள் அல்லது ஓய்வூதியங்கள் சம்பந்தமாக இயற்றப்படும் விதிகளுக்கு குடியரசுத் தலைவரின் அனுமதி அவசியமாகும்.''

**திரு. அவைத் தலைவர்:** இத்திருத்தத்திற்குத் திரு. கபூரின் திருத்தமும் ஒன்று உண்டு.

**திரு. ஜஸ்பத்ராய் கபூர்:** டாக்டர் அம்பேத்கர் தாக்கல் செய்துள்ள திருத்தத்தில் எனது கருத்தும் அடங்குவதால், எனது திருத்தத்தை நான் தாக்கல் செய்தல் தேவையற்றது.

(திருத்தங்கள் 1968, 1969 தாக்கல் செய்யப்படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** ஆக, டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஒன்றுதான் எஞ்சுகிறது. அவரது திருத்தத்திற்கு அவரே முன்மொழிந்துள்ள திருத்தத்தை முதலில் எடுத்துக் கொள்வோம்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நிலைமையைத் தெளிவு செய்வதற்காக முதலில் சில கருத்துகளை கூறிவிட விரும்புகிறேன். நீதித்துறைக்கு அரசு நிர்வாகத்

★ அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 27, பக். 397-99.

திலிருந்து கட்டற்ற சுதந்திரம் உண்டு என்பதைத் தெளிவாகவும் உறுதியாகவும் சட்ட வாயிலாக விதித்திட வேண்டுமென்பதைக் கொள்கையளவில், ஐயத்துக்கிடமின்றி இவ்வவை ஏற்றுக் கொண்டுள்ளது. அதே சமயத்தில், அருமை நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரி கூறியது போன்று நீதித்துறையின் சுதந்திரம் எனும் பெயரால் 'கட்டற்ற வல்லாண்மை' யொன்றைத் தோற்றுவித்துவிடக் கூடாதேயெனும் அச்சமும் நமக்கு உண்டு. நாம் 'கட்டற்ற வல்லாண்மை' எதனையும் ஏற்றுக்கொள்ளாமலேயே, அரசின் அச்சுறுத்தல், ஆசையூட்டல் போன்ற தாக்கங்களுக்குட்படாத சுதந்திரமான நீதித்துறையொன்றை நிறுவவே விரும்புகிறோம். விதி 122 இன் மூலவரைவுக்கு நான் தந்துள்ள திருத்தத்தினை நண்பர்கள் ஆழ்ந்து நோக்குவாரெனின், எனது திருத்தம் இடைப்பட்ட பாதை யொன்றை அமைக்க முனைவதைக் காணலாம். அது 'கட்டற்ற வல்லாண்மை' யொன்றைத் தோற்றுவிக்க மறுப்பதுடன், அவா, அச்சங்களுக்கு அப்பாற்பட்டு நேர்மையுடன் நீதிவழங்கத் தேவையான சுதந்திரத்தை நீதித்துறைக்கு அளிக்க முற்படுகிறது. இந்த விதியின் அனைத்துக் கூறுகளையும் நான் இங்கு விளக்கிப் பேச வேண்டியதில்லை; ஏனெனில் இவ்விதி குறித்த விவாதத்தின்போது பேசிய உறுப்பினர்கள் அனைவருமே புதிய விதியின் பலபிரிவுகள் யாவும் தவிர்க்கவியலாதவை என்பதை ஏற்றுக்கொண்டே பேசினர். குறிப்பாக விதியின் பிரிவுகள் (1), (3), இவற்றுடன்(2) ஐப் பற்றியும்கூட இக் கருத்தொற்றுமை நிலவக் கண்டோம். பிரிவு (2)ன் வரம்புரை குறித்து மட்டுமே கருத்து வேறுபாடு இருந்தது. மூல வரைவில் இப்பிரிவுகளில் குடியரசுத் தலைவரைக் கலந்தாலோசித்து தலைமை நீதிபதி இதை முடிவு செய்வார். குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் தலைமை நீதிபதி முடிவு செய்வார் என்று திருத்தம் கூறுகிறது. கேள்வி என்னவெனில், சம்பளம், படிகள் முதலானவை குறித்து விதி வகுக்கப்பட்டுள்ளது. திருத்தப்பட்ட வரைவில், உள்ளவாறு குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் தலைமை நீதிபதி முடிவெடுப்பாரா அல்லது மூல வரைவிலுள்ளபடி குடியரசுத் தலைவரைக் கலந்தாலோசித்துத் தலைமை நீதிபதி முடிவு செய்வாரா என்னும் இருமாற்றுகளுக்குள் எதைத் தேர்ந்தெடுப்பது என்பதையே நாம் முடிவு செய்ய வேண்டும். 'குடியரசுத் தலைவருடன் கலந்தாலோசனை' என்பதன் பொருள் இறுதி முடிவு தலைமை நீதிபதியின்

கையிலிருக்கும் என்பதே. மாறாகத் திருத்திய விதியில் உள்ள 'குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன்' எனக் கூறும்போது, இறுதி முடிவைக் குடியரசுத் தலைவரின் கையில் ஒப்படைக்க விரும்பு கிறோம் என்பதே பொருளாகும். இதைப் பற்றி முடிவு செய்யுமுன் நாம் இரண்டு கூறுகளைக் கருத்தில் கொள்ளவேண்டும். ஒன்று, கூட்டரசின் நீதிமன்றத்தின் தற்போதைய நிலை என்னவென்பது, நிறைவேற்றப்படாத, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத் தின் பிரிவு 216, துணைப் பிரிவு (2) இல் கவர்னர்-ஜெனரலின் ஒப்புதலுடன் என்ற சொற்கள்தான் இடம்பெற்றிருந்தன என்பதை அவையோருக்கு வருத்தத்துடன் நினைவூட்டுகிறேன். எனவே, இக்கண்ணோட்டத்தில் கருது வோமாயின், தற்போது நிலவும் விதிமுறையையே நீடிக்க முனைவோம். மேலும் 'குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன்' என்ற சொற்களை நாம் சேர்ப்பதற்கு மற்றொரு முக்கியமான காரணத்தையும் சுட்ட விரும்புகிறேன். அரசுப் பணியாளர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம், படிகள், ஓய்வூதியம் முதலான யாவும் சீராக அமைய வேண்டுமென்பதிலும், ஒரே தர நிலையைச் சார்ந்த பல்வேறு துறைப் பணியாளர்களின் ஊதியங்களில் பெருத்த வேறுபாடுகள் நிலவுவதில் விரும்பத் தக்கதன்று என்பதிலும் மாறுபட்ட கருத்துக்கள் இருக்க வியலாது. அப்படியிருந்தால், பணி யாளர்களில் ஒருசாரரிடையே பெருத்த மனக்கசப்புகள் நிலவவும், அரசின் கருவூலத்திற்குத் தேவையற்ற பளுவைச் சுமத்தவும் காரணியர்களாகி விடுவோம். நீதித்துறைப் பணியாளர்களின் சம்பளம், படிகள் முதலானவற்றை முடிவு செய்யும் அதிகாரம் தலைமை நீதிபதியிடமே விடப்பட்டால், அவர் பிற அரசுப் பணி யாளர்களின் ஊதியங்களிலிருந்து பெரிதும் வேறு பாடான ஊதிய விகிதங்களை முடிவு செய்வாரெனில் - அவ்வாறு நடக்கும் என்று உறுதியாக எண்ண வேண்டியதில்லை. சமதரத் துடன் வேறு அரசு ஊழியர்கள் பெறும் சம்பளங்கள் முதலானவற் றிலிருந்து அவை பெரிதும் வேறுபடல் விரும்பத்தக்கதன்று. எனவே தான், இத்தகைய நிலைமை உருவாதலைத் தவிர்க்கும் நோக்கில் கொண்டு வரப்பட்டுள்ள எனது திருத்தத்தை அவை ஏற்றுக்கொள்ளு மென்று நம்புகிறேன்.

எனது திருத்தத்தில் இடம் பெறாத இன்னொருகூறும் ஈண்டு சிந்திக்கத்தக்கது. இதைப் பற்றிப் பிற உறுப்பினர்களின் விவாத உரைகளிலும் கவனம் செலுத்தப்படவில்லை. புதிய விதி 122, பிரிவு (3) இல் உச்சநீதிமன்றத்திற்காகும் செலவினங்கள் இந்திய அரசின்

தொகுப்பு நிதியிலிருந்து செய்யப்படும் என நாம் விதி வகுத்துள்ளோமென்றாலும், நீதித்துறையின் சுதந்திரமான செயல்பாட்டை உறுதி செய்ய இதுமட்டுமே போதுமா என்பதில் ஐயத்திற்கு இடமுண்டு. எனது சொந்தக் கருத்தைக் கூறப்புகின், நீதித்துறையின் சுதந்திரமான செயல்பாட்டை உறுதி செய்ய இதுமட்டும் போதாதென்று கூறுவேன். குறிப்பிட்டதொரு செலவினம் நாட்டின் தொகுப்பு நிதியிலிருந்து செய்யப்படும் என்பதற்கு மிஞ்சிப்போனால் என்னதான் பொருள் இருக்க முடியும்? அந்தச் செலவினம் நாடாளுமன்றத்தில் வாக்களிப்புக்கு விடப்பட மாட்டாது என்பதைத் தவிரப் பெருத்த வேறுபாடு யாதுமில்லை. இத்தகைய செலவினங்கள் குறித்து நாடாளுமன்றம் விவாதம் செய்ய இடமுண்டே தவிர வாக்களிக்க இடமில்லை யென்று நாம் முன்னரே தெளிவுபடுத்தியுள்ளோம். எனவே, விதி 122, பிரிவு(3) இன்படி, ஆண்டுவாரி வரவு செலவுத் திட்டத்தில், நீதித்துறைக்கான செலவினங்கள் குறித்த பகுதி இடம்பெறுமேயன்றி இது நாடாளுமன்றத்தின் வாக்களிப்புக்கு விடப்பட மாட்டாது. இதைவிட மேலும் அடிப்படையான நிலையில் எழுப்பப்படற்குரிய முக்கியமான சிக்கல் ஒன்று உண்டு. உச்சநீதிமன்றத்தின் தேவைகள் யாவையென்பதை நிர்ணயிப்போர் யாரென்பதே அச்சிக்கல். இது முந்தைய சிக்கலை விடவும் முதன்மை வாய்ந்ததன்றோ? இதைப் பற்றி நமது அரசியலமைப்புச் சட்டத்தில் விதியேதும் வகுக்கப்படவில்லை. அதாவது, ஒவ்வோராண்டும் நீதித் துறைக்குத் தேவையான நிதி எவ்வளவென்பதை முடிவு செய்யும் பொறுப்பு அரசாங்கத்திடம் விடப்படுகிறது. இது சிக்கல் எழ வாய்ப்புத் தரும் நிலைமையென்பதால், குறைகளை திருத்த முயற்சி மேற்கொள்ளப்படுவது அவசியம். 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச்சட்டத்தின் பிரிவு 216 இன்படி, இப்பொறுப்பு கவர்னர் ஜெனரலின்பால் விடப்பட்டிருந்தது என்பதை மட்டும் இத்தருணத்தில் அவைக்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அதாவது, கூட்டரசின் சட்டமன்றத்தில் நிதிநிலை அறிக்கை அளிக்கும்போது, கூட்டரசின் நீதித்துறைச் செலவுகளுக்காக ஒதுக்கப்பட வேண்டிய நிதியின் அளவை கவர்னர் ஜெனரல் தமது சொந்த மதிப்பீட்டின் அடிப்படையில் முடிவு செய்ய அதிகாரம் வழங்கப்பட்டிருந்தார். எனவே, நீதிமன்றத்தைச் செம்மையாக நடத்தத் தேவையான செலவு என்னவென்பதில் ஆட்சித் துறைக்கும் நீதித்துறைக்குமிடையே கருத்து வேறுபாடு

தோன்றினால், கவர்னர்-ஜெனரலே குறுக்கிட்டு இறுதி முடிவினை எடுப்பார். நாம் உருவாக்க விரும்பும் அரசியலமைப்புச் சட்டத்தின் தன்மைக்கு இத்தகைய நிலைமை ஒத்துவர வியலாதது என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். நீதி நிர்வாகத்தைச் செம்மையாக நடத்துதற்குத் தேவையான நிதி, நீதித்துறைக்கு கிடைப்பதை உறுதி செய்வதற்கான தக்க வழிகளை நாம் விரைவில் காணவேண்டும் என்றும் கருதுகிறேன். ஆனால், அதற்காக இவ்விதி நிறைவேற்றப்படுதலில் தாமதம் ஏதும் தேவையில்லை என்றே எண்ணுகிறேன். பின்னொரு கட்டத்தில் இதனைக் குறித்து ஆய்ந்து தக்க வழி வகை காண வேண்டிய பொறுப்பு எஞ்சியுள்ளது என்பதை மட்டுமே இப்போதைக்குச் சுட்ட விரும்புகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் இரண்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. விதி 122, திருத்தப்பட்டவாறு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 124

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே, அரசியல் சட்ட வரைவின் இந்த விதியைக் குறித்து, இதற்காகக் கொடுக்கப்பட்டுள்ள திருத்த முன்மொழிவுகளையும் சேர்த்து நோக்கினால் என்னால் மனநிறைவு கொள்ள இயலவில்லை. இந்திய அரசியலமைப்புச் சட்டத்திலேயே இந்த அலுவலர் (தலைமைத் தணிக்கையாளர்) தான் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவர் என்று கருதுகிறேன். நிதி ஒதுக்கீடு சட்டத்தின் வாயிலாக நாடாளுமன்றம் அனுமதித்துள்ள வரம்புகளுக்கு மிகாமல் அரசுச் செலவினங்கள் அமைகின்றனவா என்பதைக் கண்காணிக்கும் பொறுப்பு உடையவர் இவரே. இவர் தமது கடமைகளைச் செம்மையாக நிறைவேற்ற வேண்டுமெனில், - இவரது பொறுப்புகள் நீதித் துறையின் பொறுப்புகளை விடவும் மிக முக்கியமானவை என்பது என் கருத்து - இவருக்கும் நீதித்துறைக்கு இருப்பது போன்றே சுதந்திரம் இருக்க

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 30, பக். 407-408.

வேண்டும். ஆனால் நீதித்துறை குறித்த விதிகளையும், தணிக்கைத் துறை குறித்த விதிகளையும் ஒப்புநோக்கினால், நீதித்துறைக்கு கொடுக்கப்பட்டிருப்பது போன்ற சுதந்திரம் தணிக்கைத் துறைக்குத் தரப்படவில்லையென்றே வருத்தத்துடன் கூற வேண்டியிருக்கிறது. உண்மையில் தணிக்கைத் துறைக்கு நீதித்துறையினை விடவும் கூட மிகுதியான சுதந்திரம் தரப்பட வேண்டுமென்பதே எனது உறுதியான கருத்து.

நீதித் துறைக்கு நாம் வழங்கியுள்ள நிலை, தணிக்கைத் துறைக்கு நாம் வழங்கியுள்ள நிலை இரண்டுக்கு மிடையிலான வேறுபாட்டை உணர்த்தும் ஒரு கூறினைச் சுட்ட முனைவேன். கடந்த வாரத்தில்தான், விதி 122க்கு நான் தாக்கல் செய்த திருத் தத்தில், உச்சநீதிமன்றத்திற்கு, அதற்குத் தேவையான அலுவலர் களையும் பணியாளர்களையும் நியமித்துக்கொள்ளும் அதிகாரம் தரப்பட்டுள்ளது. ஆனால் தணிக்கைத் துறை குறித்து மூலவரைவி லாகட்டும் திருத்தங்களிலாகட்டும் தலைமைத் தணிக்கையாள ருக்கு அத்தகைய அதிகாரம் ஏதும் தரப்படவில்லை. அதனால் தணிக்கைத் துறைக்குத் தேவையான அலுவலர்களையும் பணி யாளர்களையும் அரசாங்கமே நியமிக்கும் என்று பொருளாகிறது. அரசாங்கத்தால் நியமிக்கப்படுபவர்கள் அரசாங்க ஒழுங்கு நட வடிக்கைகளுக்குத்தான் கட்டுப்படுவார்கள் என்பது திண்ணம். இத்தகைய அதிகாரம் இல்லாத அலுவலர் ஒருவர் (தலைமைத் தணிக்கையாளர்) தமது உதவி அலுவலர்களிடமும் பணியாளர் களிடமும் செம்மையான முறையில் வேலை வாங்கி நிர்வாகத்தை நடத்தவியலாது என்பதைத் துளியும் ஐயம் இன்றிக் கூறுவேன்; அவரது நிர்வாகத்தில் சீர்கேடுகள் மிகுதியாய்க் காணப்படும். தலைமைத் தணிக்கையாளருக்கு இத்தகைய அதிகாரம் வழங்கப் படலாகாதென்பதற்கு, உறுப்பினர்களின் உணர்ச்சி மேலோங் கிய எண்ணப் போக்கே காரணமாயுள்ளது; அதனை ஒதுக்கி வைத்து விட்டுப் பொதுமக்களின் நலனில் முதன்மையான அக்கறை காட்டுவோம் எனில், தலைமைத் தணிக்கையாளருக்கும் அத்தகைய அதிகாரத்தை வழங்கத் தயங்க மாட்டோம். ஆனால் இப்போதைய சூழ்நிலையில் உறுப்பினர்களின் உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்து இப்போதைய வரைவோடு நிறைவடைய வேண்டியுள்ளது என்பதே எனது பொதுவான கருத்து.

இனித் திருத்தங்களை நோக்குவோம். திரு. டி.டி. கிருஷ்ண மாச்சாரியின் திருத்தங்களையும், திரு.பி.தாஸின் திருத்தம் எண் 1975 ஐயும் நான் ஏற்றுக்கொள்கிறேன். அரசியல் சட்ட வரை விலோ முன்மொழியப்பட்டுள்ள பிற திருத்தங்களிலோ காணப் படுவதைவிட மேம்பட்ட நிலையைத் தலைமைத் தணிக்கை யாளருக்கு வழங்க இவை முற்படுகின்றன. இத்திருத்தங்களுக்குப் பிறகு கூட, திரு. சித்துவா இக் குறிப்பிட்ட விதியில் குறை காண் பதை நோக்குகிறேன். அவரை நான் சரியாகப் புரிந்து கொண் டேன் எனில், தலைமைத் தணிக்கையாளர் அலுவலகத்திற்காகும் செலவுகளை நாட்டின் பொது நிதித் தொகுப்பிலிருந்து அனு மதிக்கக் கூடாதென்றும், அவை சாதாரணச் செலவுகளின் வகை யில் நாடாளுமன்றத் தீர்மானமாக நிறைவேறி அனுமதிக்கப் பட்ட செலவுகளாய் அமைய வேண்டுமென்றும் அவர் கருது வதாய்த் தோன்றுகிறது. அதாவது தலைமைத் தணிக்கையாளர் அலுவலகத்தின் நிருவாகச் செலவினங்களைக் குறித்து விவா திக்கும் உரிமை நாடாளுமன்றத்திற்கு மறுக்கப்படலாகாதென்ற நோக்கிலேயே அவர் அவ்வாறு கருதுகிறார். சிலவகைச் செல வினங்கள் நாட்டின் பொதுத் தொகுப்பு நிதியிலிருந்து அனுமதிக்கப் படுவதன் பொருளை அருமை நண்பர் புரிந்து கொள்ளவில்லை யென்று கருதுகிறேன். விதி 93 ஐ நண்பர் ஊன்றி நோக்குவா ரெனில், சிலவகைச் செலவினங்கள் பொதுத் தொகுப்பு நிதி யிலிருந்து அனுமதிக்கப்பட்டாலும் அவற்றைக் குறித்து விவா திக்க நாடாளுமன்றத்திற்கு உரிமை மறுக்கப்படவில்லை என்பதைக் காண்பார். ஆம்! நாடாளுமன்றத்திற்கு விவாதிக்கும் உரிமை உண்டு; ஆனால் வாக்களிக்கும் உரிமைதான் தரப்பட வில்லை. வாக்களிப்புக்குட்படாத செலவினம் அது. அவ்வாறு வாக்களிப்புக்குட்படாத செலவினமாக அதை விடுப்பதற்குத் தகுதியான நல்ல காரணமுண்டு. தலைமைத் தணிக்கையாளர் அலுவலகத்திற்கான தேவைகள் என்ன என்பதை நிர்ணயிப்பதில் அரசாங்கத்தின் குறுக்கீட்டை அனுமதிப்போமெனில், நாடாளு மன்ற உறுப்பினர்களில் பலர் சிக்கனம் பற்றிய தங்கள் வெவ் வேறு சொந்தக் கருத்துகளின் அடிப்படையில் வாதிட்டு, தணிக்கைப் பணி செம்மையாக நடைபெறுதற்குத் தேவையான அடிப்படை வசதிகளைக் குறைப்பதிலும் மறுப்பதிலும் கொண்டுபோய்விடக் கூடிய வாய்ப்புக்களைத் தவிர்ப்பதற்காகவே, இவ்வேற்பாடு தேவைப் படுகிறது. எனவே தணிக்கைப் பணியில் திறமையான

நல்ல நிருவாகம் நடப்பதில் தேவையற்ற குறுக்கீடுகளைத் தடுக்க தணிக்கை யலுவலகச் செலவுகள் நாடாளுமன்ற வாக்கெடுப்புக் குட்படாதவையாக இருத்தல் அவசியமே. இத்தகைய விதி ஒன்றும் புதிய சிறப்பு விதியல்ல வென்பதை அருமை நண்பர் சித்வா உணர வேண்டும். உச்ச நீதிமன்றத்திற்கான செலவினங்களைக் குறித்து இதே போன்றதொரு விதியை நாம் ஏற்கனவே இங்கு நிறைவேற்றி யுள்ளோம். எனவே, இத்தகைய விதியைப் பற்றித் திரு. சித்துவா குறை கூறுவதை அவை ஏற்றுக் கொள்ள வேண்டிய தில்லை யென்று கருதுகிறேன்.

ஐயா, இவ்விதியைத் திருத்தப்பட்டுள்ள நிலையில், நாம் நிறைவேற்றலா மென்று முன்மொழிகிறேன். இவ்விதிக்கு, பட்டியல் I இல் 25 ஆவது ஆக இடம்பெறும் திரு. பி. தாஸின் திருத்தம் எண் 1975, திரு.டி.டி.கிருஷ்ணாமாரி தந்துள்ள திருத் தங்கள் 130, 131 இவற்றுடன் பட்டியல் I இல் காணப்படும் திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் 25-C ஆகியவற்றை மட்டும் ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது திருத்தங்களை வாக் கெடுப்புக்கு விடுகிறேன்.

(கீழ்க்காணும் திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டன)

1. 'திருத்தங்களின் வரிசையில், அதிகாரம் 5, பகுதி 5 க்கான திருத்தம் எண் 1975 ஐயொட்டி, 'தலைமைத் தணிக்கையாளர்' என வருமிடங் களிளெல்லாம் (தலைப்பு உட்பட) மாற்றாக, 'தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளரும் தணிக்கையாளரும்' என்ற சொற்கள் இடம்பெற வேண்டும்.

2. 'விதி 124, பிரிவு (1) இல் 'குடியரசுத் தலைவர்' எனும் சொல்லை யடுத்து, 'தமது கையொப்பமும் முத்திரையும் பதித்த ஆணை கொண்டு' எனும் சொற்கள் இடம்பெற வேண்டும்.''

3. திருத்தங்களின் பட்டியலில் காணும் திருத்தம் எண் 1975 ஐ யொட்டி, விதி 124, பிரிவு (1) ஐ அடுத்து,

'(1-a) தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளரும் தணிக்கை யாளருமாக நியமிக்கப்பட்டவர் எவரும், தமது பதவிப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு முன்பாக, குடியரசுத் தலைவர் அல்லது அவரது சார்பில் நியமிக்கப்பட்ட நபரின் முன்னிலையில், இதற்கென வரைவு செய்யப்பட்டு மூன்றாம் அட்டவணையில் தரப்பட்டுள்ள வடிவத்தில் பதவியேற்பு உறுதிமொழியேற்றுக் கொள்ள வேண்டும் எனும் துணைப் பிரிவு சேர்க்கப்படலாம்.

4. கடந்த மூன்றாம் வாரத்தில், 1949 மே 29 ஆம் தேதியிடப்பட்ட திருத்தத் தீர்மானங்களுக்கான திருத்தங்களின் பட்டியல் I இல், திருத்தம் எண் 25-Aவுக்கு பதிலாக, கீழே தரப்படும் சொற்றொடர்கள் இடம்பெறலாம்.

'திருத்தங்களின் பட்டியலில் காணும், 1980 ஆம் திருத்தத்தையொட்டி, விதி 124 இன் பிரிவு (4) க்கு பதிலாகக் கீழ்வரும் பிரிவு இடம்பெறலாம்:

'4. பாராளுமன்றம் இயற்றும் சட்டங்களுடன் இசைவு மாறாத பாங்கில், தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளர் மற்றும் தணிக்கையாளரின் அலுவலக ஊழியர் அனைவரின் பணிவிதிகள் யாவும், தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளர் மற்றும் தணிக்கையாளரால் உருவாக்கப் பட்ட விதிகளின்படி அமையும்.''

5. திருத்தங்களின் பட்டியலில் காணப்படும் திருத்தம் எண் 1981 ஐ யொட்டி, விதி 124 இன் பிரிவு (5) க்கு பதிலாக,

'(5) தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளர் மற்றும் தணிக்கையாளர் உட்பட, பணியாளர் அனைவரின் சம்பளம், படிகள், ஓய்வூதியம் ஆகிய வற்றுடன், தலைமைக் கணக்குக் கட்டுப்பாட்டாளர் மற்றும் அவரது அலுவலகத்திற்காகத் தேவைப்படும் நிருவாகச் செலவுகள் அனைத்தும், இந்தியாவின், பொது நிதித் தொகுப்பிலிருந்து செய்யப்படும்' எனும் பிரிவு சேர்க்கப்படலாம்.

விதி 124, திருத்தப்பட்டவாறு அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 125

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 1986 ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

'விதி 125க்காக, ஏற்கனவே கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்திற்கு பதிலாக -

'விளக்கம் இந்த அரசியலமைப்புச் சட்ட விதியில் காணப்படும் 'நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம்' என்பதில், சட்டங்கள், அவசரச் சட்டங்கள், அமைப்பு விதிகள், ஒழுங்கு விதிகள் ஆகியன

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 30, பக் .412.

போன்று, இவ்வரசிய லமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வருமுன் இடைக்கால ஏற்பாடாக இயற்றப்பட்டுச் செயல்பாட்டில் இருக்கும் சட்டங் கள் அனைத்தும் அடங்கும் எனும் விளக்கத்தைச் சேர்க்கலாம்''

எனும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

தலைமைத் தணிக்கையாளர் பொறுப்புகளைக் கட்டுப் படுத்துவன நாடாளுமன்றம் இயற்றிய சட்டங்கள் அல்ல; 1935 ஆம் ஆண்டில் இந்திய அரசுச் சட்டத்தில் தமக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தி, கவர்னர்-ஜெனரல் இயற்றிய அவசரச் சட்டங்கள், அமைப்பு விதி, ஒழுங்கு விதிகள் ஆகியனவே என்பதை இந்த அவை நன்கு அறியும். அதன் விளைவாகவே, கவர்னர் - ஜெனரலால் இயற்றப்படும் அவசரச் சட்டங்கள், ஆணைகள், அமைப்பு விதிகள், ஒழுங்கு விதிமுறைகள் ஆகிய யாவும் முடங்கிவிடாது காப்பதற்காக இவற்றையும் உள்ளடக்கும் வகையில் விளக்கத்தை விரித்துரைத்தல் அவசியமாகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, நண்பர் குன்ஸ்ருவின் திருத்தத்தைப் பொறுத்த மட்டில் 'அல்லது மாநில ஏதேனும்'' எனும் சொற்களை அவர் கைவிடுவதாக இருந்தால், அவரது திருத்தத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்..........[2]

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** அவற்றை நான் விட்டு விட்டேன்.

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** ஏனெனில் மாநிலத் தணிக்கை யென்பது மாநில அரசுகளின் கட்டுப்பாட்டில் இருக் கும். எனவே, 'ஏனைய அதிகார அமைப்பு' எனும் சொல்லைச் சேர்த்தல் தேவையென்பதுடன், பயனுள்ளதாகவு மிருக்கும். அவரே குறிப்பிட்டவாறு, பொதுத்துறை நிறுவனங்களை நிருவகிக்க அரசுத் துறைகளால் இயலாதென்பதால், இவற்றை நிருவகித்து நடத்தத் தனிக் கழகங்கள் பலவற்றை உருவாக்குவதே இந்திய அரசின்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 30, பக் 414 - 15
2. புள்ளிகள் குறுக்கீடுகளைக் குறிக்கின்றன:

இன்றைய கொள்கையாகும். ஆதலால் இந்நிறுவனங்களின் கணக்கு களுக்குத் தணிக்கை ஏற்பாடு செய்தல் அவசியமாகிறது. இந் நிலைமை காரணமாகவே, இத்தகு கழகங்கள் அனைத்தின் கணக்கு களையும் தணிக்கை செய்வதற்காகத் தேவையான பணியாளர் களை நியமிக்கும் அனுமதியைத் தலைமைத் தணிக்கையாள ருக்கு வழங்கும் அதிகாரம் இந்திய அரசுக்கு வழங்கப்படவேண் டும். எனது ஆலோசனைப்படி மாற்றியமைப்பதாயிருப்பின் நான் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன்.

தலைமைத் தணிக்கையாளர்களின் பணிகளை வரையறுத் தல் தொடர்பான விதிகள் நடைமுறையிலுள்ளவாறே தொடர லாம் எனக்கூறும் எனது திருத்தத்தால், தலைமைத் தணிக்கை யாளரது பணிகளை வரையறுக்கும் அதிகாரம், அரசாங்கத்தின் கையிலேயே விட்டு விடப்படுகிறதென்று, அருமை நண்பர் சித்வா குறிப்பிட்டார். ஆட்சியாளர்களின் நிதி நிருவாகம் தொடர்பான செயல்பாடுகளைக் கண்காணித்துக் கட்டுப்படுத்த வேண்டிய அலு வலரின் பணிகளை ஆட்சியாளரே வகுப்பதென்பது முரண்பாடு கொண்ட வழிமுறையே என்பது தெளிவாய் விளங்குகிறது. அருமை நண்பர் சித்வாவின் கேள்விக்கு நான் ஒரேயொரு வகையில் மட்டும் தான் பதிலளிக்க வியலும். பொதுநிதியைக் கையாளும் முறைமை கள் குறித்து, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டம், பிரிவு 151 இல் காணப்படும் விதிமுறைகளே இங்கு பெரும் பாலும் எடுத்தாளப் பட்டுள்ளன. பிரிவு 166 இல் தலைமைத் தணிக்கையாளரின் பணிகளை வரையறுத்து கவர்னர்-ஜெனரல் உருவாக்கிய விதிகள் இடம்பெற்றுள்ளன. இங்கு கவர்னர்-ஜெனரல் உருவாக்கும் விதிகள் அவரது சொந்த மதிப்பீட்டின் அடிப்படை யில் உருவாக்கப்படுபவை தாமேயன்றி, அமைச்சரவையின் அறிவுரை கேட்டு அதன் அடிப்படையில் உருவாக்கப்பட்டவை யல்ல. எனவே, தலைமைத் தணிக்கையாளரின் பணி விதிகள் என்பன கவர்னர்-ஜெனரலால் அவரது சொந்த மதிப்பீட்டின் பேரில் உருவாக்கப்படுபவை. ஆகவே, தலைமைத் தணிக்கை யாளர் அரசாங்கத்தின் கட்டுகளுக்குட்படாது சுதந்திரமாகச் செயல்பட இயலும் என்பதில் ஐயமேதுமில்லை. ஆனால் இன்றைய தினம் நாம் வகுத்துக் கொண்டிருக்கும் அரசியலமைப்பில், குடியரசுத் தலைவர் விதிகளை எதையேனும் உருவாக்குதலோ,

திருத்தியமைத்தலோ அமைச்சரவையின் அறிவுரையின்படிதான் நிகழுமேயன்றிக் குடியரசுத் தலைவர் தாமாக முடிவெடுத்துச் செயல்படுவதற்கு வாய்ப்பு இல்லை. எனவே, அந்தவகையில் நாம் உருவாக்கியுள்ள விதி குறைபாடு கொண்டுள்ள தென்பதை ஏற்றுக்கொள்கிறேன். அதே சமயத்தில் அருமை நண்பர் சித்வா போன்றவர்கள் தொடர்ந்து நாடாளுமன்றத்திலும் இடம்பெற்றுப் பணியாற்றுவார்களென்பது உறுதியாதலால், மிக விரைவில் இக்குறையைக் களைய ஆவனவற்றை நாடாளுமன்றத்தின் வாயிலாகச் செய்வார்களென்று நம்புகிறேன். அதாவது விதிகளை அரசு இயற்றுவதற்குப் பதிலாக நாடாளுமன்றச் சட்டங்களாக இயற்று தற்கு முயல்வார்களென நம்புகிறேன்.

*(முன்னர் குறிப்பிட்ட டாக்டர் அம்பேத்கரது திருத்தத்துடன் பண்டித குன்ஸ்ரு முன்மொழிந்த கீழ்வரும் திருத்தத் தீர்மானமும் ஏற்றுக் கொள்ளப்பட்டது:)*

''விதி 130 பிரிவு (1)இல் 'இருக்கலாம்' என்ற சொல்லுக்கு முன்பாக, 'சமஸ்தான மக்களின் சார்பில்' எனும் சொற்கள் இடம் பெறலாம்.''

*(விதி 125, திருத்தியவாறு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 127

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, ''விதி 127இல் 'நாடாளுமன்றம்' எனும் சொல்லுக்கு பதிலாக,

''நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு அவையும்' எனும் சொற்கள் இடம் பெறலாம்'' என முன்மொழிகிறேன்.

இஃது ஒரு சம்பிரதாயமானத் திருத்தமே.

திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 30, பக் 415.

## விதி 130

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இவ்விதி ஒன்றிய அரசின் அமைச்சரவை அதிகாரங்களை வரையறுக்கும் 42 ஆம் விதியின் மறுபதிப்பே என்பேன். எவ்வித மாற்றமும் இன்றி சொல்லுக்குச் சொல் 42 ஆம் விதியின் மறுபதிப்பே இது. திருத்தங்களின் பதிவேட்டை நோக்கினால், 42வது விதிக்கும் இதே போன்ற திருத்தங்கள் தாக்கல் செய்யப்பட்டு, விரிவாக விவாதிக்கப் பட்டிருப்பதைக் காணலாம். விதி 42க்குக் கொடுக்கப்பட்டிருந்த திருத்தங்களின் மீது நடைபெற்ற விவாதத்தில் கலந்து கொண்டு நான் தெரிவித்த கருத்துக்களுக்கும் அப்பால் புதிதாகப் பயனுள்ள எதையும் இப்போது கூறவியலாது. எனவே, தாக்கல் செய்யப்பட் டுள்ள திருத்தங்கள் எவற்றையும் நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லையெனத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*(பேராசிரியர் கே.டி. ஷா, திரு. முகமது தாகி, திரு. நசிருதீன் அகமது ஆகிய மூவரின் திருத்தத் தீர்மானங்களையும் அவை தள்ளுபடி செய்தது).*

★ ★ ★

## விதி 131

[2]**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை எந்த வரிசையில் எடுத்துக் கொள்ளலாம் என்பதே நம் முன்னுள்ள வினா. தேர்தல் குறித்த சிக்கல்களை முதலில் முடித்து விடலாம் என்று கருது கிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** மாற்று முடிவைத் தேர்ந்தெடுப் பதை முன்மொழிந்தவருக்கு விட்டுவிடுவோம். முதலில் எதை முன்மொழிகிறார் என்று டாக்டர் அம்பேத்கர் கூறட்டும். நடை முறை வழக்குப்படி, விதிகள் ஒவ்வொன்றாக முன்மொழியப்பட

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 30, பக். 423.
2. அதே நூல், பக். 425

வேண்டும். அவைத் தலைவர் அனுமதித்தால், வரைவுக் குழுவின் தலைவரே, நிரல் முறையைத் தேர்ந்தெடுக்க அனுமதித்துச் சிக்கலைத் தீர்க்கலாம். இரண்டு மாற்றுகளில் ஒன்றை அவர் தேர்ந்தெடுக்கட்டும். இத்தகைய நடைமுறையே பின்னாளில் இயல்நடைமுறையாக ஏற்கப்படவுள்ளது. ஆகையால் முன்மொழி பவரின் உசிதத்துக்கு விட்டு விடுதலே உகந்தது. டாக்டர் அம்பேத்கர்தான் முன்மொழிந்தவர் என்று தாங்கள் ஒப்புக் கொண் டால், எதை முதலில் தாக்கல் செய்யலாமென்பதை அவரது முடிவுக்கே விட்டு விடுங்கள்.

**திரு. அவைத் தலைவர்:** பிற மாற்றுகளில் ஒன்றை ஏற்றுக் கொள்ள டாக்டர் அம்பேத்கர் தயாராக உள்ளாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பின்பற்றப் பட வேண்டிய நடைமுறை குறித்து ஒரு சொல் கூற அனுமதி வேண்டுகிறேன். விதி 131ஐ எடுத்துக் கொள்வோமாயின், அஃது பிறிதொரு மாற்று வடிவில் முன்வைக்கப்பட்டுள்ளது என்பதில் சற்றும் ஐயமில்லை. ஆனால் இரண்டு மாற்று வடிவங்களிலும் காணப்படும் பொதுவான கருத்து, ஆளுநர் தேர்தல் மூலம் தேர்ந் தெடுக்கப்பட வேண்டும் என்பதே. ஆளுநரைத் தேர்ந்தெடுப் பதற்கான தேர்தல் முறை என்னவென்பது இப்போதைக்கு சிறு சிக்கலே. விதி 131இன் வரைவுக்குக் கொடுக்கப்பட்டுள்ள மூன்று, நான்கு திருத்தங்களுமே ஆளுநர் பதவிக்குத் தேர்தல் நடத்துதலைக் கடுமையாக எதிர்க்கின்றன. ஆளுநர் என்பவர் நியமிக்கப்படுதல் வேண்டுமென்றும், திருத்தத்தை இந்த அவை ஏற்றுக் கொள்ளு மெனில், இரண்டு மாற்று வடிவுகள் தேவையின்மை காரணமாகத் தானாக விலகிவிடும். அவற்றில் அவை கவனம் செலுத்தத் தேவையிராது. எனவே, திரு. குப்தேயின் திருத்தம் எண் 2010ஐ முதலிலும், அடுத்துத் திரு. காமத்தின் திருத்தத்தையும், இரண்டை யும் அடுத்து, திருத்தம் எண் 2015ஐயும் எடுத்துக் கொள்வதே உகந்த தாகும் என்று கருதுகிறேன். இச்சிக்கலை முதலில் எடுத்துக் கொண்டு, ஆளுநர்கள் குடியரசுத் தலைவர்களால் நியமிக்கப்படுவர் எனும் கொள்கையை அவை ஏற்றுக்கொள்ளுமெனில், விதி 131ஐ அதன் இரு மாற்று வடிவங்கள் எதிலும் விவாதிப்பதென்பது பயனில்லாச் செயலேயாகும் எனும் எனது கருத்தைக் கூறி, முடிவை அவைத் தலைவரின் தீர்ப்புக்கு விட்டு விடுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா, குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படலாமா என்பது குறித்துப் பல திருத்தங்கள் தாக்கல் செய்யப்பட்டுள்ளன. ஆளுநரைத் தேர்ந்தெடுக்கும் முறைமை குறித்து மேலும் பல திருத்த தீர் மானங்கள் தாக்கல் செய்யப்பட்டுள்ளன. தேர்தல் தேவையா இல்லையா எனும் வினா குறித்து ஒரு முடிவெடுப்போமெனில், அதனுடன் தேர்தல் முறை குறித்த திருத்தங்களும் முடிவுக்கு வரும். பின்னர் நியமனம் என்பதை நாம் எடுத்துக் கொள்வோமெனில், அஃது குடியரசுத் தலைவரின் நியமனமாகவே இருக்கும்.

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர்:** (சென்னை: பொது): நியமனமா, இல்லையா என்ற பிரச்சினையை முதலில் எடுத்துக் கொண்டாலே தேர்ந்தெடுத்தல் எனும் கருத்து தானாக விலக்கப் பட்டுவிடும். எனவே, இப்பொருள் பற்றிய டாக்டர் அம்பேத் கரின் கருத்தை ஏற்றுக்கொள்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே, இத்திருத்தம் குறித்து நிகழ்ந்த நீண்ட விவாதத்திற்குப் பின், நானும் நீண்டதொரு உரை நிகழ்த்தி அவை யின் நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை. இரண்டு பொருள் களைப் பற்றித் தெளிவுபடுத்துவதற்காகவே, நான் இங்கு எழுந்தேன். ஒன்று, வரைவுக்குழு அவையின் முன் வைத்துள்ள இரு மாற்று வழிகளுக்கும், நேற்று முதல் இங்கு விவாதிக்கப்பட்டுவரும் 2015 ஆவது திருத்தத்திற்கும் இடையிலான பரஸ்பரத் தொடர்பு என்ன வென்பதை அவையின் முன் எடுத்துரைத்தல்; எனது இரண்டாவது நோக்கம், வரைவுக்குழு தந்துள்ள இரு மாற்று வழிகளுக்கும் புதிய திருத்தத்திற்குமிடையே ஒன்றைத் தேர்ந்தெடுப்பதில் அவை எதிர்கொள்ளும் மெய்யான சிக்கல் என்ன என்பதை அவைக்குத் தெளிவுறுத்தி, சரியான முடிவெடுக்க உதவுதல்.

வரைவுக்குழு தந்துள்ள முதலாவது மாற்று வழிமுறை சிறிது காலத்திற்கு முன்பாக, மாநிலங்களின் அரசியல் அமைப்பைக் குறித்த கோட்பாடுகளை வகுக்க இந்த அவையால் நியமிக்கப்

1. அ.நி. விவாதங்கள், தொகுதி VIII, 31 மே 1949, பக். 467-469.

பட்ட குழுவின் பரிந்துரைகளை அப்படியே பின்பற்றி எழுதப் பட்டதாகும். இதுகுறித்து அரசியலமைப்பு வரைவுக் குழுவுக்குப் பேரவை தரும் நெறிமுறைகளை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதே அதன் கடமைப் பொறுப்பாகும். அவ்வாறாயின் வேறொரு மாற்று வழிமுறையையும் வரைவுக்குழு சேர்க்கக் கருதியது ஏன் எனும் வினா எழுகிறது. வரைவுக்குழு வேறொரு மாற்று வழியைக் கருத முனைந்ததற்கான காரணம் இதுதான்: ஆளுநர் என்பவர், 'தமது தனிப் பொறுப்பிலோ, தமது மதிப் பீட்டு நோக்கிலோ எவ்விதமான பணியையும் செய்யுமாறு எதிர் பார்க்கப் படுபவரல்லர்' என்று இந்த அவை உறுப்பினர்கள் யாவரும் நன்கு உணர்ந்துள்ளவாறே, வரைவுக்குழுவும் உணர்ந் ததன் விளைவே இரண்டாவது மாற்று வழிமுறை. புதிய அரசிய லமைப்புச் சட்ட நெறிகளின்படி, எல்லா விஷயங்கள் குறித்தும் அமைச்சரவையின் அறிவுரையின்படியே ஆளுநர் செயல்பட வேண்டும். ஆளுநரின் நிலை இவ்வாறிருக்க, அவரைத் தேர்ந் தெடுப்பதற்கென்று ஏராளமான காலம், உழைப்பு இவற்றுடன் பணத்தையும் செலவிடுதல் தேவைதானா என்று கருதிப் பார்க்கப் பட்டது. மேலும், ஆளுநர் பதவிக்குள்ள வரம்புகள் இவைதான் என்று உணரப்பட்ட பின்னரும் தேர்தலுக்கு ஏற்பாடு செய்யப் படுகிறபோது இந்த அலங்காரப் பதவியைப் பெறுதற்குப் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டு போட்டியிடத் தகுதியானவர் எவரும் முன்வருதல் அரிது என்பதையும் வரைவுக்குழு எண்ணிப் பார்த்தது. இக்காரணங்களினால்தான் மாற்று வழிமுறையொன்றும் வரை வில் சேர்க்கப்பட்டது.

மேலும், இவ்வவையின் விவாதங்களின்போது, ஆளுநர், முதலமைச்சர் இருவருமே மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவரெனில், இருவருக்கிடையே அதிகாரப் போட்டி நிலவும் என்பதும், ஆளுநர் பதவிக்குத் தேர்தல் வேண்டியதில்லை என்பதற் கான காரணங்களில் ஒன்றாய் இது சுட்டிக்காட்டப்பட்டது. ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் இது ஏற்கத்தக்க வாதமாக எனக்குத் தோன்றவில்லை; எனது முடிவுக்கு இவ்வாதம் காரணமாய் அமைய வும் இல்லை. ஆளுநர் பதவிக்குத் தேர்தலே நடந்தாலும் கூட அதிகாரப் போட்டி எழக் காரணமில்லை; ஏனெனில் முதலமைச்சர் குறிப்பிட்ட கட்சிக் கொள்கையின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்

படுபவர், ஆனால் ஆளுநரோ எந்தக் கொள்கையின் அடிப்படையிலும் தேர்ந்தெடுக்கப்பட வாய்ப்பில்லை. ஆளுநர் பதவிக்கு அதிகாரமேதுமில்லை என்பதால், அவருக்கென்று கொள்கையேதும் இருக்கவியலாது. ஆளுநர் பதவிக்கு ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுதலென்பது அவரது ஆளுமைக்காகத் தேர்ந்தெடுக்கப்படுதலேயாம். ஒருவரது தகுநிலை, நன்னடத்தை, கல்வி, சமூகத்தில் அவருக்குள்ள மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் தான் ஆளுநர் பதவியை அவர் ஏற்பதற்குப் பொருத்தமானவரா என்பது முடிவு செய்யப் படும். ஆனால் முதலமைச்சர் பதவிக்கு வர விரும்புபவரைப் பற்றி நாம் கேட்க முனைவதெல்லாம், அவரது திட்டங்கள் ஏற்றவை தானா, நலம் பயப்பவைதானா என்பன போன்ற வினாக்களே. எனவே, தேர்தல் மூலமாகவே ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், முதலமைச்சருடன் அதிகாரப் போட்டியிலிறங்கக் காரணமில்லை.

மேலும் பெரும்பாலும் அலங்காரப் பதவியாகிய ஆளுநர் பொறுப்புக்கு ஒருவரை முடிவு செய்யத் தேர்தல் நடத்திப் பெருஞ் செலவும் கடும் உழைப்பும் செலவிடல் தேவைதானா எனும் வினா எழுகிறது. இக்காரணத்தினாலேயே, மாற்று வழிமுறையொன்றையும் வரைவுக்குழு பரிந்துரைக்க நேர்ந்ததெனலாம். இதுகுறித்து அவையில் நடைபெற்ற விவாதங்களை முழுமையாகக் கூர்ந்து நோக்கியதில், வரைவுக்குழுவின் இரண்டாவது (மாற்றுப்) பரிந்துரைக்கும், முன்மொழியப்பட்ட திருத்தத்திற்கும் கொள்கை ரீதியில் பெருத்த, முரண்பாடிருப்பதாகப் பல உறுப்பினர்கள் கருதுவதை உணர்கிறேன். எனது மதிப்பீட்டு நோக்கில் இவ்விரண்டுக்குமிடையே அடிப்படை வேறுபாடு ஏதுமில்லையென்றே கருதுகிறேன். வரைவுக்குழுவின் இரண்டாவது பரிந்துரையும் நியமனத்திற்கானதொரு வழிமுறைதான். அதாவது, எவ்வித நிபந்தனையுமின்றிக் குடியரசுத் தலைவர் நேரடியாக ஆளுநரை நியமனம் செய்வதற்கு பதிலாக, மாநிலச் சட்டமன்றப் பேரவையால் தேர்ந்தெடுக்கப்படும் பட்டியலிலிருந்து ஒருவரையே குடியரசுத் தலைவர் நியமனம் செய்யலாம் என இரண்டாம் (மாற்று) வழிமுறை கூறுகிறது. எனினும் அடிப்படையில் அது நியமனத்துக்கான வழிமுறையே. அந்த நோக்கில் வரைவுக்குழுவின் மாற்று வழிமுறைக்கும் திரு. பிராஜேஷ்வர் பிரசாத்தின் திருத்த முன்மொழிவுக்கும் அடிப்படை மாறுபாடேதும் கிடையாது. உண்மையில்

அவை முடிவு செய்ய வேண்டியது, நியமன ஆளுநரா, தேர்ந் தெடுக்கப்படும் ஆளுநரா என இரண்டில் ஒரு வழிமுறையைத் தான். திருத்த முன்மொழிவு நியமனத்துக்கு நிபந்தனை ஏதும் இருக்கக் கூடாதெனக் கூறுகிறது. மாறாக, வரைவுக்குழுவின் இரண்டாம் மாற்று வழியே, சில நிபந்தனைகளுக்குட்பட்ட நியமனம் என்று கூறுகிறது. ஒரு கண்ணோட்டத்தில் பார்க்கப் போனால், கட்டற்ற நேரடி நியமனம் என்பதைவிட, சட்டமன்ற பேரவையால் தேர்ந்தெடுக்கப்படும் பட்டியலில் இருந்து எனும் கட்டுப்பாட்டு நியமனமே மேலானதென்று கூறாதிருக்க என்னால் இயலவில்லை. அதே சமயத்தில், இந்த அவையின் முன்னேயுள்ள மெய்யான தேர்வு, நியமன ஆளுநரா அல்லது தேர்தல் வழித் தேர்ந்தெடுக்கப்படும் ஆளுநரா என்பதேயென அவைக்குச் சுட்டி எச்சரிக்க விரும்புகிறேன். ஆளுநர் பதவி வெறும் அலங்காரப் பதவியே என்பதால் அப்பதவியை அவர் எவ்வாறு அடைகிறார் எனும் வழியைத் தேர்ந்தெடுத்தல், மனோரீதியாக செய்யப்படும் முடிவுதானேயன்றி, அவருடைய தகுதி நிலையோடு எவ்வகை யிலும் தொடர்பு கொண்டதன்று. நேரடி நியமனம் என்பதை விட, அவரது நியமனத்தில் மாநிலச் சட்டமன்றத்திற்கும் ஒரு பங்கு உண்டு என்பது பொதுமக்களுக்குக் கூடுதலான மன நிறைவையளிக்கும் என்பதே எனது கருத்து. ஆனால் அதற்குமேல் இதற்குப் பொருளேதும் இல்லை. எனவே, அவை குறிப்பாக நோக்க வேண்டிய வினா தேர்தலா நியமனமா என்பதன்று; மாறாக ஆளுநர் பெறும் அதிகாரங்கள் யாவை என்பதை சுட்ட விரும்புகிறேன். ஆளுநர் என்பவர், நாமியற்றும் இச்சட்டத்தில் தெளிவாக வரையறுத்துத் தரவுள்ள அதிகாரங்களைத் தவிர வேறெந்த அதிகாரமும் இல்லாத அரசியல் சட்ட (அலங்கார) ஆளுநர்தான் என்பதால் மாநில அரசு விவகாரங்களில், மாநில அமைச்சரவையின் செயல்பாடுகளில் குறுக்கிடுவதற்கு அதிகாரம் ஏதுமற்றவரே அவர். ஆகவே, நியமனம் எனும் கருத்து குறித்து எனக்கு அடிப்படையில் எந்தவிதமான கருத்து வேறுபாடும் இல்லை. ஆகவே, நான் கூற விரும்புவது.....

**திரு. ரோகிணி குமார் சௌத்துரி:** ஆளுநர் என்பவர் வெறும் அடையாளச் சின்னமாகவே கூடக் கருதப்படலாம். ஆனால் முதன்முதலாக அமைச்சரவை ஒன்றை உருவாக்கும் சூழ்நிலை பற்றி நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அப்போது யாரை அமைச்

சரவை அமைக்க அழைப்பது என்பதை முடிவு செய்யும் தகுதியும் பொறுப்பும் ஆளுநருக்குத் தானே இருக்க முடியும். அழைக்கப் படுபவருக்குப் பெரும்பான்மை ஆதரவு உண்டா, அல்லது சிறு பான்மை ஆதரவுதான் உள்ளதா என்பதை மதிப்பிட்டு அதன் அடிப் படையில் அமைச்சரவை அமைக்க ஒருவரை அழைக்கும் அதிகாரம் பெரிய அதிகாரமல்லவா? அந்த அதிகாரத்தை ஆளுநருக்கு எவரும் மறுக்கவியலாது அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், நியமன ஆளுநராயினும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநர் ஆயினும் அந்த அதிகாரம் உண்டென்பதில் ஐயமில்லை. அவர் ஒருவேளை தவறான (போதிய ஆதரவில்லாத) நபர் ஒருவரை அமைச்சரவை அமைக்க அழைக்க நேரிட்டால், விரைவிலேயே தமது தவறை உணர்ந்து வருந்த வேண்டிய சூழ்நிலை உருவாகக் காண்பார். ஆளுநரைத் தேர்ந்தெடுப்பதால் மட்டும் இத்தகைய நேர்ச்சிகளை தவிர்த்துவிட இயலாது. தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநர்கூடத் தமது நண்பர் என்பதற்காக ஒருவரை அமைச்சரவை அமைக்க அழைக்கக் கூடும். அழைப்பு முறையானதுதானா என்பதை நம்பிக்கை வாக்கெடுப்பு, அல்லது நம்பிக்கையின்மை வாக் கெடுப்பு வாயிலாகச் சட்டமன்றப் பேரவைதான் முடிவு செய்ய இயலும். ஆனால் நாம் இப்போது முடிவு காண வேண்டியது அந்த அதிகாரத்தைப் பற்றியன்று; சட்டமன்றப் பேரவையில் பெரும் பான்மை ஆதரவு பெற்றுள்ள அமைச்சரவையில் ஆட்சி, நிருவாகச் செயல்பாடுகளில் குறுக்கிடுவதற்கு ஆளுநருக்கு அதிகாரம் தரப் படுமா என்பது பற்றித்தான் நாம் இங்கு விவாதித்துக் கொண் டிருக்கிறோம். பெரும்பான்மை வலிமை கொண்ட அமைச்சரவை யின் நிருவாகச் செயல்பாடுகளில் தலையிடும் அதிகாரம் ஆளுந ருக்கு இல்லையெனில், அவர் தமது பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டு வந்தாலும், நியமிக்கப்பட்டு வந்தாலும், அது ஒரு பொருட்டே அல்லவென்பது எனது கருத்து. இப்பொருள் பற்றிய எனது கண்ணோட்டம் இத்தன்மையதே என்பதைக் கூறுவதுடன், ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா அல்லது நியமிக்கப்பட வேண்டுமா என்பது ஒரு கருத்தோட்டம் சார்ந்த முடிவுதான் என்பதன் அடிப்படையிலேயே இவ்வினாவுக்கு முடிவுகாண முயல வேண்டும் என்பதையும் அவைக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஆனால், நாம் கூர்ந்து கவனம் செலுத்த வேண்டிய

வினாவோ, 'ஆளுநருக்குத் தரப்பட வேண்டிய அதிகாரங்கள் எவை?' என்பதே. ஆனால், அந்த வினா நமது இன்றைய விவாதப் பொருளுக்கு அப்பாற்பட்டது. விதிகள் 175, 188 ஆகியவற்றைக் குறித்த விவாதத்தின்போது இதனை விரிவாகவே ஆய்வு செய்ய லாம். அங்கு அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் (வரைவு) அதிகாரங்களை மாற்றுவதோ, கூட்டுவதோ திருத்தத் தீர்மானங் கள் வாயிலாக முடிவு செய்யப்படலாம். இந்தப் புதிய விதிகள் வரும்போது, அவையோர் விழிப்போடு கூர்ந்து நோக்கிச் செயல் படலாம் எனத் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே, இப்போதைய நிலையில், ஆளுநர் நியமிக்கப்படினும் தேர்ந்தெடுக்கப்படினும் அவர் அரசியலமைப்பு (அலங்கார) ஆளுநராகவே விளங்குவார் எனும் அடிப்படையிலேயே இன்று நாம் அரசியலமைப்புச் சட் டத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறோமாதலால், அமைச்சரவை யின் அன்றாட ஆட்சிச் செயல்முறைகளில் குறுக்கிட அதிகார மில்லாத பதவி யொன்றுக்கு ஒருவர் நியமிக்கப்படுகிறாரா, தேர்ந் தெடுக்கப்படுகிறாரா எனும் வினாவே ஒரு பொருட்டல்ல என்று நான் உறுதியாகக் கூறுகிறேன்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** மாண்புமிகு உறுப்பினர் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை அவையே முடிவு செய்யட்டும்.

**திரு. அவைத் தலைவர்:** திரு. பிராஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தத் தீர்மானம் எண் 2015 வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது. தீர்மானத்தின் வாசகமாவது:

> ''விதி 131 இன் வரைவுக்குப் பதிலாக:
>
> '131. மாநில ஆளுநர்கள் குடியரசுத் தலைவரால், கையொப்பமும் முத்திரை யும் கொண்ட ஆணையால், நியமிக்கப்படுவர்'
>
> எனும் விதி இடம்பெறும்''

தீர்மானம் அவையால் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

**திரு. அவைத்தலைவர்:** இம்முடிவை யடுத்து, விதி 131க்கு முன்மொழியப்பட்ட ஏனைய திருத்தத் தீர்மானங்கள் அனைத்தும் பொருளிழந்து போகின்றன. எனவே, விதி 131ஐ தற்போதைய திருத்தத்துடன் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

விதி 131, திருத்தப்பட்டுள்ளவாறு அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.

★ ★ ★

## விதி 132

[1]**திரு. அவைத்தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தத் தீர்மானத்தினை எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்வரும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்:

> ''விதி 132க்கான திருத்தங்களின் பட்டியலில், திருத்தத் தீர்மானங்கள் 2033, 2041 ஆகியவற்றையொட்டி:
>
> 'ஆளுநரின் பதவிக் காலம்: 132(1) குடியரசுத் தலைவரின் ஆதரவு உள்ளவரை ஆளுநர் பதவிப் பொறுப்பில் இருப்பார்;
>
> (2) ஆளுநர் பதவி விலக விரும்பினால், குடியரசுத் தலைவருக்கு எழுத்து மூலம் தெரிவித்து விட்டு விலகலாம்;
>
> (3) மேற்கண்ட வரம்புகளுக்குட்பட்டு, ஆளுநர், தாம் பதவியேற்ற நாளி லிருந்து ஐந்து ஆண்டுகளுக்குப் பதவிப் பொறுப்பில் இருக்கலாம்;
>
> மேலே விதிக்கப்பட்டவாறு பதவிக் காலம் முடிவுக்கு வந்தாலும், புதிய ஆளுநர் பதவியேற்கும் வரை, அவர் தொடர்ந்து தமது பதவிப் பொறுப்பில் இருப்பார்';
> எனும் விதியைச் சேர்க்கலாம்''

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 31, பக் 470.

இந்த விதியானது..........[1]

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** இங்கு ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்புகிறேன். தீர்மானம் 2033 முன்மொழியப்பட வில்லை. இத்தீர்மானம், திருத்தத் தீர்மானம் 2041க்கான திருத்தத் தீர்மானமே. தீர்மானமும் முறையாகத் தாக்கல் செய்யப்படவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** ஆம். அத்தீர்மானம் தாக்கல் செய்யப்படவில்லை.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** திருத்தத் தீர்மானம் எண் 2041, டாக்டர் அம்பேத்கர் பெயரில்தான் உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** அவ்வாறாயின் அவர் அதை முறை யாகத் தாக்கல் செய்யலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்தத் தீர் மானம் (எண். 2041)க்குப் பதிலாகவே இதனைத் தாக்கல் செய்வ தாகக் கூறினேன்.

**திரு. அவைத் தலைவர்:** எனில் அம்பேத்கர், இப்போது திருத்தம் எண் 2041 ஐத் தாக்கல் செய்கிறார்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, தற்போதைய தெளிவான நிலையை உரைக்க விரும்பு கிறேன். ஆளுநரைப் பதவி நீக்கம் செய்வதற்கான அதிகாரம், குடியரசுத் தலைவருக்குப் பொதுப்படையாகத்தான் கொடுக்கப் பட்டுள்ளது. ஆனால், எந்தெந்தக் காரணங்களுக்காக ஆளுநர் பதவி நீக்கம் செய்யப்படலாம் என்பதை வெளிப்படையாக உரைக்க வேண்டுமென்று பேராசிரியர் ஷா கோருகிறார். குடியரசுத் தலைவ ருக்குப் பொதுப்படையாகக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தைக் கொண்டே, ஊழல், கையூட்டு, அரசியலமைப்புச் சட்டத்திற்குப் புறம்பான (மீறிய) செயல்பாடு உட்பட நியாயமான எக்காரணத் திற்காக வேண்டுமெனினும் ஆளுநரைப் பதவியிலிருந்து நீக்க

1. புள்ளிகள் குறுக்கீட்டை சுட்டுகின்றன.
2. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 31, பக். 474.

முடியும். எனவே, ஆளுநர் பதவி நீக்கத்திற்கான காரணங்கள் இவை (தாம்) என்று பட்டியலிடுவதன் வழி அரசியலமைப்புச் சட்டத்தின் மீது வரம்பு சுமத்துதல் தேவையற்றதென்றே கருது கிறேன். 'குடியரசுத் தலைவரின் ஆதரவு இருக்கும் வரை' என்று ஆளுநரின் பதவிக் காலம் வரையறுக்கப்பட்டிருப்பதே, நாம் கருத முனையும் எந்தவொரு (தகாத செயல் புரிந்த) காரணத்திற்காக வும் ஆளுநரைப் பதவி நீக்கம் செய்யப் போதுமானதாகும். எனவே, குடியரசுத் தலைவர் என்னென்ன காரணங்களுக்காக ஆளுநரைப் பதவிநீக்கம் செய்யலாம் என்று வகைப்படுத்திப் பட்டியலிடுதல் தேவையற்றதென்று கருதுகிறேன்.

*(மேற்கொடுத்துள்ளவாறு டாக்டர் அம்பேத்கரின் திருத்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்டவாறு விதி 132 அரசியலமைப்புச் சட்டத் தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 134

[1]**திரு. அவைத் தலைவர்:** முதலாவது மாற்று வழிமுறையை நாம் கைவிட்டு விட்டோம். இரண்டாம் மாற்று வழிமுறை குறித்த திருத்தத் தீர்மானங்களிலேயே இப்போது கவனம் செலுத்த வேண்டும். டாக்டர் அம்பேத்கர் பெயரிலுள்ள 164 ஆம் திருத்தம் இவற்றை உள்ளடக்குகிறதென்று கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''விதி 134க்கான திருத்தங்களின் பட்டியலில், திருத்தம் 2061இன் அடிப் படையில், வரைவுக்கு மாற்றாக:-
>
> **ஆளுநர் பதவிக்கான தகுதிகள்:** 'முப்பத்தைந்து வயது நிறைவுற்ற இந்தியக் குடிமக்கள் தவிரப் பிறிதெவரும் ஆளுநர் பதவிக்கு நியமிக்கப் படும்தகுதி பெற்றவரல்லர்.'
>
> தீர்மானம் முறையாகத் தாக்கல் செய்யப்பட்டதாய்க் கருதலாமா?

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 31, பக். 475.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** திருத்தத் தீர்மானத்திற்குப் பதிலாக வேறொன்று தாக்கல் செய்யப்பட அவையும் அவைத் தலைவரும் அனுமதி வழங்கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத் தீர்மானத்தை முழுமையாக வாசிக்க வேண்டியதில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திருத்தத் தீர்மானம் எண். 2061ஐத் தாக்கல் செய்கிறேன். மேலும் திருத்தம் 2061இல் கொடுக்கப்பட்டிருக்கும் வாசகத்திற்குப் பதிலாக, பின்வரும் வாசகம் இடம் பெறலாமென்றும் தாக்கல் செய்கிறேன்:

> ''**ஆளுநர் பதவிக்கான தகுதிகள்:** முப்பத்தைந்து வயது நிரம்பிய இந்தியக் குடிமகன் அல்லாத எவரும் ஆளுநராக நியமிக்கப்பெறும் தகுதி பெற்றவர் அல்லர்''

*(தீர்மானம் ஏற்கப்பட்டது. திருத்தப்பட்டவாறு விதி 134 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 135

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> ''விதி 135, பிரிவு (1)இல் இடம்பெறும் 'நாடாளுமன்றத்தின் அல்லது' என்ற சொற்களுக்கு பதிலாக,
>
> 'நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் ஒன்றன் உறுப்பினராகவோ அல்லது ஓரவையின்' எனும் சொற்கள் இடம் பெறலாம்' என்று முன்மொழிகிறேன்.
>
> இது ஒருமுறைசார் திருத்தமே.
>
> மேலும்,

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 31, பக். 476.

''விதி 135 பிரிவு (1)இல்

(a) 'நாடாளுமன்ற உறுப்பினர் அல்லது' எனும் சொற்களுக்குப் பதிலாக, 'நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் ஒன்றன் உறுப்பினராகவோ அல்லது ஓரவையின்' எனும் சொற்கள் இடம்பெறலாமென்றும்,

(b) நாடாளுமன்றமோ அல்லது தொடர்புள்ள சட்டமன்றமோ' என்ற சொற்களுக்கு பதிலாக, 'அந்த அவையில்' எனும் சொற்கள் இடம் பெறலாமென்றும்'' முன்மொழிகிறேன்.

மேலும்,

''விதி 135, பிரிவு (2)இல் 'சம்பள நிலைமை குறித்து' எனும் சொற்களுக்கு பதிலாக, 'ஊதியம் குறித்து' எனும் சொற்கள் இடம் பெறலாம்' என்றும் முன்மொழிகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** (மத்திய மாநிலம்: பீரார்: பொது): தலைவர் அவர்களே,

''விதி 135, பிரிவு (3)இல் 'ஆளுநருக்கென்று அலுவலக வசிப்பிடம் இருக்கும், மேலும் எனும் சொற்கள் நீக்கப் படலாம்' என முன்மொழி கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** 'அங்கே' எனும் சொல்லும் நீக்கப் படலாம்.

**திரு. எச்.வி. காமத்:** 'அங்கே' எனும் சொல் இருந்தாக வேண்டும்... டாக்டர் அம்பேத்கரும், வரைவுக்குழு உறுப்பினர் களும் எந்த நாட்டு அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து கருத்துக் களைப் பெறுகிறார்களென்று தெரியவில்லை.

**மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்:** அயர்லாந்து நாட்டு அரசியலமைப்புச் சட்டத்திலிருந்துதான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** குடியரசுத் தலைவரைக் குறித்த விதி 48ஐ இதே முறையில்தான் வகுத்தேன். விதி 48ஐ அப்படியே அடியொற்றித்தான் இவ்விதியையும் உருவாக்கியுள்ளோம்.

★ ★ ★

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் அனைத்தும் ஏற்கப் பட்டன. ஏனைய திருத்தம் தள்ளுபடி செய்யப்பட்டது).*

★ ★ ★

*(விதி 135 திருத்தப்பட்டவாறு ஏற்கப்பட்டு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

[1]**திரு. அவைத்தலைவர்:** விதி 135க்குப் பின்னர் புதிதாக விதியொன்று சேர்க்கப்படலாம் எனும் பேராசிரியர் ஷாவின் தீர் மானமும் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாம் அடுத்த திருத்தத்தை எடுத்துக்கொள்ளும் முன்பாக, விதி 135இல் 'தேர்ந் தெடுக்கப்படலாம்' எனும் சொல் நீக்கப்பட வேண்டுமென்பதைக் கூற விரும்புகிறேன்.

**அவைத் தலைவர்:** (நீக்கப்பட வேண்டியதுதான்) என்பது தெரிந்ததே.

## விதி 136

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> ''விதி 136இல், 'மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களின் முன்னிலையில்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'மாநிலத்தின் மீது அதிகார வரம்புள்ள உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியின் முன்னிலையிலோ, அவர் இல்லாத நிலையில், உயர்நீதிமன்றத்தின் வேறொரு நீதிபதியின் முன் னிலையிலோ' எனும் சொற்கள் இடம்பெறலாம்''

என்று முன்மொழிகிறேன்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 மே 31, பக் 482.
2. அதே நூல், அதே பக். 484

**திரு. அவைத் தலைவர்:** நானறிந்த வகையில், திருத்தங்கள் 2107, 2108, 2109 ஆகியவை தாக்கல் செய்யப்படவில்லை. தாக்கல் செய்யப்பட்டுள்ள திருத்தங்கள் குறித்து, டாக்டர் அம்பேத்கர் ஏதும் பதிலளிக்க விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்துள்ள திருத்தத்தையும், நண்பர் காமத் முன்மொழிந்துள்ள திருத்தத்தையும் ஏற்றுக்கொள்கிறேன்.

(டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொண்ட திருத்தங்கள் கீழே தரப்படுகின்றன:)

''திருத்தங்களின் பட்டியலில் தீர்மானம் 2104ஐ யொட்டி,

''விதி 136இல், மாநில சட்டமன்ற உறுப்பினர்களின் முன்னிலையில்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'மாநிலத்தின் மீது அதிகார வரம்பு கொண்ட உயர் நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியின் முன்னிலையிலோ, அவர் இல்லாத நிலையில், உயர்நீதிமன்றத்தின் அடுத்த மூத்த நீதிபதியின் முன்னிலையிலோ' எனும் சொற்கள் இடம் பெறலாம்''

திருத்தங்களின் பட்டியலில் தீர்மானம் 2106ஐ யொட்டி

''விதி 136இல்'' - ஆகிய நான் மெய்யாக உறுதிகூறுகிறேன்'' என்ற சொற்களுக்கு பதிலாக,

கடவுள் மீது ஆணையாக உறுதி கூறுகிறேன்

''.................. ஆகிய நான் ————————————

மெய்யாக உறுதி கூறுகிறேன்

என்பன இடம் பெறலாம்''.

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணம்: பொது): உறுதிமொழி வாசகம் எவ்வாறு அமைந்துள்ளது?

''நான் கடவுள் மீது ஆணையாக உறுதி கூறுகிறேன்'' என்றா? அல்லது, ''நான் மெய்யாக உறுதி கூறுகிறேன்'' என்றா? இங்கு எழும் சிக்கல் என்னவென்றால், ஆளுநர் கடவுளின் பெயரால் உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சிலர் நினைக்கலாம். ஆனால், நாட்டில் நாத்திகர்களும் பலர் உள்ளனர் என்பதை மறந்துவிடக் கூடாது (குறுக்கீடுகள்). (அவைத் தலைவர் உறுதிமொழி வாசகத்தைப் படித்துக் காட்டுகிறார்). மாற்று வழிமுறையொன்றும் தரப்பட்டிருப்பதைக் காண்கிறேன். அதைத்தான் நான் அறிந்து கொள்ளவும் விரும்பினேன். கடவுளின் பெயரால்

உறுதிமொழி எடுத்துக்கொள்ள விரும்பாத எவரையும் அவ்வாறு செய்யுமாறு கட்டாயப்படுத்தக் கூடாது.

**திரு. அவைத்தலைவர்:** நிச்சயமாகக் கட்டாயப்படுத்தப் பட மாட்டார்கள். தற்போது,

> ''திருத்தப்பட்டவாறு விதி 136 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் படலாம்''

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

*(தீர்மானத்தை அவை நிறைவேற்றியது)*

★ ★ ★

*விதி 136, திருத்தப்பட்டவாறு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. அவை 1949 ஜுன் 1 ஆம் தேதி எட்டு மணி வரை ஒத்திவைக்கப்பட்டது.*

## விதி 137

[1]**திரு. அவைத் தலைவர்:** இன்று, விதி 137 இல் தொடங்கு கிறோம். இவ்விதிக்கு, திரு. பிராஜேஷ்வர் பிரசாத் அறிக்கை கொடுத் துள்ள திருத்தத் தீர்மானம் ஒன்று உள்ளது. ஆனால் அஃதொரு எதிர்மறைத் தீர்மானமே.

*(திருத்தம் 2111 தாக்கல் செய்யப்படவில்லை)*

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** *(சென்னை: பொது):* நாம் ஏற்கெனவே எடுத்துள்ள முடிவின்படி, இவ்விதியை இப்போது தாக்கல் செய்வதியலாது.

**திரு. பிராஜேஷ்வர் பிரசாத்** *(பீகார்: பொது):* அது, அவை யின் வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டும்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜுன் 1, பக் 487.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்; அது அவையின் வாக்கெடுப்புக்கு விடப்படலாம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத் தீர்மானங்கள் எவையுமே தாக்கல் செய்யப்படப் போவதில்லை என்று நான் எடுத்துக் கொள்கிறேன்.

*(அரசியலமைப்புச் சட்ட வரைவிலிருந்து, விதி 137 நீக்கப்படுகிறது)*

★ ★ ★

## விதி 143

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, திரு. காமத்தின் இந்தத் திருத்தத்தைப் பற்றி எனதருமை நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரி பேசியதற்குப் பிறகு, நானும் இவ்விவாதத்தில் கலந்து கொண்டு பேசுதற்குத் தேவையேதும் இராதென்றே கருதினேன். ஆனால், அருமை நண்பர் பண்டித குன்ஸ்ரு பேசும்போது, குறிப்பாக என்னைச் சுட்டியே பேசி, நான் பதிலளிக்க வேண்டும் எனக் கோரியதால், அவரது கோரிக்கையை மதிக்கும் வகையில் சில சொற்கள் கூறவே எழுந்துள்ளேன். ஐயா, தற்போதைக்கு முக்கியமான, நெருக்கடியான வினா என்னவென்றால், முடிவெடுத்துச் செயல்படும் அதிகாரம் ஆளுநருக்குத் தேவையா என்பதுதான். அதுவே தலையாய முதன்மை வினாவாகும். எனவே, இந்தச் சிக்கலைக் குறித்து முடிவொன்றை எய்திய பிறகுதான், விதி 143, பிரிவு (1)இன் இறுதிப் பகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்களை இருத்திக் கொள்ளலாமா அல்லது வேறெந்தப் பகுதிக்கேனும் மாற்றி விடலாமா எனும் வினாவைப் பயனுள்ள முறையில் எடுத்துக் கொள்ள முடியும். எனவேதான், முதலில் நான் முதன்மை வாய்ந்ததும், நெருக்கடியானதும் எனக் குறிப்பிட்ட வினாவுக்கு வருகிறேன். விவாதத்தின் போது, ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரம் வழங்குதல் என்பது பொறுப்பான மாநில அரசாங்க முறைமைக்கு ஒவ்வாதது என்று

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 31, பக் 500 - 02.

பேசப்பட்டது. மேலும் ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரம் தருதல் என்ற கருத்தில், மக்களாட்சி முறைக்குப் பெரிதும் முரணான 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தின் வாடை வீசுவதாகவும் கூறப்பட்டது. என்னுடைய கண்ணோட்டத்தைக் கூறுவதெனில், முடிவெடுக்கும் அதிகாரங்கள் சிலவற்றை ஆளுநருக்கு அளித்தல் எந்த வகையிலும் பொறுப்பான அரசாங்கம் எனும் கோட்பாட்டிற்கு முரணானதன்று. இந்தச் சிக்கல் குறித்து நான் விவாதத்தில் ஈடுபட விரும்பாமைக்குக் காரணம், ஆஸ்திரேலிய, கனடிய நாட்டு அரசியலமைப்புச் சட்ட விதிகளிலிருந்து எடுத்துக் காட்டுகளுடன் அவையோரை எளிதில் இசைவிக்க முடியும் என்று நம்புகிறேன். கனடா நாட்டு அரசாங்க முறையோ, ஆஸ்திரேலிய நாட்டு அரசாங்க முறையோ பொறுப்பாட்சி முறைகள் அல்லவென்று இவ்வவையில் எவரும் கூற முன்வர மாட்டார்களென நம்புகிறேன். எனது கூற்றை உறுதி செய்ய, கனடா நாட்டு அரசியலமைப்புச் சட்டத்தின் 55வது பகுதியைப் படித்துக் காட்ட விரும்புகிறேன்.

> ''பிரிவு 55: நாடாளுமன்ற அவைகளால் நிறைவேற்றப்பட்ட மசோதா ஒன்று, அரசியாரின் ஒப்புதல் வேண்டி, கவர்னர்-ஜெனரலுக்கு அனுப்பி வைக்கப்படும்போது, அவர் மசோதாவின் பொருளைக் குறித்த அவரது முடிவினை யொட்டி, அரசியாரின் சார்பில் மசோதாவுக்கு ஒப்புதல் வழங்கவோ மறுக்கவோ, அரசியாரின் முடிவு வேண்டி மேலனுப்பவோ அதிகாரம் உள்ளவர்.''

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** இந்த பிரிட்டிஷ் வட அமெரிக்கச் சட்டம் எப்போது இயற்றப்பட்டது என்பதை டாக்டர் அம்பேத்கரிடமிருந்து அறியலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அஃதொன்றும் பொருட்டு அல்ல. சட்டம் இயற்றப்பட்ட தேதியொரு பொருட்டே யல்ல.

**திரு. எச்.வி. காமத்:** ஒரு நூற்றாண்டுக்குப் பக்கமாக இருக்கும்!

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இருப்பினும், ஆஸ்திரேலியர்களோ, கனடியர்களோ, தமது அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து இத்தகைய விதி நீக்கப்பட வேண்டியது தேவை

யென்று இன்றுவரை கருதவில்லை என்பதே எனது பதில். கனடிய நாட்டுச் சட்டத்தின் 55வது பிரிவு பொறுப்பாட்சி முறையுடன் நன்கு இயைந்து போகிறது என்பதில் அவர்கள் முழுநிறைவோடு இருக்கின்றனர். அவ்விரு நாடுகளும் டொமினியன்களாக இருந்த போதிலும், பொறுப்பான ஆட்சி எனும் குறிக்கோளுக்கு இவ்விதிகள் ஒத்துவரா எனக் கருதினால், எப்போது வேண்டுமானாலும் விலக்கிக் கொள்ள முழு உரிமை படைத்திருந்தும் அவர்கள் அவ்வாறு செய்யவில்லை. எனவே, பண்டித குன்ஸ்ருவுக்கு விடையாக, ஆஸ்திரேலிய, கனடிய மக்கள் பொறுப்பான அரசாங்க முறைமைக்கு இந்த விதிகள் ஒருபோதும் இடையூறிருப்பதாய்க் கருதவில்லை என்றே கூற விரும்புகிறேன்.

**திரு. லோகநாத் மிஸ்ரா:** (ஒரிசா: பொது): ஐயா, இங்கே ஒழுங்குப் பிரச்சினை ஒன்றை எழுப்புகிறேன். நமது நாட்டில் தகுநிலையும் ஆஸ்திரேலியா, கனடா ஆகியவற்றைப் போன்றுதான் இருக்குமா? நாம் ஒரு குடியரசு நாட்டுக்கான அரசியலமைப்புச் சட்டத்தை உருவாக்கவில்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர் என்ன கூறுகிறார் என்று எனக்குப் புரியவில்லை. ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் சில கொடுக்கப் படுவதால் பொறுப்பான அரசாங்க முறைக்கு இடர்ப்பாடு ஏதும் நேராதென இந்த அவை கருதுமெனில், இவ்விதியை இருத்திக் கொள்ளல் விரும்பத்தக்கது என்பதுமன்றித் தேவையானதும் என்பது உறுதி. அடுத்து எழக்கூடிய ஒரே சிக்கல்...

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** இங்கு குறைகூறப்படுவது எதைப் பற்றியென்பதை டாக்டர் அம்பேத்கர் சரியாகக் கவனிக்கவில்லை போலும். விதி 175இன் கீழ் ஆளுநருக்குச் சில அதிகாரங்கள் கொடுக்கப்படுதல் குறித்து இங்கே குறைகூறப்படவில்லை. ஆனால் இவ்விதியில் பொதுப்படையான முறையில் சில முடிவெடுக்கும் அதிகாரங்கள் அவருக்குக் கொடுக்கப்படுதல் பற்றியே இங்கு குறைகூறப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்தான் இந்த விதியைச் சரியாகப் படிக்கவில்லை யென்று கருதுகிறேன். தற்போது

*அரசியலமைப்புச் சட்ட வரைவு என் கைவசமில்லையென்பதற்காக வருந்துகிறேன். ''இவ்வரசியலமைப்புச் சட்டத்தின் கீழோ, அரசியலமைப்புச் சட்டத்தினாலோ அன்றி அவர்'' எனும் சொற்கள் ஊன்றி நோக்கத்தக்கவை. ''அவர் தமது முடிவு செய்யும் அதிகாரத்தைப் பயன்படுத்த நினைக்கும் போதெல்லாம் அமைச்சரவையின் விருப்பத்திற்கும் அறிவுரைக்கும் எதிராகவன்றி'' எனும் சொற்கள் இடம்பெற்றிருந்தால் நண்பர் குன்ஸ்ரு குறை கூறுவதில் நியாயமிருக்கும். விதியில் வகுக்கப்படும் வரம்போ குறுகியது; அதாவது, ''அரசியலமைப்புச் சட்டத்தின் கீழோ, அரசியலமைப்புச் சட்டத்தினாலோவன்றி'' என்பதே இவ்விதி வரையறுக்கும் வரம்பாகும். எனவே விதி 143ஐத் தனியாகவன்றி, ஆளுநருக்கான அதிகாரங்களை வரையறுக்கும் பிற விதிகளோடு ஒருசேர நோக்க வேண்டும். அமைச்சரவை எடுக்கும் முடிவுகளில் மாறுபடும் ஆளுநர்கள், அமைச்சரவையின் அறிவுரையைப் புறக்கணித்து நடப்பதற்கான பொதுப்படையான அதிகாரம் ஏதும் ஆளுநருக்குத் தரப்படவில்லை. இங்கேதான் நண்பர் குன்ஸ்ருவின் வாதத்தில் பிழையுள்ளது.*

*எனவே, நான் இங்கு விளக்கியவாறு, சில குறிப்பிட்ட விஷயங்கள் குறித்து முடிவெடுக்கும் அதிகாரம் ஆளுநருக்கு அளிக்கப்படுவதால் பொறுப்பான ஆட்சி நடைபெறுவதற்கு எவ்விதமான இடையூறும் கிடையாது. தீர்வு காணவேண்டியது இவ்வதிகாரம் பற்றிக் குறிப்பிட எவ்வகையில் விதியமைக்க வேண்டும் என்பது பற்றியே. இதைச் செய்திட இரண்டு வெவ்வேறு வழிகள் இருப்பதாய்த் தோன்றுகிறது. நண்பர் பண்டித குன்ஸ்ருவும் சில உறுப்பினர்களும் விரும்புவதுபோல விதி 143இலிருந்து இச் சொற்களை நீக்கிவிட்டு, பின்னர் விதிகள் 175 அல்லது 188 இல் தக்கவாறு வரையறுத்துக் கொள்ளலாமென விடுத்தல் ஒரு வழி. விதி 143இல் கூறப்பட்டிருப்பதையன்றியும் இன்னின்ன வகையில் முடிவெடுக்கும் அதிகாரங்கள் ஆளுநருக்கு உண்டு என அங்கே வரையறுத்துக் கொள்ளலாம். மற்றொரு வழி, விதி 143இலேயே, ''விதிகள் 175, 188, 200, ... ஆகியவற்றில் கூறப்பட்டிருப்பதையன்றியும்'' என்ற சொற்களைச் சேர்த்தல். ஆனால் ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் சிலவற்றை ஏதாவது ஓரிடத்தில் இந்த அவை வரை*

யறுத்துத்தான் ஆக வேண்டுமென்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அருமை நண்பர் பண்டித குன்ஸ்ருவும் இங்கு பேசிய பல உறுப்பினர்களும், அச்சொற்களை இங்கிருந்து நீக்கிவிட்டுப் பிறிதோரிடத்தில் சேர்ப்பதையும், எங்கு சேர்க்கப்படுகின்றன என்பதை விதி 143இல் குறிப்பிடுவதையும் விரும்புவதாகத் தெரிகிறது. இந்த மாற்று வரைவு முறையாகவே எனக்குத் தோன்றுகிறது. ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்களை எந்தக் கட்டத்தில் வரையறுக்க அரசியலமைப்புச் சட்டம் வகுக்கும் குழு எண்ணியுள்ளது என்பது தெளிவாகத் தெரிந்தால் அதற்கேற்ப விதி 143, பிரிவு (1)இல் திருத்தம் செய்ய நான் தயாராகவிருக்கிறேன். விதிகள் 175 அல்லது 188ஐ பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும் கட்டத்திற்கு நாம் இன்னும் வரவில்லையென்பதுடன், வேறெந்தப் பகுதிகளில் ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் தர இடமுண்டு என்பதை அறிய இயலாமையுமே எனது சிக்கல்கள். அவற்றை அறிய முடிந்தால் விதி 143ஐத் தக்கவாறு திருத்தியமைத்து, இவை எங்கு வரையறுக்கப்படுகின்றன என்று குறிப்பிட நான் தயாராகவே உள்ளேன். விதி 143 இப்போது இருக்கும் வடிவிலேயே முரணின்றி இருப்பதால், அப்படியே அதை இருத்திக் கொள்வதில் தீங்கேதும் இல்லையென்பதே எனது பணிவான கருத்து.

**திரு. எச்.வி. காமத்:** குடியரசுத் தலைவருக்கு அவரது அமைச்சரவை மீதுள்ள அதிகாரங்களை வகுக்கும் விதி 61(1)க்கும் இதற்கும் கணிசமான வேறுபாடு இல்லையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உண்டு. குடியரசுத் தலைவருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் ஏதும் தரப்படவில்லை. ஆனால் மாநில அரசுகள் மத்திய அரசின் கீழ்தான் செயல்பட வேண்டுமாதலால், அவை மத்திய அரசுடன் முரணாது பணிந்து நடப்பதை உறுதி செய்யவே, அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து வழுவாமல் மாநில அரசுகள் செயல்படுவதைக் கண்காணிக்க மத்திய அரசுக்கு வாய்ப்பு அளிக்கவே, ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் சில தரப்படுதல் அவசியம். மாநில அரசுகள் மத்திய

அரசுக்குக் கீழ்ப்படிந்தவையாகச் செயல்படுமாறுதான் நமது அரசியலமைப்புச் சட்டமே வகுக்கப்படுகிறது. அதை உறுதி செய்யவே ஆளுநரின் முடிவெடுக்கும் அதிகாரங்கள்.

**திரு. எச்.வி. காமத்:** இந்த வகையில் முடிவெடுக்கும் அதிகாரங்களைப் பொதுப்படையாக வழங்குதற்கு மாறாக, முடிவெடுக்கும் அதிகாரங்களை வரையறுப்பதற்கெனத் தனியே சில விதிகளை அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்த்தல் உசிதமானது அல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்வாறு செய்ய இயலும் என்றும் கூறியுள்ளேன். ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் சில வழங்குவதை, அரசியலமைப்புச் சட்டத்தின் எந்தெந்த விதிகளில் வரையறுக்க அவை விரும்புகிறது என்பதை அறிந்தால், இதற்கெனத் தனியான விதிகளை வரைவு செய்யத் தயாராக இருக்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** இப்போதைக்கு அதனை ஒத்திப் போட்டால் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** வேண்டியதில்லை. தேவையெனில் மீண்டும் திருத்திக் கொள்ளலாம். விதி 143ஐப் பிந்தைய கட்டத்திலும் கூட மறுபரிசீலனை செய்து திருத்துவதற்கு இந்த அவைக்கு முழு உரிமையும் உண்டு. அரசியலமைப்புச் சட்டம் முழுவதையும் விவாதித்து முடித்துவிட்ட நிலையிலும் கூட, குறிப்பிட்ட விதிகள் மீண்டும் பரிசீலிக்கப்பட வேண்டுமென்று இந்த அவை கருதுமெனில், அதற்குத் தடையேதுமில்லை. ஆனால் அது முற்றிலும் சொல்லாட்சி மாற்றமாகவே யிருக்கும்.

*(திருத்தங்கள் தள்ளுபடி செய்யப்பட்டன; விதி 143 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

# விதி 144

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

*''விதி 144, பிரிவு (1)இன் வரைவுக்கு பதிலாக,*

*'144 (1): முதலமைச்சர் ஆளுநரால் நியமிக்கப்படுவார். ஏனைய அமைச்சர்களை முதலமைச்சரின் அறிவுரையின்படி ஆளுநர் நியமிப்பார். அமைச்சர்கள் அனைவரும் ஆளுநரின் விருப்பம் இருக்கும்வரை பதவிப் பொறுப்பில் இருப்பர்.*

*அன்றியும் பீகார், மத்தியப் பிரதேசம், பீரார், ஒரிசா ஆகிய மாநிலங்களில், பழங்குடி மக்களில் நல்வாழ்வு பேணுதற்கான ஓர் அமைச்சர் நியமிக்கப்படுவார். அவர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பிற்பட்ட வகுப்பினர் ஆகியோரின் நலம் பேணலையும் கூடுதல் பொறுப்பாக ஏற்றுக் கொள்ளலாம்.*

(1a) *அமைச்சரவை மாநிலத்தின் சட்டமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்பு வாய்ந்ததாய் விளங்கும்''*
*எனும் வரைவைச் சேர்க்கலாம்''*

*என முன்மொழிகிறேன்.*

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** விதி 144 பிரிவு (1a) இல், 'அவை' என்ற சொல்லுக்கு மாறாக, 'அமைச்சரவை' எனும் சொல் இடம் பெறுதல் நன்று என டாக்டர் அம்பேத்கருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தங்கள் கருத்தை ஏற்றுக் கொள்கிறேன். அப்போதுதான் விதி 62 இன் வடிவோடு ஒத்திசைவு இருக்கும். இத்திருத்தத்தையும் கூட நான் முன்மொழி கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** பீகார் முதலான மாநிலங்களில் நியமிக்கப்படவுள்ள தனி (பழங்குடிகள் நல) அமைச்சர்கள் நியமன

1. *அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி* VIII, *1949 ஜூன் 1, பக் 503.*

முறையாதென அறியலாமா? இந்த அமைச்சரும் முதலமைச்சரின் அறிவுரையின்படிதான் நியமிக்கப்படுவாரா? 'அன்றியும்' எனும் சொல் இடம் பெற்றிருப்பதால், முன்னர் கூறியிருப்பவை இவரது நியமனத்திற்குப் பொருந்தாதோ என்ற ஐயம் எழுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விதிப் பிரிவு கூறுவதெல்லாம், முதலமைச்சரின் அறிவுரையின்படி ஆளுநரால் நியமிக்கப்படும் அமைச்சர்களில், பழங்குடிகள் நலத்துறை அமைச்சரும் ஒருவர் இருப்பார் என்பதுதான்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> *''விதி 144, பிரிவு (4) இல் 'தமது அமைச்சரவையைத் தேர்ந்தெடுப்பதிலும், அவர்களுடனான உறவுகளிலும்' என்பதற்குப் பதிலாக, 'அமைச்சர்களைத் தேர்ந்தெடுத்தலிலும், அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் தமக்களிக்கப்பட்டுள்ள பொறுப்புகளை நிறைவேற்றுதலிலும்' எனும் சொற்கள் இடம்பெறலாம்''*

என முன்மொழிய அனுமதி இறைஞ்சுகின்றேன்.

இது வெறும் சொல்லமைப்பு மாற்றத் திருத்தமே.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> *''விதி 144இன் பிரிவு (6) நீக்கப்படலாம்''*

என முன்மொழிகிறேன்.

**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** ஏன்?

---

1. *அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 1, பக். 506.*
2. *அதே நூல், பக். 507*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏனென்றால், வேறு சில விதிகளில் வரையறுக்கப்பட்டதற்கும் மேலாக கூடுதலான முடிவெடுக்கும் அதிகாரங்கள் எதையும் வழங்க நாம் விரும்பவில்லை. அதாவது, உங்கள் கருத்து இங்கே செயலாக்கம் பெறுகிறது.

★ ★ ★

[1]**திரு. ஐஸ்பத் ராய் கபூர்:** (இத்திருத்தத்திற்கு) சட்ட நுட்பம் சார்ந்த எதிர்ப்பு தெரிவிக்கும் உறுப்பினர் எவரேனும் உண்டா? இது டாக்டர் அம்பேத்கருக்கும் நான் கலந்தாலோசித்த வேறு சில உறுப்பினர்களுக்கும் ஏற்புடைய திருத்தமேயென நம்புகிறேன். இதற்கு அனுமதி வழங்குவதால் எந்தத் தீங்கும் நேராதென்று கருதுகிறேன். டாக்டர் தேஷ்முக் இதற்கு எதிர்ப்பு தெரிவிப்பாரெனில், வாத நியாயத்தைப் பொறுத்து அவரது முடிவை எய்துவார். இது குறித்து அவையை ஏற்பிக்கச் செய்யும் வாய்ப்பை அவர் பயன்படுத்தித் தீர்மானத்தைத் தள்ளுபடி செய்விக்கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அது மீண்டுமொரு விவாதத்தைத் தொடங்கி வைக்காதா?

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஆம், தொடங்கி வைக்கும்தான். டாக்டர் அம்பேத்கர் இதை ஏற்றுக் கொள்வாராயின், மீண்டும் விவாதம் தேவையில்லை. இப்பிரிவை அவையின் வாக்கெடுப்புக்கு விட்டு, அது தோல்வியுற்றால் தள்ளுபடி செய்யலாம்.

**திரு. அவைத் தலைவர்:** ஆம். அதுதான் ஏற்றவழி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விதிப் பிரிவை நீக்குதற்கு நான் ஒப்பவில்லை. ஆனால் அதை இங்கிருந்து 'செயல்நெறி வழிகாட்டுக் குறிப்புகள்' பகுதிக்கு மாற்றுவதெனில்

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜுன் 1, பக். 519.

ஏற்கத் தயாராகவுள்ளேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** இதுபற்றி பரிசீலிப்பதை தள்ளி வைக்கலாமென முன்மொழிகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்வளவு நீண்ட விவாதத்திற்குப் பின்னரும் முடிவை ஏன் தள்ளி வைக்க வேண்டும்?

**திரு. அவைத் தலைவர்:** பிரிவு இங்கேயே இருக்கலாமா? அல்லது 'செயல்நெறி வழிகாட்டும் குறிப்புகள்' பகுதிக்கு மாற்றப் படலாமா? என்பதே கேள்வி.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்....

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, விவாதத்தின் போது பல்வேறு திருத்தங்களையும் குறித்து நிகழ்த்தப்பட்ட உரைகளிலிருந்து நான்கு கருத்துக்களுக்கு மட்டிலும் நான் பதில் கூறினால் போதுமென உணர்கிறேன். முதலாவதாக, அமைச்சர்கள் (குடியரசுத் தலைவரின்/ஆளுநரின்) விருப்பம் இருக்கும்வரை பதவியிலிருக்கலாம் என்பதற்குப் பதிலாக, அவையின் பெரும்பாலோரின் ஆதரவைப் பெற்றிருக்கும் வரை என்று மாற்றலாமெனப் பலரும் கூறினார்கள். அவையில் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவு இருக்கும் வரை அமைச்சரவை பதவியில் இருக்க அனுமதிக்கப்பட வேண்டும் என்பதுதான் இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் உட்கிடக்கை என்பதில் ஐயமில்லை. அந்தக் கோட்பாட்டின் அடிப்படையில்தான் அரசியலமைப்புச் சட்டம் செயல்பட முடியும். ஆனால் இக்கருத்தை நான் ஏன் வெளிப்படையாக உரைக்கவில்லையெனில், நாடாளுமன்ற ஆட்சிமுறை நிலவும் நாடுகள் எவற்றின் அரசியலமைப்புச் சட்டத்திலும் அவ்வாறு உரைக்கப்படுவதில்லை. 'விருப்பத்தின்போது' என்ற தொடருக்கு, அவையில் பெரும்பான்மை வலிமையை இழந்த போதிலும், 'விருப்பம்' தொடரலாம் என்பது பொருளல்ல. அமைச்சரவை அவையில் பெரும்பான்மையோரின் நம்பிக்கையை இழந்துவிட்டதெனில், குடியரசுத் தலைவர் உடனடியாகத் தமது விருப்பத்தைச்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 1, பக். 520-21.

2. அதே நூல், பக். 520-21.

செலுத்தி அவ்வமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்வார். ஆகவே பொறுப்பாட்சி நடக்கும் நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்களில் காணப்படுதல் போன்றே இங்கும் எடுத்தாளப்பட்டுள்ள சொல்லாட்சியை மாற்றுதல் தேவையில்லை என்று கருதுகிறேன். அருமை நண்பர் பேராசிரியர் சாக்சேனா தமது திருத்தத் தீர்மானத்தில் கூறுவது போன்று, 'கீழவை' என்ற சொல்லைப் பயன்படுத்தலாம் என்பது ஏற்கத் தக்கதன்று. ஏனெனில் நமது அரசியலமைப்புச் சட்டத்தின்படி, பிரதமர் கீழவையிலிருந்து மட்டுமின்றி மேலவை உறுப்பினர்களிலிருந்து கூடத் தமது அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கலாம். கீழவை உறுப்பினர்கள்தான் அமைச்சராக வேண்டும், மேலவை உறுப்பினர்கள் ஆகக்கூடாது என்பது நமது அரசியலமைப்புச் சட்டத்தின் நோக்கமல்ல. மேலும் எந்த அவையிலும் உறுப்பினரல்லாத ஒருவர் கூட ஆறு மாதங்கள் வரை அமைச்சர் பதவியில் இருக்கவியலும். எனவேதான் இத்திருத்தத்தை என்னால் ஏற்க இயலவில்லை.

அவையில் விரிவாக விவாதிக்கப்பட்ட மூன்றாவது திருத்தம் திரு. காமத், பேராசிரியர் ஷா ஆகியோரால் தாக்கல் செய்யப்பட்டது. மிகச் சிறு வேறுபாடுகளையன்றி இருவரின் கருத்தும் ஒரே தொனியில்தான் அமைந்திருந்தது. இவற்றைப் பற்றிச் சுருங்கக் கூறுவதெனில், விதி 144ஐ யொத்த விதி 62க்கான திருத்தம் எண் 1332 பற்றி நினைவுகூருமாறு அவையோரை வேண்டுகிறேன். பேராசிரியர் ஷாவின் அந்தத் தீர்மானம் அவையில் விரிவாகவே விவாதிக்கப்பட்டது. அப்போது எனது கருத்துக்களைத் தெளிவாகவே கூறியுள்ளேன். அச்சமயம் நான் கூறியதற்கு மேல் கூடுதலாக ஏதும் சொல்வதற்கு இல்லை.

**திரு. எச்.வி. காமத்:** அப்போது கொண்டு வரப்பட்ட திருத்தத் தீர்மானம் முழுமையானதாக இல்லையென்று நண்பர் அம்பேத்கர் ஏற்க மறுத்துவிட்டார். இப்போதோ தீர்மானம் முழுமையான வடிவில் உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** அதையெல்லாம் ஏற்கெனவே கூறி விட்டீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நண்பர் ஜெய்பால்

சிங் எழுப்பிய நான்காவது சிக்கலைத் திரு. ரோகிணிகுமார் சௌதுரியும் கூட ஓரளவுக்கு எழுப்பினார். விதியின் இந்தக் குறிப்பிட்ட பிரிவு எவ்வாறு அரசியலமைப்புச் சட்டத்தில் இடம்பெற்றது என்பதை அறிய வேண்டுமானால், அரசியலமைப்புச் சட்டக்குழு நியமித்த சிறுபான்மையோர் ஆணையத்தின் துணை உறுப்பான பழங்குடி மக்கள் நலத் துணைக்குழுவின் பரிந்துரைகளை நோக்க வேண்டும். அத்துணைக்குழுவின் அறிக்கையிலுள்ள 'சட்டவியல்சார் பரிந்துரைகள்' எனும் பிற்சேர்க்கையிலுள்ள பரிந்துரையை அப்படியே அடியொற்றித்தான் அரசியலமைப்புச் சட்டத்தின் விதி வகுக்கப்பட்டுள்ளது என்பதைக் காணலாம். அக்குழுவின் அறிக்கையில், பீகார், மத்தியப் பிரதேசம், பீரார், ஒரிசா ஆகிய மாநிலங்களில் பழங்குடி மக்களின் நல்வாழ்வு பேணுதற்கென்றே தனியாக அமைச்சரொருவர் நியமிக்கப்பட வேண்டுமென்றும், அந்த அமைச்சரே தாழ்த்தப்பட்டோர் நலம், பிற்பட்டோர் நலம் ஆகிய துறைகளையும் பார்த்துக் கொள்ளலாமென்றும் பரிந்துரைக்கப்பட்டுள்ளது. எனவே, இந்தப் பரிந்துரையை வரைவுக் குழு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்காமலிருக்க வழியில்லை. இந்தப் பரிந்துரை இந்திய அரசியலமைப்புச் சட்டத்திலேயே இடம்பெற வேண்டுமேயன்றி வேறு ஆவணங்களில் பார்த்துக் கொள்ளலாமென மெத்தனமாக விட்டுவிடக் கூடாதென்றும் பழங்குடி மக்கள் நலக்குழு வலியுறுத்தியுள்ளது. அதனால்தான் பழங்குடி மக்கள் நலக்குழுவை, அரசியலமைப்புச் சட்ட வரைவுக்குழு அப்படியே பின்பற்ற வேண்டியதாயிற்று.

பம்பாய் மாநிலத்துடன் இணைக்கப்பட்ட பல்வேறு பகுதிகளிலும் பழங்குடி மக்கள் எண்ணிக்கை மிகுதியாக இருப்பதால், பம்பாய் மாநிலத்தையும் இவ்விதியில் உள்ளடக்க வேண்டுமென்று நண்பர் ஜெய்பால்சிங் கருத்து தெரிவித்துள்ளார். ஆனால் இந்தக் கட்டத்தில் அதனைச் செய்ய இயலாதென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனென்றால், பம்பாய் மாநில அமைச்சரவையுடன் கலந்தாலோசித்த பின்னரே அதனைச் செய்ய இயலும். அரசியல் நிர்ணய சபையில் கடந்த சில நாட்களுக்கு முன்பு வரை கலந்து கொண்ட மாண்புமிகு நண்பர் கெர் தற்போது அவையிலில்லாததால், திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள வியலாது.

**திரு. எச்.வி. காமத்:** எனது திருத்தத்தைப் பொறுத்தமட்டில்,

டாக்டர் அம்பேத்கர் தாம் முன்பு தெரிவித்த கருத்தை மாற்றிக் கொண்டுள்ளாராவென அறியலாமா? முடிவு மறுபரிசீலனை செய்யப் படுமா?

**திரு. அவைத் தலைவர்:** இப்படிப்பட்ட குறுக்கு விசாரணையை அனுமதிப்பதற்கில்லை. இப்போது திருத்தத் தீர்மானங்களை எடுத்துக் கொள்வோம்.

திரு. தகீர், திரு. முகமது இஸ்மாயில் ஆகியோர் தாக்கல் செய்துள்ள இரு திருத்தங்கள் 2174, 2175 இரண்டுமே விதி 144, பிரிவு (1) பற்றியன.

டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 2165 நிறைவேற்றப் பட்டால், மற்ற இரண்டுக்கும் வேலையில்லை. எனவே, அம்பேத்கரின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

(இங்கு குறிப்பிடப்பட்ட அம்பேத்கரின் திருத்தங்கள் யாவும் நிறைவேற்றப்பட்டன. ஏனையவை தள்ளுபடி செய்யப்பட்டன.)

(விதி 144 திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)

## விதி 145

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுவரை நடைபெற்ற விவாதங்களுக்குப் பின்னரும் நான் மேலும் கூற வேண்டுவது யாதுமில்லை. திரு. நசிருத்தீன் அகமதின் 2210 ஆம் திருத்தத்தினை ஏற்றுக் கொள்கிறேன் என்பதை மட்டுமே கூற விரும்புகிறேன்.

[1]**திரு. அவைத்தலைவர்:** அவ்வாறாயின் 2210 ஆம் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். இது, 2211 ஆம் திருத்தத்தையும் உள்ளடக்குகிறது.

(கீழ்க்காணும், நசிருத்தீன் அகமதின் திருத்தம் அம்பேத்கராலும், அவையாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது)

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 1, பக் 528

'விதி 145இன் பிரிவுகள் (2), (4) ஆகியவற்றுக்கு பதிலாக, (3) தலைமை அரசு வழக்கறிஞர், ஆளுநரின் விருப்பம் இருக்கும் வரை அப்பதவியில் இருப்பார், பதவிக் காலத்தில் அவரது ஊதியம் ஆளுநரால் நிர்ணயிக்கப்படும்' எனும் பிரிவு இடம்பெறலாம்.'

(விதி 145, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).

## விதி 146

★ ★ ★

[1]**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே, இத்திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள வியலாது. விதி 146 என்பது விதி 130இன் தவிர்க்க முடியாத இயல்பான தொடர்ச்சியே. மாநிலத்தின் ஆட்சிச் செயலதிகாரம் ஆளுநர்பால் விடப்பட்டிருக்கும் என்று விதி 130 கூறுகிறது. அவ்வாறிருக்க மாநிலத்தின் ஆட்சிச் செயல்பாடுகள் அனைத்தும் ஆளுநரின் பெயரால் நடத்தப்படுதல்தானே முறையாக இருக்கும். அதைத் தான் விதி 146 வரையறுத்துக் கூறுகிறது.

மதிப்பிற்குரிய நண்பர் பேராசிரியர் கே.டி. ஷா முந்தைய ஆட்சியில் ஆட்சிச் செயல்பாடுகள் அனைத்தும் இந்திய அரசாங்கத்தின் பெயராலேயே செய்யப்பட்டு வந்தன என்பதைக் குறிப்பிட்டார். இதற்கு எனது பதில் என்னவெனில், பழைய அரசு முறையில் சிவில் மற்றும் இராணுவ அரசு அதிகாரிகள் யாவும் கவர்னர் ஜெனரலிடம் விட்டுவைக்கப்படவில்லை; குழு உறுப்பினரான கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபையிடம்தான் விட்டு வைக்கப்பட்டது; அதனால்தான் செயல்முறைகள் அனைத்தும் இந்திய அரசின் பெயரால் செய்யப்பட்டன. இப்போது, விதி 130 கூறும் பொருளைப் பற்றிய மட்டில் நிலைமை வெகுவாக மாறியுள்ளது.

(திருத்தமேதும் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. விதி 146 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).

---

★ அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 1, பக் 532.

## விதி 147

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, விதி 147 குறித்து அவையில் உணர்ச்சி மேலிட்ட விவாதம் நிகழ்வுற்றதைக் கண்டு மிக வியப்படைந்தேன். விதி 147, இந்த அவை ஏற்கெனவே நிறைவேற்றிய விதி 65ஐ அப்படியே அடியொற்றி வரையப்பட்டுள்ளது என்பதை முதலிலேயே சுட்டிவிட விரும்புகிறேன். விதி 147இல் நாம் ஆளுநருக்கு என்ன அதிகாரம் முன்மொழியப்படுகிறதோ, அதே அதிகாரம்தான், விதி 65இல் குடியரசுத் தலைவருக்குக் கொடுத்துள்ளோம். எனவே விதி 65 நிறைவேற்றப்பட்டபோது, என்னென்ன வாதங்களை அவை ஏற்றுக் கொண்டதோ, அந்த வாதங்கள் விதி 147க்கும் அப்படியே பொருந்துமெனத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுபவர்; ஆனால் ஆளுநரோ நியமிக்கப்படுபவர் என்பதை அம்பேத்கருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்... (குறுக்கீடுகள்)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இங்கு நடைபெற்ற விவாதங்களை நோக்கும்போது, விதி 147க்குப் பின்னால், மாநில அமைச்சர்களையும், அமைச்சரவையையும் பாதிக்கக்கூடிய கூறு ஒன்று மறைந்திருப்பதாக, உறுப்பினர்களில் பலர் கருதுவதாய்த் தோன்றுகிறது. எனவே நான் விளக்கம் தர முன்வருகிறேன்.

முதன் முதலாக நான் அவையோரின் கவனத்திலிருத்த விரும்புவது என்னவென்றால், நமது அரசியல் அமைப்புச் சட்டத்தின்கீழ் ஆளுநர் தாமாக நிறைவேற்ற வேண்டிய பணிகள் ஏதுமில்லை என்பதே. ஆளுநருக்குப் பணிகள் கிடையாதே தவிர அவர் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகள் சில உண்டு என்பதுடன், பணிகளுக்கும், பொறுப்புகளுக்குமிடையே உள்ள வேறுபாட்டையும் அவை நினைவுகூர வேண்டுகிறேன். எந்தவொரு பொருள் குறித்தும் அமைச்சரவையின் முடிவுக்கு மாறாகச் செயல்படுதலுக்கு, இவ்விதியின்கீழ் ஆளுநருக்கு அதிகாரம் அளிக்கப்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜுன் 2, பக் 545-47.

படவில்லை. இந்த விதியின் கீழும் கூட ஆளுநர் அமைச்சரவை யின் அறிவுரையை ஏற்றுக்கொண்டேயாக வேண்டும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இவ்விதியின் பிரிவுகள் (a), (b), (c) எவற்றிலும் எந்தவொரு சூழ்நிலையிலும் ஆளுநர் அமைச்சரவை முடிவை மறுக்கலாம் என்று கூறப்படவில்லை. எனவே, இந்த விதி ஏதோ வொரு வகையில் ஆளுநர் அமைச்சரவையின் செயல்பாட்டில் குறுக்கிடவோ, முடிவை மறுக்கவோ இடமளிக்கிறது எனும் குற்றச் சாட்டுக்கு இடமேதும் இல்லை. அப்படிப்பட்ட கருத்துக்கள் சரியாகப் புரிந்து கொள்ளாமையின் விளைவே.

**திரு. எச்.வி. காமத்:** தாமதம் விளைவிக்கவோ, முட்டுக் கட்டை போடவோ ஆளுநரால் இயலுமல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் பேசிக் கொண்டிருக்கும்போது நண்பர் குறுக்கிடக் கூடாது. எனது உரை யின் முடிவில், வினாக்கள் ஏதுமிருப்பின், பதிலளிப்பேன்.

ஆளுநரின் பணிகளுக்கும் பொறுப்புகளுக்குமிடையே தெளி வான வேறுபாடு உண்டு. அரசியலமைப்புச் சட்ட (அலங்கார) ஆளுநரேயாயினும், அவருக்குப் பணிகள் கிடையாதே தவிர, அவர் நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகள் சிலவுண்டு. அவரது பொறுப்புகளை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதலாவதாக ஓர் அமைச்சரவையைப் பதவியில் இருத்தும் பொறுப்பு. அமைச் சரவை ஆளுநருக்கு விருப்பம் இருக்கும் வரைதான் பதவியில் இருக்க முடியுமாதலால், அமைச்சரவையின்பால் விருப்பத்தை விலக்கிக்கொள்ள வேண்டுமா என்பதையும், விலக்கிக் கொள்வ தெனில் எப்போது என்பதையும் முடிவு செய்யும் பொறுப்பு அவ ருக்குண்டு. இரண்டாவதாக அமைச்சரவைக்கு அறிவுரை கூறல், எச்சரிக்கை செய்தல், மாற்று ஆலோசனைகள் கூறல், முடிவுகளை மறுபரிசீலனை செய்யக் கோரல் ஆகிய பொறுப்புகள் ஆளுநருக் குத் தரப்பட்டாக வேண்டும். இப்பொறுப்புகளைக் கூட அவருக்குத் தரவில்லையெனில், ஆளுநர் என்னும் பதவியே, பயனற்ற தேவை யற்ற பகட்டாகிவிடும். அவர் எந்தவொரு கட்சியினர் சார்பாளரு மல்லர்; மாநில மக்களவையின் சார்பாளராவார். மக்களின் பெயரால் தான் அவர் தமது நிருவாகத்தை நடத்துகிறார். ஆட்சி நிருவாகம் செம்மையாகவும், திறமையாகவும், நேர்மையாகவும் நடைபெறுதலை

உறுதி செய்ய வேண்டியது அவரது பொறுப்பு. எனவே, அரசு நிரு வாகம் தூய்மையாக, ஊழலின்றி, ஒருதலைச் சாய்வின்றி நடுவு நிலையுடன், நடத்தப்படுவதுடன், மக்களின் விருப்பத்திற்கு எதிராக அமைச்சரவை வகுக்கும் திட்டங்கள் இருப்பின் அவற்றைத் தடுக் கவும் பொறுப்பு கொண்டவர் ஆளுநர்; அறிவுரை கூறியும், எச்ச ரிக்கை செய்தும், மறுபரிசீலனை செய்ய ஆலோசனை தந்தும் அமைச்சரவையை வழிநடத்தும் அதிகாரம் அவருக்கு வேண்டாமா? இந்தப் பொறுப்புகளைச் செவ்வனே நிறைவேற்ற ஆளுநருக்கு, அவர் தேவையெனக் கோரும் தகவல்கள் கிடைத்தாக வேண்டும் அல்லவா? இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும். தேவையான தகவல்களைப் பெற இயலாதெனில் ஓர் ஆளுநரால் தமது அரசியலமைப்புச் சட்டப் பொறுப்புகளைச் சரிவர நிறை வேற்ற இயலாது என்பதை இவ்வவைக்குப் பணிவுடன் தெரி வித்துக் கொள்கிறேன். எடுத்துக்காட்டுக்கு, 'ஆளுநருக்குக் கோப்பு கள் எதையும் அனுப்புவதில்லை'யென்று அமைச்சரவை முடிவு செய்வதாகக் கருதுவோம் - இத்தகைய நிகழ்ச்சி பல மாநிலங்களில் பல சமயங்களின் நிகழ்ந்துள்ளது என்பதை அறிவேன் - அப்போது ஆளுநர் தமது பொறுப்புகளைச் செம்மையாக நிறைவேற்ற வழி யென்ன? தூய்மையான அரசு நிருவாகத்தை உறுதி செய்யும் பொறுப்பினை நிறைவேற்ற உதவுவதற்காகவே, தகவல் எதையும் கோரிப் பெறும் அதிகாரம் ஆளுநருக்குத் தேவை. மத்திய அரசு எவ்வாறு செயல்படுகிறது என்பதை அவையோர் நோக்கினால், அமைச்சரவை தொடர்பான கோப்புகள் அனைத்தும் கவர்னர் - ஜெனரலுக்கு அனுப்பி வைக்கப்படுகின்றன என்பதே நான் அறியும் தகவல். மேலும் பொது விவகாரங்களில் எடுக்கப்படும் முடிவுகளின் வாராந்தரத் தொகுப்புச் சுருக்கங்களை ஒவ்வொரு அமைச்சகமும், அமைச்சரவையின் பார்வைக்குப் பின்னர் கவர்னர் ஜெனரலுக்கு அனுப்பி வைக்கிறது. எடுத்துக்காட்டாக, வாரத் தொகுப்புகளைக் கவர்னர்-ஜெனரல் பார்வையிடுகையில், ஓர் அமைச்சர், அமைச்சரவையுடன் கலந்து கொள்ளாமல் தாமாக ஒரு முடிவு எடுத்திருப்பின், அம்முடிவு மக்கள் நலனுக்கு எதிரானது என கவர்னர் ஜெனரல் கருதினால், அம்முடிவை மறுபரிசீலனை செய்யுமாறு அமைச்சரவைக்குத் திருப்பியனுப்ப கவர்னர்-ஜெனர லுக்கு அதிகாரம் உண்டு. இதை ஆட்சி நிருவாகத்தில் தேவையற்ற குறுக்கீடென்றோ, இதனால் தீங்கேதும் உளது என்றோ நான் கருதவில்லை. எனவே, ஆட்சி நிருவாகத்தில் தேவையற்ற குறுக்கீடு

செய்யும் அதிகாரத்தை இவ்விதி ஆளுநருக்கு அளிப்பதாகக் கருதப்படுதல் தவறாகப் புரிந்து கொள்ளுதல் அல்லது தவறான கண்ணோட்டத்தின் விளைவேயென்பதைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். விதி 147 இன் மொழியமைப்பில் இப்படிப்பட்ட பொருள் ஏதும் கிடையாது; இப்படிப்பட்ட அதிகாரத்தை ஆளுந ருக்குத் தரும் நோக்கத்துடன் இந்த விதி உருவாக்கப்படவுமில்லை. நல்ல ஆளுநர்கள் என்னென்ன பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டுமென்று நாம் கருதுகிறோமோ, அப்பொறுப்புகளைச் செம்மையாக நிறைவேற்றத் தேவையான (போதிய) அதிகாரங்களை மட்டுமே இவ்விதி ஆளுநருக்கு வழங்குகிறது.

*(கைதட்டல்கள்)*

**திரு. எச்.வி. காமத்:** நான் அம்பேத்கரிடம் சில வினாக்களை எழுப்பலாமா?

**திரு. அவைத் தலைவர்:** இப்போது வினா எழுப்புவதால் என்ன பயன்? உங்கள் வாய்ப்பு முன்னரே முடிந்து போயிற்று.

**திரு. எச்.வி. காமத்:** தமது உரை முடிந்தபின் நான் வினாக் களை எழுப்பலாமென்று அம்பேத்கர் கூறினாரே?

**திரு. அவைத் தலைவர்:** விவாதங்களெல்லாம் முடிந்த பின்னர் வினா எழுப்பும் பழக்கத்தை நான் விரும்பவில்லை. வினாக்கள் அனைத்துக்கும் விடையளித்தாயிற்று. இந்த விதி குறித்துத் திருத்தத் தீர்மானம் ஏதுமில்லையாதலால், இவ்விதியை இப்போது வாக்கெடுப்புக்கு விடுக்கிறேன்.

*''இந்த விதி 147, அரசியலமைப்புச் சட்டத்தின் ஒரு பகுதி யாக விளங்கும்''*

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

விதி 147, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## விதி 151

★ ★ ★

[1]திரு. அவைத் தலைவர் (திருத்தம்) 2308: டாக்டர் அம்பேத்கர் (முன்மொழியலாம்).

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> "விதி 151, பிரிவு (2)இல் 'மூன்றாம் ஆண்டு' என்பதற்கு பதிலாக, 'இரண்டாம் ஆண்டு' எனும் சொல் இடம்பெறலாம்" எனும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரண்டாவது அவை (மேலவை) இருக்க வேண்டுமென்று ஏற்கெனவே ஒரு விதி நிறைவேற்றப்பட்டுள்ளது. இந்த அவைக்கான உறுப்பினர்கள் எவ்வாறு மீண்டும் தேர்ந்தெடுக்கப்படுவர் என்பது குறித்ததே இந்த விதி.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** ஒரு குறிப்பிட்ட மேலவையின் பதவிக்காலம் ஒன்பது ஆண்டுகளா, அல்லது ஆறு ஆண்டுகளா என்பதையும் நாம் இங்கு முடிவு செய்ய வேண்டும், அது மேலவையின் அமைவைப் பொறுத்ததாயிருக்கும். எவ்வளவு காலத்திற்கு ஒருமுறை அவை உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்களது பதவிக் காலம் முடிவுறும் என்பதையொட்டியே மேலவையின் அமைவு இருக்கும்.

**அவைத் தலைவர்:** அவையின் அமைவை ஒட்டியதன்று அதன் ஆயுள்காலம். அவையின் ஆயுள் எவ்வளவாயினும் நாம் விதி 150 குறித்து எடுக்கும் முடிவை யொட்டியே அதன் அமைவு இருக்கும்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** அவைத் தலைவரின் தீர்ப்புக்கு நான் தலை வணங்குகிறேன்....

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 548.
2. அதே நூல், பக். 549-50.

மேலவை உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்கினர் மூன்றாண்டுகளுக்கொரு முறை ஓய்வு பெறுவர் என்று கூறப்பட்டது. மூன்றாண்டுக் கால இடைவெளிக்கு பதிலாக இரண்டாண்டுக் கால இவைவெளியை டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்திருத்தல் எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. இதனால் மேலவை உறுப்பினரின் பதவிக் காலம் ஆறு ஆண்டுகளாகக் குறைகிறது. அதாவது கீழவை உறுப்பினரின் பதவிக்கால அளவை நோக்கி நெருங்கியுள்ளது. மேலவையில் புதிய உறுப்பினர்கள் விரைந்து இடம்பெறவும் இது வழிவகுக்கிறது. எனவே, டாக்டர் அம்பேத்கரின் திருத்தத் தீர்மானத்திற்கு எனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. குப்தாவின் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இப்போது, டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்ளும் திரு. குப்தாவின் திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். இஃதொன்றே மூலத் திருத்தமாகும்: அதாவது,

> ''விதி 151, பிரிவு (1)க்கான திருத்தங்களின் பட்டியலில் 2304 ஆம் திருத்தத் தீர்மானத்தையொட்டி, விதி 151, பிரிவு (1)ஐ அடுத்து,
>
> ''அன்றியும், அவசர நிலை அறிவிப்பு செயல்பாட்டில் இருக்கும்போது, மேற்குறிப்பிட்ட கால வரம்பு மேலும் ஒரு சமயத்தில் ஓராண்டுக்கு, பாராளுமன்றத்தில் சட்டம் இயற்றல் வாயிலாக நீட்டிக்கப்படலாம். எவ்வாறாயினும் அவசரநிலை விலக்கிக் கொள்ளப்பட்ட பின்னர், ஆறு மாத காலத்திற்கு மேல் நீட்டிப்பு செய்ய வியலாது''
>
> எனும் பகுதி இடம்பெறலாம்

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

திருத்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** (அடுத்து) பிராஜேஷ்வர் பிரசாத்தின் திருத்தத் தீர்மானம். அவையின் ஒப்புதலுடன், தீர்மானம் விலக்கிக் கொள்ளப்படுகிறது. அடுத்து டாக்டர் அம்பேத்கரின்

2308 ஆம் தீர்மானம் (முன்னரே குறிப்பிடப்பட்டது) வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

விதி 151, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 152

[1]**திரு. அவைத் தலைவர்:** அடுத்தது விதி 152. இதற்கு டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஒன்று உளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

'விதி 152இன் வரைவுக்குப் பதிலாக,

'152. மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களின் தகுதிகள்:

கீழே குறிப்பிடப்படும் தகுதிகளிருந்தாலன்றி, எந்தவொரு நபரும் மாநிலச் சட்டமன்ற உறுப்பினராகும் தகுதி பெறமாட்டா:

(a) அவர் இந்தியக் குடிமகனா(ளா)க இருக்க வேண்டும்.

(b) சட்டமன்றக் கீழவை உறுப்பினராக வேண்டுமெனில் 25 வயதும், மேலவை உறுப்பினராக வேண்டுமெனில் 35 வயதும் அவருக்கு நிரம்பியிருக்க வேண்டும்.

(c) மேலும் இதுகுறித்து அந்த மாநிலச் சட்டமன்றம் இயற்றும் சட்டங்களில் வகுக்கப்படும் பிற தகுதிகளும் அவருக்கு இருக்க வேண்டும்'

என்ற வாசகம் இடம் பெறலாம்''

எனும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜுன் 2, பக் 553-54.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, திருமதி பூர்ணிமா பானர்ஜி தாக்கல் செய்துள்ள திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன். இவ்விதியின் பிரிவு (3) குறித்து, நாடாளு மன்றம் உறுப்பினராகும் தகுதிகளில் ஒன்றாகச் சொத்து டைமையை வரையறுக்க இப்பிரிவு இடம் கொடுக்குமோவென அவர் அச்சம் தெரிவித்தார். பிரிவு (C)யின் நோக்கம் அதுவன்று என்பதை உறுதிப்படக் கூறுவேன். இப்பிரிவில், திவாலாகுதல், புத்தி சுவாதீன மின்மை, குறிப்பிட்ட தொகுதிக்குப் புறத்தே வசித்தல் போன்ற தகுதியின்மைகள் குறித்துத்தான் சிந்தை செலுத்தப்பட்டது. வேட் பாளர்களுக்குச் சொத்துடைமையை ஒரு தகுதியாக வரையறுக்க வேண்டுமென்ற நோக்கம் சற்றும் கிடையாது.

அடுத்து, படிப்பறிவுத் தகுதி குறித்த, பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தத்திற்கு வருகிறேன். இதனை மாநிலச் சட்ட மன்றங்களுக்கு விட்டு விடலாம். வேட்பாளர்களுக்குப் படிப்பறிவு தேவையென்று, ஒரு குறிப்பிட்ட மாநிலத்தின் சட்டமன்றம் கருது மெனில், அதனை ஒரு தகுதியாக்க அவர்கள் சட்டமியற்றிக் கொள் வார்கள் என்பதில் ஐயமில்லை.

நான் தனியாகக் குறிப்பிட்டு விளக்கம் தர வேண்டிய கருத்தும் ஒன்று உண்டு. துணைப்பிரிவு (C), ஒருவகையில் தேர்தலைப் பற்றிய விதிகள் 290, 291 ஆகியவற்றுடன் தொடர்புள்ளது. அவ்விதிகள் இன்னும் நிறைவேற்றப்படவில்லை.

விதிகள் 290, 291 ஆகியவற்றை இந்த அவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும்போது, இங்குள்ள துணைப் பிரிவு (C) யில் குறிப்பிடப்படும் தகுதிகள், நாடாளுமன்றச் சட்டமியற்றலின்படி வரையறுக்கப்பட வேண்டுமென்று முடிவு செய்யுமானால், துணைப் பிரிவு (C) யின் இறுதிப் பகுதியில் மறுகவனம் செலுத்தும் உரிமை வரைவுக் குழுவிடம் விடப்பட வேண்டும் என வேண்டுகிறேன். அந்நிபந்தனையுடன், விதி 152 திருத்தப்பட்டுள்ளவாறு நிறை வேற்றப்படலாமெனக் கருதுகிறேன்.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 553-54.

*(விதி 152, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது).*

★ ★ ★

## விதி 153

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

"விதி 153 இன் பிரிவு (3), நீக்கப்படலாம்"

என முன்மொழிகிறேன். அரசியலமைப்புச் சட்ட ஆளுநர் எனும் அமைப்புடன் இந்த விதி ஒத்துவராது.

★ ★ ★

[2]**திரு. கோபால் நாராயண்:** (ஐக்கிய மாநிலம்: பொது): தலைவர் அவர்களே, இந்த விதியைக் குறித்துப் பேசு முன்னர், எனது குறையீடு ஒன்றை வெளியிட விரும்புகிறேன்; தலைவர் அவர்கள் அதற்குத் தீர்வு காண வேண்டுமெனக் கோருகிறேன். தொடக்க நாளிலிருந்தே இவ்வவையின் அமர்வுகள் ஒவ்வொன் றிலும் தொடக்கத்தில் இருந்து இறுதிவரை அமைதியுடன் கலந்து கொண்டு வருகிறேன். இப்போது எனது பொறுமையின் வரம்பை யும் தாண்டிவிட்டபடியால் முறையிடுகிறேன். இவ்வவையின் மதிப் பிற்குரிய உறுப்பினர்களில் ஒருசிலர் மட்டுமே விவாதமனைத் தையும் தனியுரிமையாக்கிக் கொள்கின்றனர். ஒவ்வொரு விதி பற்றியும் ஒவ்வொரு திருத்தத்தைப் பற்றியும், திருத்தத்தின் திருத் தங்களைப் பற்றியும் தாங்கள் பேசியே ஆக வேண்டுமென்று கருது கின்றனர். தலைவர் அவர்களுக்கும் சில வரம்புகள் உண்டென் பதால், இவர்களைத் தடுக்க முடியாமல், தாங்கள் சலிப்படைந்து தவிப்பதையும் பலமுறை தாங்கள் முகக் குறிப்பிலிருந்து என்னால் உணர முடிகிறது. ஆயினும் அவர்களைத் தங்களால் நிறுத்த இயல வில்லை. அந்த உறுப்பினர்களுக்கு, இரண்டு அல்லது மூன்று

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 555.
2. அதே நூல், பக். 557

நிமிடங்களுக்கு மேல் பேசலாகாதென்று வரம்பு விதிக்கலாமென்று கருதுகிறேன். இந்த விதியைப் பொறுத்தமட்டில், புதிதாக ஏதும் கூறப்படவில்லையெனினும், இதுபற்றி (வீணாக) பதினைந்து நிமிடங்களுக்கு மேல் விவாதம் நடந்து விட்டது. ஆளுநருக்கு முடிவெடுக்கும் அதிகாரங்கள் சில அளிப்பது பற்றிய விதி இது. இருந்தும் ஓர் உறுப்பினர் இதை எதிர்த்துப் பேச முனைகிறார். இக்குறைக்குத் தாங்கள் நல்லதொரு முடிவு வழங்குமாறு வேண்டுகிறேன். தங்களால் அது இயலாது என்றால், எங்களைப் போன்ற உறுப்பினர்களைத் தூங்கவோ, அவைக்கு வெளியே பயனுள்ள பணியேதிலும் ஈடுபடவோ அனுமதிக்க வேண்டும். நான் இந்த விதியை ஆதரிக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இது விஷயத்தில் என்னால் ஏதும் செய்ய இயலாமைக்கு வருந்துகிறேன். அவையோர் தாமாகவே உணர்ந்து நடந்து கொள்வார்களென விடுக்கிறேன்.

**திரு. பிராஜேஷ்வர் பிரசாத்:** (பேச எழுகிறார்).

**திரு. அவைத் தலைவர்:** இவ்வளவுக்கும் பிறகுமா தாங்கள் பேச விரும்புகிறீர்கள்? *(அவையில் சிரிப்பொலி).*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தப் பொருள் குறித்து வெகுவாகப் பன்முறை விவாதிக்கப்பட்டு விட்டது. எனவே நான் பதிலளிக்கத் தேவையில்லை எனக் கருதுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தைத் தவிர, வேறெந்தத் திருத்தமும் ஏற்கப்படவில்லை. விதி 153 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

* * *

## விதி 153 - A

[1]**திரு. அவைத் தலைவர்:** இத்திருத்தம் பற்றி யாராவது, ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 558.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை நான் ஏற்கவில்லை.

*(பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தம் ஏற்கப்படவில்லை. விதி 154 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 160

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூறுதற்கு ஏதுமில்லை.

விதி 160 நிறைவேற்றப்பட்டு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## புதுவிதி 163-A

[2]**திரு. அவைத் தலைவர்:** புதுவிதியாக 163-A தாக்கல் செய்யப்பட வேண்டியுள்ளது. இவ்விதி பட்டியல் I இல் 39 ஆம் திருத்தத் தீர்மானமாகத் தரப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, இவ்விதி ஒத்திவைக்கப்பட வேண்டும்.

★ ★ ★

## விதி 165

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** தலைவர் அவர்கள் முந்தைய காலங்களில், இத்தகைய திருத்தங்களைத் தாக்கல் செய்ய, டாக்டர் அம்பேத்கரையே அனுமதித்து வந்துள்ளார். இதே முறையை இனியும் கூடத் தொடரலாமே? தீர்மானம் முறைப்படி தாக்கல் செய்யப்படலாம்.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 564
2. அதே நூல், பக். 566

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *தலைவர் அவர்களே,*

*''விதி 165இல், 'சாற்றுகை' என்ற சொல்லுக்குப் பதிலாக, 'மெய்யுறுதி அல்லது உறுதிமொழி' எனும் சொற்கள் இடம்பெறலாம்'' என முன்மொழிகிறேன்.*

*தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.*

★ ★ ★

## விதி 166

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *தலைவர் அவர்களே, ''விதி 166, பிரிவு (1)ஐ அடுத்து,*

*''1(a) எந்தவொரு நபரும் ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலச் சட்டமன்றங்களின் உறுப்பினராகப் பதவி வகிக்க இயலாது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சட்டமன்றங்களில், ஒருவர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், குடியரசுத் தலைவர் இதுகுறித்து உருவாக்கும் விதிகளில் வரையறுக்கப்படும் கால வரம்புக்குள் (தாம் விரும்பும்) ஏதாவதொரு உறுப்பினர் பதவியைத் தவிர ஏனைய அனைத்தையும் துறப்பதாக அறிவிக்க வேண்டும்; இல்லையெனில் அவர் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் பதவிகள் அனைத்தும் காலியிடங்களாகிவிடும்'' எனும் துணை விதியைச் சேர்க்கலாம்''*

*என முன்மொழிகிறேன்.*

*இரண்டு மாநிலச் சட்டமன்றங்களின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படும் வேட்பாளர் குறித்த பிரிவு இது. முந்தைய பிரிவு நாடாளுமன்றத்திற்கும், சட்டமன்றத்திற்கும் வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்படும் வேட்பாளர் பற்றியது.*

***திரு. அவைத் தலைவர்:*** *திரு. நசிருத்தீன் அகமதுவின் திருத்தம் 2403-ம் உண்டு. ஆனால் அது இத்திருத்தத்தில் (எண். 2404) அடங்கிவிடும்.*

---

*1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜுன் 2, பக் 567*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *''விதி 166இன் பிரிவு (2) நீக்கப்படலாம்'' என முன்மொழிகிறேன்.*

★ ★ ★

[1]***திரு. அவைத் தலைவர்:*** டாக்டர் அம்பேத்கர் தாக்கல் செய்துள்ள திருத்தங்களை, ஒவ்வொன்றாக வாக்கெடுப்புக்கு விடு கிறேன்.

***திரு. எச்.வி. காமத்:*** நான் எழுப்பியுள்ள பிரச்சினை குறித்து டாக்டர் அம்பேத்கர் விடையளிக்க மாட்டாரா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அது தேவை யில்லையென்று கருதுகிறேன்.

*(இங்கு குறிப்பிடப்பட்ட, டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் யாவும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. விதி 166 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 167

★ ★ ★

[2]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தலைவர் அவர்களே,

> *''விதி 167, பிரிவு (1), துணைப்பிரிவு (d)க்குப் பதிலாக,*
>
> *"(d) அவர் இந்தியக் குடியுரிமையை இழந்துவிட்டாலோ, பிற வெளிநாடு ஒன்றின் குடியுரிமையை தன்னிச்சையாக ஏற்றுக்கொண்டிருந்தாலோ, வெளிநாடு ஒன்றுடன் பற்றுறவோ, ஒட்டுறவோ தனக்கு உண்டு என ஒப்புக்கொண்டிருந்தாலோ'*
>
> *எனும் துணைப் பிரிவு இடம் பெறலாம்''*
>
> *என முன்மொழிகிறேன்.*

***திரு. மகாவீர் தியாகி:*** நாம் காமன்வெல்த்தில் உறுப்பின ராயிருக்கிறோம். இங்கிலாந்து நாட்டுடன் பற்றுறவு இருப்பது இயல்புதானே. அரசர்பால் பற்றுறவு கொள்வது தகுதி நீக்கத்திற்குக் காரணமாகுமா?

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக். 568.
2. அதே நூல், பக். 570-71.

*திரு. அவைத் தலைவர்:* அது அரசியலமைப்புச் சட்டத்திற்கு நாம் தரும் விளக்கத்தைப் பொறுத்தது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தேசிய இனச் சட்டத்தில் இது தெளிவுறுத்தப்படுகிறது.

(திருத்தங்கள் எண் 2420, 2423 தாக்கல் செய்யப்படவில்லை.)

*திரு. எச்.வி. காமத்:* எனது திருத்தம் எண். 2424, வெறும் சொல் மாற்றம் குறித்ததேயெனக் கருதுகிறேன். அதுகுறித்து வரைவுக் குழுவுக்கு விட்டு விடுகிறேன்.

*திரு. அவைத் தலைவர்:* அதில் பொருள் மாற்றமும் உள்ளது.

*திரு. எச்.வி. காமத்:* அவ்வாறாயின், அதனைத் தாக்கல் செய்ய விரும்புகிறேன்.

''விதி 167, பிரிவு (1), துணைப்பிரிவு (d) இன் இறுதியில் உள்ள அரைப் புள்ளியை அடுத்து, 'அல்லது' எனும் சொல் இடம் பெறலாம்'' என முன் மொழிகிறேன்.

பயிற்சி அதிகமில்லாத எனதறிவுக்கு எட்டியவரை, 'உம்' என்ற சொல்லை விட்டு விட்டாலும், அதன் இடத்தில் 'அல்லது' என்ற சொல்லைப் போட்டாலும், பொருளில் மாற்றம் இருப்பதாய்த் தெரியவில்லை. ஆகவேதான் இதனை வரைவுக் குழுவின் தேர்ந்த அறிஞர்கள்பால் விட்டுவிடலாமெனக் கருதினேன்; ஏனெனில் இதில் நான் இன்னும் கற்றுக்குட்டிதான். எனவேதான் 'அல்லது' எனும் சொல் இருப்பின் தகுதியின்மைகளில் ஏதாவது ஒன்று இருந்தாலும் இவ்விதியின்படி செயல்பட ஏதுவாகும்.

*திரு. அவைத் தலைவர்:* டாக்டர் அம்பேத்கர் இதைப் பரிசீலனை செய்யலாம்.

*திரு. எச்.வி. காமத்:* நான் முன்னரே குறிப்பிட்டவாறு, அறிவார்ந்த வரைவுக் குழுவுக்கு இதை விட்டு விடுகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, இருப்பதே முற்றிலும் சரியாகத்தான் இருக்கிறதென்று கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** ஒன்றாகச் சேர்த்து அவை படிக்கப் படலாமே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை. அவற்றை ஒன்றாகச் சேர்த்துப் படிப்பதற்கில்லை.

**திரு. அவைத் தலைவர்:** 'அல்லது' எனும் சொல் பயன் படுத்தப்பட்டால், ஐயத்திற்கிடமில்லாத தெளிவு கிட்டுமன்றோ?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது தேவை யென நான் கருதவில்லை.

(திருத்தங்கள் 2425, 2426, 2427 ஆகியன தாக்கல் செய்யப் படவில்லை).

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அருமை நண்பர் தியாகி இரண்டொரு கூர்மையான வினாக்களைக் கேட்டுள் ளார். ஆதலால் அவர் பொருட்டுத்தான் நான் எழுந்துள்ளேன். அவ்ர் தம்மைத் தாமே 'கல்லாதவர்' எனக் கூறிக் கொண்டா ராதலின், 'ஒட்டுறவு' என்ற சொல்லின் பொருளைப் புரிந்து கொள்ள அவர் இடர்ப்படுவதை என்னால் உணர முடிகிறது. எனவே இங்கு அதன் பொருளை விளக்க முனைகிறேன். ஒரு நாடு மற்றொரு நாட்டின் மீது படையெடுக்கும்போது, படையெடுக்கப் பட்ட நாட்டின் ஒரு பகுதியைச் சேர்ந்த மக்கள், அச்சத்தினாலோ, அல்லது படையெடுத்த நாடு அங்கே படையாட்சியை நிறுவி யிருப்பதாலோ, படையெடுத்த நாட்டின் பெயரால் ஆட்சி செலுத்தும் படைத்தலைவர் இயற்றும் சட்டங்களுக்குக் கீழ்ப் படிந்து நடக்க நேரிடலாம். படையெடுப்பு தொடர்ந்தும், தம் பகுதியில் அயலவர் படை நிலை நிறுத்தப்பட்டும் இருக்கும் போது, அத்தகைய நடத்தை பெரும்பாலும் மன்னிக்கப்படும். படையெடுப்பில் தேக்கத்தினாலோ, போர் நிறுத்தத்தினாலோ அயல்படையின் கட்டுப்பாடுகள் குறைந்து, அவர்களுக்குக் கீழ்ப் படிதல் தேவையில்லை எனும் நிலை உருவான பின்னரும் கூட ஒருசிலர், அயல்படைக்கோ, படைஞர் சார் ஆளுநருக்கோ பணிந்து சேவை செய்து கொண்டிருப்பார்கள். அப்படிப்பட்ட நடத்தை

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக். 573-574.

தான் சட்டமொழியில் 'ஒட்டுறவு' என அழைக்கப்படுகிறது. (வேறு வழியின்றி) ஏற்றுக் கொள்வதற்கும் இதற்கும் தெளிவான வேறுபாடு உண்டு. இத்தகையவர்கள் பதவிக்கு வருவதைத் தவிர்க்கும் நோக்கில்தான் 'ஒட்டுறவு' எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நண்பர் தியாகி வெளிநாடுகளாக எவற்றைக் கருதலாம் என்ற வினா குறித்து உணர்ச்சிப் பொங்கப் பேசியுள்ளார். இந்த அவையில் ஏற்கெனவே விவாதித்து முடிவெடுக்கப் பட்டுவிட்ட காமன்வெல்த் உறவுகள் குறித்து மீண்டுமொரு விவாதத்தைத் தொடங்குவது அருமை நண்பர் தியாகியின் நோக்கமல்லவென்று உறுதியாக நம்புகிறேன். மேலும் வெளிநாடு என்றால் என்ன என்பதைத் தெளிவாக வரையறுக்கும் பொருட்டு, விதி 303, துணைப் பிரிவு (1) க்குத் திருத்தம் ஒன்றினை முன்மொழிய உள்ளேன் என்பதையும் அவருக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நண்பர் தியாகியிடம் அச்சிட்ட திருத்தப் பட்டியலின் இரண்டாம் பகுதி இருந்தால், நான் முன்மொழியவுள்ள திருத்தம் என்னவென்பதனை அவர் அங்கே காணமுடியும். முன்மொழியப் படவுள்ள திருத்தம் எவையெவை அயல்நாடுகள் அல்லவென்பதை அறிவிக்கும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்கு வழங்கும். அதன்படி குடியரசுத் தலைவர் வெளியிடும் அறிக்கையைக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட நாடு அயல்நாடா அல்லவா என்பதைக் கண்டறிய முடியும். நண்பர் தியாகிக்கு மேலும் தெரிவுறுத்துவதற்காக, மேலும் சிறிது விளக்கம் தருதல் நன்றென்று எண்ணுகிறேன். ஒரு நாடு அயல்நாடு அல்ல என்று அறிவிக்கப்பட்டாலோ, அல்லது காமன்வெல்த் ஒப்பந்தத்தின் வாயிலாகவே, சம்பந்தப் பட்ட (அயல்)நாட்டு நிலப்பரப்புகளில் வாழும் மக்கள் அனைவருக்கும், இந்திய நாட்டு மக்களுக்குக் குடியுரிமை வாயிலாக அரசியலமைப்புச் சட்டம் வழங்கும் உரிமைகள் யாவும் கிடைத்துவிடுமோ என்று பலர் கவலையுறுவதாகத் தெரிகிறது. காமன்வெல்த் உறவுகளின்படியான நிலைமை இதுதான். டொமினியன் நாடுகள் அனைத்திலும் வாழும் மக்கள் மூன்று வகையாகப் பகுக்கப் படுவர். குடிமக்கள், அயலார் எனும் இருபிரிவுகளுடன் குறிப்பிட்ட நாட்டில் வாழும் டொமினியன் குடியிருப்பாளர் என்பது மூன்றாவது வகை. இதன் பொருள் யாதெனில், இந்திய நாட்டு மண்ணில் வாழும் பிற டொமினியன் நாட்டு மக்கள் அயலவர்

கள் போன்று நடத்தப்பட மாட்டார்கள். அவர்களுக்கென்று சில சிறப்புரிமைகளும் வழங்கப்படும். ஆனால், என்னுடைய மதிப்பீட்டின்படி, இந்த நாட்டுக் குடியுரிமை பெற்ற மக்களுக்கு வழங்கப்படும் உரிமைகள் அவர்களுக்கு முழுமையாகக் கொடுக்கப்பட மாட்டா. நண்பர் தியாகியின் ஐயங்கள் யாவும் நீங்கத் தெளிவு பெற எனது விளக்கம் உதவியிருக்குமென்று நம்புகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** தாங்கள் ஆற்றிய சுவையான உரைக்கு என் மனமார்ந்த நன்றி.

*(டாக்டர் அம்பேத்கர், திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி ஆகியோரின் திருத்தங்கள் ஏற்கப்பட்டன. விதி 167 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 169

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே, அண்மையில் சிறிது காலத்துக்கு முன்னர்தான் இதே கருத்தைப் பற்றி இவ்வவையில் விரிவாக விவாதித்துள்ளோம். முன்னர் நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளைப் பற்றிய விவாதத்தின் போது, நாடாளுமன்றத்திற்கான பல்வேறு சிறப்புரிமைகளையும், விலக்குரிமைகளையும் ஏற்றுக் கொண்ட இந்த அவை, அதே வகையான உரிமைகளைச் சட்டமன்றங்களுக்கு அளிப்பதில் தயக்கம் காட்டாதென நம்பினேன்; அதற்காக மீண்டும் நீண்டதொரு விவாதம் தேவைப்படுமென்றும் நான் நினைத்ததில்லை. ஆனால் விவாதம் என்னவோ எழுந்து விட்டது; மேலும் இதுகுறித்துப் பத்திரிகைகள் கூடக் கொதிப்படைந்திருப்பதாக நண்பர் காமத் கூறினார். எனவே வரைவுக்குழு இவ்வாறாக முடிவெடுத்ததற்குக் காரணம் என்ன என்பதை நான் விளக்குதலே நன்று. மேலும் விவாதம் நடந்து கொண்டிருந்தபோது நான் குறுக்கிட்டு ஏதும் பேசவில்லையாதலால் இந்தக் கட்டத்திலாவது குறுக்கிட்டு நிலைமையைத் தெளிவாக்குதல் அவசியமாகிறது.

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 582-84

சிறப்புரிமை என்றால் என்னவென்பது குறித்து எத்தனை உறுப்பினர்கள் தெளிவுடன் இருக்கிறார்கள் எனத் தெரியவில்லை. தற்போது நாம் கருதுகிற சிறப்புரிமைகள் இரண்டு வகையானவை. முதல் வகையில், பேச்சுரிமை, தங்கள் கடமையை நிறைவேற்றிக் கொண்டிருக்கும்போது கைது செய்யப்படாத விலக்குரிமை போன்ற தனிநபர் உரிமைகள் அடங்கும். ஆனால் சிறப்புரிமை என்பதில் இவை மட்டுமே அடங்குவதில்லை.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** சிறப்பு உரிமைகளின் பட்டியலோ, அவை எவ்வாறு எய்தப்படுகின்றன என்பது குறித்த விரிவுரையோ எமக்குத் தேவையில்லை. நாம் அறிய விரும்புவதெல்லாம் அவற்றை அரசியலமைப்புச் சட்டத்தின்வழி நிலைநாட்ட வியலுமா என்பது பற்றித்தான். அதுதான் இங்கு சிக்கல்.

**திரு. அவைத் தலைவர்:** அதைப் பற்றித் தான் அவர் பேசிக் கொண்டிருக்கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதிலுள்ள இடர்ப்பாட்டைத்தான் நான் குறிப்பிட்டுக் கொண்டிருந்தேன். பேச்சுரிமை, கைது செய்யப்படாத விலக்குரிமை இவை இரண்டில் தான் நமக்கு அக்கறையென்றால், இந்த விதியிலேயே அவற்றை எளிதில் குறிப்பிட்டு முடித்திருக்க முடியும். (இங்கிலாந்து நாட்டு) காமன்ஸ் சபையோடு ஒப்பிட்டுப் பேசியிருக்க வேண்டிய தேவையும் இருந்திராது. ஆனால் நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகள், இவ்விரு தனிநபர் சிறப்புரிமைகளை விடவும் மிக விரிவானவை. நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளில் பொதுமக்களின் உரிமைகளிலிருந்து மாறுபட்ட உரிமைகளும் பல அடங்கும். மேலும் அவற்றுள் தனி உறுப்பினர்களுக்கு எதிரான உரிமைகளும் அடங்கும். எடுத்துக்காட்டாக, பொதுமக்கள் சபைக்கு, எந்தவொரு குடிமகனையும், சபை அவமதிப்புக்காகத் தண்டிக்கும் சிறப்புரிமை உண்டு. இந்த உரிமையை நாடாளுமன்றம் செயல்படுத்தும்போது அதில் எந்தவொரு நீதிமன்றமும் குறுக்கிட முடியாது. நீதிமன்றங்களின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்ட சிறப்புரிமை அது. மேலும் நாடாளுமன்றத்திற்கு இழுக்கு விளைவிக்கும் வகையில் செயல்பட்ட எந்தவொரு நாடாளுமன்ற உறுப்பினர் மீதும் நடவடிக்கை

எடுக்கவும் நாடாளுமன்றத்திற்குச் சிறப்புரிமை உண்டு. இவை மிக முக்கியமான விஷயங்களாகும். எடுத்துக்காட்டாக, சிறைத் தண்டனையளித்தல். நாடாளுமன்றத்தை அவமதித்ததற்காகத் தனி நபர் ஒருவருக்கு அளிக்கப்பட வேண்டிய தண்டனையை எளிதில் வரையறுக்கவியலாது. அவ்வாறே உறுப்பினர்களின் எந்தெந்தச் செயல்கள் நாடாளுமன்றத்திற்கு இழுக்கு தருமென முடிவு செய்தலும்.

**திரு. பண்டித தாகூர் தாஸ் பார்கவா:** எங்களது அக்கறையெல்லாம் நாடாளுமன்ற உறுப்பினரின் சிறப்புரிமைகளைப் பற்றியதுதானேயன்றி நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளைப் பற்றியன்று.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னைப் பேச விடுங்கள். எந்தெந்தச் செயல்களும் வினைகளும் நாடாளுமன்றத்துக்கு இழுக்கு தேடித் தருவன என்பதை வரையறுத்தல் எளிதன்று. அதற்குக் கணிசமான அளவில் விவாதமும் சீர்தூக்கலும் தேவைப்படும். சிறப்புரிமைகளும், விலக்குரிமைகளும் என்னென்ன என்று பட்டியலிடக் கருதாமைக்கு அதுவும் ஒரு காரணம்.

ஆனால், நாடாளுமன்றம், பொய் அவதூறுகள், நியாயமல்லாத குற்றஞ்சாட்டுகள் போன்றவற்றை அளவுக்கதிகமாக எதிர்கொண்டு, மிகுந்த அவமதிப்புக்குள்ளாகி, நாடாளுமன்ற அமைப்புகளின் மீதே யாருக்காக நாடாளுமன்றம் உழைக்கிறதோ அந்த மக்களின் மரியாதையையும் நம்பிக்கையையும் இழக்குமளவுக்குச் சூழ்நிலை தோன்றுவதைத் தடுக்கச் சிறப்புரிமைகள் தேவை என்பதில் எனக்கோ, வரைவுக்குழுவின் பிற உறுப்பினர்களுக்கோ, ஐயமேதும் இருந்ததில்லை.

(சிறப்புரிமைகளை) வகைப்படுத்த இயலாமைக்கான ஒரு சிக்கலை எடுத்துரைத்தேன். நாங்கள் எதிர்கொண்ட வேறு சில இடர்ப்பாடுகள் குறித்தும் கூற விரும்புகிறேன்.

நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளைச் சட்டத்திலேயே வரையறுத்துப் பட்டியலிட வேண்டுமென்றால், அதற்கு மூன்று வெவ்வேறு வழிமுறைகள் இருப்பதாகத் தோன்றுகிறது. முதலாவதாக, அரசியலமைப்புச் சட்டத்திலேயே நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளையும், விலக்குரிமைகளையும் பட்டியலிட்டு வரை

யறுத்தல், நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகள், விலக்குரிமைகள் குறித்த அடிப்படை மூல நூலாகக் கருதப்படும் மே என்பவரின், 'நாடாளுமன்ற நடைமுறைகள்' என்ற நூலை மிகக் கவனமாக ஊன்றி நோக்கினேன். அந்நூலின் பொருளடங்கலில் மட்டுமே நாடாளுமன்றத்தின் சிறப்புரிமைகளையும் விலக்குரிமைகளை யும் குறித்து 8, 9 பத்திகள் காணப்படுகின்றன. (மே அவர்கள் வரை யறுத்துள்ளவாறு) அவற்றையெல்லாம் விரிவாகப் பட்டியலிடுவ தென்றால், நமது அரசியலமைப்புச் சட்ட நூலில் இருபது, இருபத்தைந்து பக்கங்களுக்குக் குறையாமல் தேவைப்படுமென் பதில் சற்றும் ஐயமில்லை. இவ்வளவு நீண்ட (இருபது இருபத் தைந்து பக்க) விரிவான பட்டியல் நமது அரசியலமைப்புச் சட்டத் தில் இடம்பெறுவதை உறுப்பினர்கள் விரும்புவார்களா என்பது எனக்குத் தெரியவில்லை. நாங்கள் இந்த வழியைப் பின்பற்றா மைக்கு இதுவே காரணம்.

அடுத்த வழி, பல நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங் களில் காணப்படுதல் போன்று, நாடாளுமன்றமே தனது சிறப் புரிமைகளையும் விலக்குரிமைகளையும் வகுத்துக் கொள்ளுமென் றும், அவ்வாறு நாடாளுமன்றம் சட்டமியற்றி வகுத்துக் கொள்ளும் வரை, ஏற்கெனவே நடைமுறையில் இருந்துவரும் சிறப்புரிமை களும் விலக்குரிமைகளும் தொடர்ந்து செயல்பாட்டில் இருக்கு மென்றும் விதி வகுத்தல். ஆனால், நமது கெட்ட காலமாக, 1935 ஆம் ஆண்டின் இந்திய அரசுச் சட்டத்தில் நாடாளுமன்றத்திற்கெனச் சிறப்புரிமைகளோ, விலக்குரிமைகளோ ஏதும் தரப்படவில்லை என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அனைவருமே அறிவீர்கள். அந்தச் சட்டத்தில் காணப்படுவதெல்லாம் நாடாளுமன்றத்தில் உறுப்பினர்களுக்குப் பேச்சுரிமை உண்டென்பதும், நாடாளுமன்றத் தில் ஆற்றிய உரைக்காக வெளியில் உறுப்பினர் மீது குற்றஞ் சாட்டப்பட்ட மாட்டாது என்பதுமான சிறு சலுகைகள்தான். இப்போதைய சட்டத்தில் நாடாளுமன்றத்திற்கோ, சட்டமன்றங் களுக்கோ சிறப்புரிமைகளோ, விலக்குரிமைகளோ ஏதும் தரப் படாமையால் இந்த வழியையும் பின்பற்ற இயலாது.

மூன்றாவதாக நாங்கள் பின்பற்றிய வழி என்னவெனில், (இங்கிலாந்து நாட்டு) காமன்ஸ் சபைக்கு உள்ள சிறப்புரிமைகள் யாவும் இந்திய நாடாளுமன்றத்திற்கு உண்டு எனக் குறிப்பிட்டுள் ளோம். இவ்வாறு வரைவுக்குழு பின்பற்றிய வழிகுறித்து உணர்ச்சி வயமான தடைகள் கூறலாமேயன்றி, எதிர்ப்போரின் வாதங்களில்

பொருளேதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. காரிய சாத்தியமான ஒரேயொரு எளிய வழியைத்தான் வரைவுக்குழு பின்பற்றியுள்ளது என்பதுடன் எங்களுக்கு வேறு எந்த மாற்று வழியும் இருப்பதாகத் தோன்றவில்லை. எனவே, இந்த விதியை நாங்கள் வரைவு செய்தவாறே ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** மாண்புமிகு உறுப்பினர் எனது மற்றொரு ஆலோசனை பற்றி ஏதும் கூறவில்லையே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்னரே கூறியவாறு, சிறப்புரிமைகளையும், விலக்குரிமைகளையும் வகைப்படுத்திப் பட்டியலிட முயன்றால் பட்டியல் இருபத்தைந்து பக்கங்களுக்குக் குறையாமல் நீளும்......[1]

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் தேஷ்முக்கின் ஆலோசனையானது, நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கான சிறப்புரிமைகளும் விலக்குரிமைகளும் சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் கிடைக்க வேண்டுமென்பதே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது வரைவு குறித்ததோர் ஆலோசனையே. சொல்லப்போனால் மாநிலச் சட்டமன்றங்கள் குறித்து நாம் உருவாக்கி வரும் விதிகள் யாவும் ஏறத்தாழ நாடாளுமன்றம் குறித்து உருவாக்கப்பட்ட விதிகளைப் போன்றே அமைந்துள்ளன. அங்கெல்லாம் நாம், நாடாளுமன்றத்திற்காக இயற்றப்பட்ட விதிகள் மாநிலச் சட்டமன்றத்திற்கும் பொருந்தும் என்று கூறிவிட்டு விடவில்லை. இந்த ஒரு விஷயத்தை மட்டும் இவ்வாறு குறிப்பிட்டு விடுவது ஒரு நெருடலான தன்மையில் இருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** முதலில் திரு. ஜஸ்பத் ராய் கபூரின் திருத்தத் தீர்மானத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அஃது:

> "விதி 169 பிரிவு (4)இல் 'ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் அவை' என்ற சொற்களையடுத்து 'அல்லது அதைச் சார்ந்த எந்தக் குழுவோ' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்"

திருத்தம் நிறைவேற்றப்பட்டது.

---

1. புள்ளிகள் குறுக்கீட்டைக் குறிக்கிறது.

விதி 169, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## விதி 170

[1]**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை, பொது): தலைவர் அவர்களே,

> "விதி 170இல் 'இவ்வாறு செய்யப்பட்ட' என்ற சொற்களையடுத்து 'சம்பளங்களும்' எனும் சொல் சேர்க்கப்படலாம்"

என முன்மொழிய இறைஞ்சுகிறேன்.

★ ★ ★

[2]**திரு. நசிருத்தீன் அகமது:** விதி 109 இன்றைக்கு எடுத்துக் கொள்ளப்படுமென்று எங்களுக்கு அறிக்கை தரப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதனால் என்ன?

★ ★ ★

## விதி 109

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> "விதி 109இல் 'கூறப்பட்டுள்ள வரை... இருப்பின்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'கூறப்பட்டுள்ள வரையிலும்... இருப்பினும்' எனும் சொற்கள் இடம்பெறலாம்" என முன்மொழிகிறேன்.

(திருத்தங்கள் 1896, 1897 ஆகியவை தாக்கல் செய்யப்படவில்லை)

★ ★ ★

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 3, பக் 584
2. அதே நூல் பக். 588
3. அதே நூல் பக். 588

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏதும் கூறுதல் தேவையில்லை என்று கருதுகிறேன். திரு. டி.டி. கிருஷ்ண மாச்சாரியின் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

*(திருத்தத்தின் வாசகம் கீழே தரப்படுகிறது):-*

''விதி 109இல் தரப்பட்டுள்ள வாசகத்திற்குப் பதிலாக,

'மேலே சொல்லப்பட்ட அதிகார வரம்பு, ஏதாவது ஒரு மாநிலத்துடன் தொடர்புள்ள பூசல்களுக்குப் பொருந்தாது. மேலும் உடன்படிக்கைகள், ஒப்பந்தங்கள், ஏற்பாடுகள், சன்னதுகள் போன்ற வரை ஆவணங்களின் கூறுகளால் எழும் பூசல்களிலும், சொல்லப்பட்ட அதிகார வரம்புக்குள் இவை வரா என்று அவ்வாணங்களிலேயே குறிப்பிடப்பட்டிருப்பின், அப்பூசல்கள் இந்த அதிகார வரம்புக்குள் வரா''

என்பது இடம் பெறலாம்''

*(முன்னர் குறிப்பிடப்பட்ட டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்துடன், இத்திருத்தமும் நிறைவேற்றப்பட்டது).*

விதி 109, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 110

* * *

[2]**திரு. அவைத் தலைவர்:** விதி 111, குற்றத்தன்மையுள்ள வழக்குகளையும் உள்ளடக்குகிறதா?

**திரு. நசிருத்தீன் அகமது:** இல்லை

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கென்றே தனியாக வேறொரு விதியினை வகுக்கவுள்ளோம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, விதி 111இல் குற்றஞ் சாட்டப்பட்ட வழக்குகள் குறித்து ஷரத்து ஏதும் சேர்க்கப்படவில்லை என்று குறிப்பிட்டமைக்கு மிக்க நன்றி...

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 3, பக் 590.
2. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 3, பக் 593-94.

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தலைவர் அவர்களே,

> ''விதி 110இன் பிரிவு (3)இல், 'ஆங்கே உரைக்கப்பட்டவாறு எந்த வொரு சிக்கலிலேனும் தவறான தீர்ப்பு கூறப்பட்டுள்ளது எனும் காரணத்துக்காக மட்டுமின்றி' எனும் சொற்களுக்குப் பதிலாக, 'ஆங்கே உரைக்கப்பட்டவாறு எந்த வொரு சிக்கலிலேனும் தவறான தீர்ப்புக் கூறப்பட்டிருப்பின் உச்சநீதிமன்றத்தின் அனுமதியோடு' எனும் சொற்கள் இடம்பெறலாம்''

என முன்மொழிகிறேன்.

வரைவில் காணப்படும் மொழிநடை நிரடலாக இருப்பதனால், விதியை எளிதாக இடர்ப்பாடின்றிப் படிக்க வகை செய்யும் பொருட்டு, அதே கருத்தை வேறு சொற்களால் மாற்றியுரைக்க முனைகிறோம். விதிப் பிரிவின் திருத்தப்பட்ட வாசகம் கீழ்வருமாறு:

> ''எந்தவொரு வழக்காளரும், ஆங்கே உரைக்கப்பட்டவாறு, எந்தவொரு சிக்கலிலாவது தவறான தீர்ப்பு வழங்கப்பட்டுள்ளது என்ற காரணத்திற்காகவோ, வேறு பிற காரணத்துக்காகவோ, சான்றளிப்போ, அனுமதியோ கொடுக்கப்பட்டிருப்பின், உச்சநீதிமன்றத்தின் அனுமதியுடன், உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம்.''

★ ★ ★

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தலைவர் அவர்களே, இந்த விவாதம் எங்கோ தடம் மாறிப் போய்க் கொண்டிருக்கிறதென்றும், நண்பர் நசிருத்தீன் அகமது தமது 1904, 1907 ஆகிய திருத்தங்களில் எழுப்பியுள்ள உடனடிச் சிக்கலை விட்டுவிட்டு, உறுப்பினர் தொடர்பில்லாத வேறு பொருட்களில் ஏதோ பேசிக் கொண்டிருக்கிறார்களென்றும் கூறாமலிருக்க முடியவில்லை. நம்முன் இருப்பது திருத்தம் 1904 மட்டுமே. இந்தத் திருத்தத் தீர்மானத்தில் நண்பர் நசிருத்தீன் அகமது கூற விரும்புவதெல்லாம், விதி 110, பிரிவு (1) இன் இறுதிப் பகுதியில் காணப்படும், அரசியலமைப்புச் சட்டத்திற்கு விளக்கம் கூறுதல் குறித்த சொற்கள் நீக்கப்பட வேண்டும் என்பதுதான். 'அரசியலமைப்புச்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 3, பக் 595.
2. அதே நூல், பக். 612-614.

சட்டத்திற்கு விளக்கம் கூறுதல் தொடர்பான' எனும் தொடரை என்ன காரணத்திற்காக அவர் நீக்க விரும்புகிறார் என்பது எனது செவியில் சரியாக விழவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். திருத்தம் 1904னைத் தாக்கல் செய்வதற்கான காரணத்தை அவர் கூறும்போது, சரியாக உள்வாங்கிக் கொள்ள நான் பெருமுயற்சி எடுத்தபோதும் என்னால் காதில் வாங்கிக் கொள்ள முடிந்ததெல்லாம், இச்சொற்கள் (முறையீட்டு) வரம்பைக் குறைத்து விடுவதாகவும், இச்சொற்கள் நீக்கப்படா விட்டால், அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவையுறாத வழக்குகளெதிலும் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்ய வியலாதெனத் தமக்குப் பொருள்படுவதாகவும் அவர் உரைத்ததுதான்.

**திரு. நசிருத்தீன் அகமது:** நான் கூறியது சரியென்றே நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சான்றளிப்பு குறித்த சிக்கல் ஏதும் எழவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** அப்பகுதி நீக்கப்பட வேண்டும் என்று நேற்றுதான் தாங்கள் கூறினீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உச்சநீதிமன்றத்தைக் குறித்த விதிகளின் அமைவு முறையை நண்பர் நசிருதீன் சரியாக விளங்கிக் கொள்ளவில்லையென்று கருதுகிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** இது தங்கள் வழக்கமான வாதம்தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியலமைப்புச் சட்ட வரைவில், அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தொடர்பான மேல்முறையீடுகளுக்கென்றும், அத்தகைய விளக்கமேதும் தேவைப்படாத வழக்குகளின் மேல்முறையீடுகளுக்கென்றும் தனித்தனியே விதிகள் வகுத்துள்ளோம். அரசியலமைப்புச் சட்ட விளக்கம் பற்றிய மேல்முறையீடுகள் குறித்து விதி 1102ம், அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படாத மேல்முறையீடுகள் குறித்து விதி 1112மாகத் தனித்தனியே வகுத்துள்ளோம். இவ்வாறு இருவேறு வகையான மேல் முறையீடுகளுக்குத் தனித்தனியே

விதிகள் வகுக்கப்பட்டிருப்பதன் காரணத்தையும் நண்பர் நசிருத்தீன் அகமது நன்குணரவில்லை. எனவே அதற்கான காரணத்தை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். உச்சநீதிமன்றம் உருவாக்கக்கூடிய விதிகளைக் குறித்த சட்டவிதி 121க்கான திருத்தம் ஒன்றும் கொண்டு வரப்படவுள்ளது. விதி 121, பிரிவு (2) பற்றி நான் அறிக்கை கொடுத்துள்ள திருத்தத் தீர்மானத்தில், உச்சநீதிமன்றத்தில், அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் வழக்குகள் வரும்போது, ஐந்து நீதிபதிகளுக்குக் குறையாமல் அமர்ந்து அந்த வழக்கை விசாரிக்க வேண்டும் என்றும் அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படாத பிற வழக்குகளில், வழக்கை விசாரிக்கத் தேவைப் படும் நீதிபதிகளின் எண்ணிக்கையையும் அமர்வின் அமைவையும் உச்சநீதிமன்றமே முடிவு செய்து கொள்ளலாமென்றும், இதற்கான விதிகளை உச்சநீதிமன்றமே உருவாக்கிக் கொள்ளலாமென்றும் கூறியுள்ளேன். எனவே, 'அரசியல் சட்டத்திற்கு விளக்கம் கூறுதல் தொடர்பான' எனும் சொற்கள் இருப்பதால், அரசியல் சட்ட விளக்கம் தேவைப்படாத வழக்குகளில் உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்ய எவ்விதத் தடையுமில்லை என்பதை நண்பர் நசிருத்தீன் அகமது புரிந்து கொள்வாரென நம்புகிறேன். இவ்விரு வேறு வழக்குகளிலும் அமர்வு நீதிபதிகளின் எண்ணிக்கையில் பெரும் வேறுபாடு இருப்பதால் இவ்விரண்டு வகை மேல் முறையீட்டு வழக்குகளுக்கும் தனித்தனியே விதி வகுத்துள்ளோம் என்பதையும் நண்பர் புரிந்து கொண்டிருப்பார்.

அடுத்து, மிக விரிவாக விவாதிக்கப்பட்ட வினாவாகிய, உச்சநீதிமன்றத்திற்குக் குற்றவியல் வழக்குகளிலும் மேல் முறையீட்டு வரம்பு தேவையா என்னும் வினாவுக்கு வருகிறேன். நான் முன்னரே கூறியவாறு, இவ்வளவு நேரம் நடைபெற்ற விவாதத்திற்கும், விதி 110, அதற்கு நண்பர் நசிருத்தீன் அகமது முன்மொழிந்த திருத்தம் ஆகியவற்றுக்கும் தொடர்பேதும் இல்லை. எனவே விதி 110 குறித்து நாம் முடிவெடுப்பதற்கு நடந்து முடிந்த விவாதத்தை வழியாக வைத்துக் கொள்ளவியலாது. இருப்பினும் நீண்ட, விரிவான விவாதமொன்று நடந்து முடிந்துள்ளபடியால், அதுகுறித்து ஒருசில சொற்கள் கூறமுற்படுவேன். ஒரு குற்றவியல் வழக்கும் கூட, அதில் அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப் படுமெனில், விதி 110 இன் கீழ் உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீட்டுக்காகக் கொண்டுவர முடியும் என்பதை அவையோரே நோக்கி

யுணர முடியும். எனவே, குற்றவியல் வழக்குகள் உச்சநீதிமன்றத்திற்கு வருதற்கு விதி 110ஐப் பயன்படுத்தல் ஒருவழியென்றாலும் வெகுசில வழக்குகளே இவ்வாறு வரமுடியும்.

மேலும், விதி 112, (இங்கிலாந்தின்) பிரிவிக் கவுன்சிலுக்குள்ள அதிகார வரம்பு இந்திய உச்சநீதிமன்றத்திற்கும் உண்டு என விதிக்கிறது. 'உரிமையியல் அல்லது குற்றவியல் தொடர்பான எந்த வழக்கிலும், தீர்ப்பாணை அல்லது இறுதியாணை' என்ற சொற்களின்பால் மாண்புமிகு உறுப்பினர்களின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன். இதன்படி, விதி 112இன் கீழ், சிறப்பு அனுமதி வாயிலாகக் குற்றவியல் வழக்குகளையும் உச்சநீதிமன்றம் மேல்முறையீட்டுக்கு அனுமதிக்கலாம். குற்றவியல் வழக்கறிஞர்கள் இடையே (இதற்கெனத்) தனியான விதிவகுக்கப்பட வேண்டுமென்னும் உணர்வு பரவலாக இருப்பதை நான் கவனித்திருக்கிறேன்.....[1]

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** குற்றவியல் வழக்குகளை நடத்தும் வழக்கறிஞர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மன்னிக்கவும், 'குற்றவியல் வழக்கு நடத்தும் வழக்கறிஞர்கள்' (எனும் பொருளின் தான் குறிப்பிட்டேன்), விதி 111 எவ்வாறு உரிமையியல் வழக்குகளில் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்ய விதி வகுத்துள்ளதோ அவ்வாறே குற்றவியல் வழக்குகளிலும் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்ய விதிவகுக்கப்பட வேண்டுமெனக் கருதுகின்றனர். எல்லா வழக்குகளுக்கும் இல்லையென்றாலும் கூட மரண தண்டனை போன்ற கடுமையான தண்டனை தரப்படும் குற்றவியல் வழக்குகளுக்காவது உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்ய வழிவகை தேவையென்று கருதுகின்றனர். உச்சநீதிமன்றத்துக்குக் குற்றவியல் வழக்குகளிலும் அதிகார வரம்பு தேவையெனக் கூறப்படும் வாதங்களில் நியாயமில்லையென்று நான் கூற முனையவில்லை. ஆனால் அந்நோக்கை செயல்படுத்துதல் எவ்வாறு என்பதுதான் இப்போதைய வினா. உச்சநீதிமன்றத்துக்குக்

1. புள்ளிகள் குறுக்கீடுகளைச் சுட்டுகின்றன.

குற்றவியல் வழக்குகளிலும் மேல்முறையீட்டு அதிகார வரம்பு உண்டென்று அரசியலமைப்புச் சட்டத்திலேயே தனியாக விதி வகுப்பதா? அல்லது உச்சநீதிமன்றத்தில் குற்றவியல் வழக்குகளிலும் மேல்முறையீடு செய்ய வழிவகுக்குமாறு சட்டமியற்ற நாடாளுமன்றத்திற்கு அனுமதியளிப்பதா? இப்போதைக்கு என்னுடைய கருத்து என்னவென்றால், - நான் இங்கு வரட்டுப் பிடிவாதம் காட்டவோ அல்லது வீணாக நம்பிக்கையூட்டவோ விரும்பவில்லை; இதுகுறித்து நான் திறந்து உள்ளத்துடன், வெற்று உள்ளத்துடனல்ல, இருக்கிறேன் - தேவைப்பட்டால் குற்றவியல் வழக்குகளிலும் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்ய அனுமதிக்கும் வகையில் நாடாளுமன்றம் சட்டம் இயற்றிக் கொள்ளட்டுமென்று விட்டுவிடலாம். பின்னர் நாடாளுமன்றம் வேண்டுமானால், குற்றவியல் வழக்குகளில் உச்சநீதிமன்ற மேல்முறையீடு அனுமதிக்கப்பட்டால், உச்சநீதிமன்றத்தின் வேலைப்பளு எவ்வளவு கூடும், உச்சநீதிமன்றத்தால் அவற்றையேற்றுச் சமாளிக்க முடியுமா என்பன போன்ற கூறுகளைக் கருதி, ஆய்வு நடத்தி, அவற்றுக்கேற்பத் தேவைப்படும் நீதிபதிகளின் எண்ணிக்கை, செலவுகள் ஆகியவற்றையும் ஆய்ந்து தேவையான வகையில் சட்டமியற்றிக் கொள்ளட்டும். இதற்கெல்லாம் பல புள்ளியியல் தகவல்களும் ஆய்வுகளும் தேவைப்படுமாதலின், இப்பணியை நாடாளுமன்றத்திற்கென விட்டுவிடுதலே உகந்தது. என்னுடைய மற்றொரு கருத்தையும் இங்கு சொல்லியாக வேண்டும். மரண தண்டனை விதிக்கப்பட்ட வழக்குகளில் உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தல் பொருட்டு சட்டமியற்றுவதை விட, மரண தண்டனையே ஒழிக்கச் சட்டமியற்றல் மேலானது (ஆமாம் ஆமாம் என அவையில் வரவேற்பு). அதுவே சரியான வழியென்று கருதுகிறேன்; அதன்வழி இந்த முரண்பூசலும் முடிவுக்கு வந்துவிடும். வன்முறைக்குப் பதிலாக அன்பு நெறியைப் போற்றுகின்ற நாடு இது. இன்றைய நாளில் மக்கள் பின்பற்றுகிறார்களோ இல்லையோ, தொன்றுதொட்டே அன்புநெறியை அறநெறியின் ஆணிவேராகக் கடைபிடிக்கும் மரபில் ஊன்றிய நாடு இது. இவற்றையெல்லாம் கருதிப் பார்த்தால் மரண தண்டனையை ஒழிப்பதே முறையான செயல் எனலாம்.

[1]**பண்டித லட்சுமிகாந்த மைத்ரா:** ஏன் குற்றவியல் நீதிமன்றங்களையே ஒழித்துவிடலாமே.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக். 615.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போதைக்கு நாம் விதி 110க்கான திருத்தத்தைப் பற்றியும் நண்பர் நசிருத்தீன் முன்மொழிந்த திருத்தங்களையும் குறித்து ஆய்வதோடு நிறுத்திக் கொள்வோம்.

★ ★ ★

*(கீழ்க்காணும் திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டன)*

*(1) ''விதி 110, பிரிவு (1)இல், 'மாநிலம்' என்ற சொல்லுக்கு பதிலாக, 'இந்தியாவின் நிலப்பரப்பில்' எனும் சொல் இடம்பெறலாம்.*

*(2) ''விதி 110, பிரிவு (3)இல், 'தவறாகத் தீர்ப்பளிக்கப்பட்ட சிக்கல்கள்' எனும் காரணத்திற்காக மட்டுமன்றி, 'மேலும்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'தவறாகத் தீர்ப்பளிக்கப்பட்ட சிக்கல் எனும் காரணத்திற்காக, உச்சநீதிமன்றத்தின் அனுமதியுடன்' எனும் சொற்கள் இடம் பெறலாம்.*

*(விதி 110, திருத்தப்பட்டவாறு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது)*

★ ★ ★

## விதி 111

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> ''திருத்தத் தீர்மானங்கள் பட்டியலில் 1916 முதல் 1919 வரையிலான தீர்மானங்களை யொட்டி, விதி 111, பிரிவு (1) துணைப் பிரிவு (a) இல், 'இருபதாயிரம் ரூபாய்' என்ற சொற்களையடுத்து, அல்லது 'இதற்கென நாடாளுமன்றம் சட்டமியற்றி வரையறுக்கும் தொகை' எனும் சொற்கள் இடம் பெறலாம்.''

என முன்மொழிகிறேன்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, 1949 ஜூன் 2, பக் 617.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, ''விதி 111, பிரிவு (1) உடன்,

'உச்சநீதிமன்றத்தின், ஒற்றை நீதிபதியோ, தொகுப்பு அமர்வின் நீதிபதிகள் ஒருவரோ, ஒன்றுக்கு மேற்பட்டவரோ, அல்லது பல நீதிபதிகள் கொண்ட தொகுப்பு அமர்வில் தெளிவான பெரும்பான்மையின்றிச் சம எண்ணிக்கையில் பிளவுபட்டோ வழங்கிய தீர்ப்பு, தீர்ப்பாணை அல்லது ஆணையின் அடிப்படையில் உச்சநீதிமன்றத்திற்கு மேல் முறையீடு ஏதும் செய்யவியலாது' எனும் வரம்புரை சேர்க்கப்படலாம்'' என முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): தலைவர் அவர்களே,

''விதி 111 பிரிவு (2)இல் 'அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படுமளவில், சட்டச் சிக்கல் கொண்டுள்ள வழக்கில் தவறாகத் தீர்ப்பளிக்கப்பட்டிருந்தால்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் சட்டச் சிக்கலில் தவறான தீர்ப்பு வழங்கப்பட்டிருந்தால்' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்''

என முன்மொழிகிறேன்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

''திருத்தங்களின் பட்டியலில், 1916 முதல் 1919 வரையிலான எண்ணிட்ட திருத்தத் தீர்மானங்களையொட்டி, விதி 111, பிரிவு (1), துணைப் பிரிவு (a) இல், 'இருபதாயிரம் ரூபாய்' எனும் சொற்களுக்கு பதிலாக 'இது குறித்து நாடாளுமன்றம் சட்டமியற்றி நிர்ணயிக்கும் தொகை' எனும் சொற்கள் இடம்பெறலாம்''

என முன்மொழிகிறேன்.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, ஜூன் 6, பக். 620.
2. அதே நூல், பக். 631

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, இந்த அவையானது, எந்தக் கருத்தைக் குறித்து ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டப்படுகிறது என்பதை அவைக்கு நினைவூட்டித் தொடங்கலாம் என்று கருதுகிறேன். இரண்டு திருத்தங்களுக்கிடையே எதை ஏற்பது என்பதே சிக்கல். முதலாவதாக அருமை நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா முன்மொழிந்துள்ள திருத்தம், ஒருவகையில், இது எனது திருத்தத்திலிருந்தும் நான்காம் வாரப் பட்டியல் I இல் 25 ஆம் திருத்தம்), 1911 ஆம் திருத்தத்திலிருந்தும் வடித்தெடுக்கப்பட்டதே. இவ்விரு திருத்தங்களிலிருந்து எழும் சிக்கல்களைப் பற்றிப் பேசுமுன்னர், பொதுவான கருத்துக்கள் இரண்டொன்றைக் கூற விரும்புகிறேன்.

நான் கூற விரும்பும் முதல் கருத்து, விதி 111, உரிமையியல் நடைமுறைச் சட்டத்தின் பிரிவுகள் 109, 110 ஆகியவற்றின் மறுபதிப்பாகும். தற்போது நான் முன்மொழிந்துள்ள திருத்தத்தைத் தவிர, விதி 111க்கும் உரிமையியல் நடைமுறைச் சட்டப் பிரிவுகளுக்கும் யாதொரு வேறுபாடும் இல்லை. எனவே, விதி 110ஐப் பொறுத்தமட்டில் உயர்நீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்தல் பற்றிய விதிகளைப் பொறுத்தமட்டில் பொருளளவிலோ, முறைமை வகையிலோ ஒருசிறிதும் மாற்றம் கிடையாது என்பதை அவையோர் நினைவில் கொள்ள வேண்டும். அதாவது, முன்னர் குறிப்பிட்டவாறு உரிமையியல் நடைமுறைச் சட்டப் பிரிவுகள் இரண்டும் அப்படியே பின்பற்றப்பட்டுள்ளன.

நான் குறிப்பிட விரும்பும் இரண்டாவது கருத்துக்கு வருகிறேன். பல்வேறு மாநிலத் தலைநகரங்களில் உயர்நீதிமன்றங்களை நிறுவி (இங்கிலாந்து) அரசர் வழங்கிய சிறப்புரிமைப் பட்டயத்தின் 39வது பத்தியின் மறுபதிப்பே, உரிமையியல் நடைமுறைச் சட்டத்தின் 109, 110ஆம் பிரிவுகளாக இடம்பெற்றுள்ளன. அந்த 39வது பத்தியில்தான் உயர்நீதிமன்றங்களின் அதிகார வரம்புகள் தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

மூன்றாவதாகவும் ஒரு தகவலைச் சுட்ட விரும்புகிறேன். இந்த சிறப்புரிமைப் பட்டயங்கள் நிறுவப்பட்ட ஆண்டு 1862. இந்தப்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 1949, ஜூன் 6, பக். 631 -32

பட்டயங்களிலேயே, இவற்றை மாற்றுவதற்கான அதிகாரம் சட்ட மன்றங்களுக்கு உண்டு என்று கூறப்பட்டுள்ளது. இப்பட்டயங்கள் வழங்கப்பட்ட தொடக்க காலத்திலிருந்தே உயர்நீதிமன்றத்தின் அதிகாரங்களை மாற்றும் அதிகாரம் சட்டமன்றங்களுக்கு இருந்து வந்த போதிலும், இதுநாள் வரை, மத்தியச் சட்டமன்றமோ, பிறிதெந்த மாநிலச் சட்டமன்றங்களோ, உயர்நீதிமன்றத்தின் தீர்ப் பாணை, இறுதிக் கட்டளை தீர்ப்பு ஆகியவை காரணமாக எழும் மேல் முறையீட்டு அதிகாரங்களை மாற்ற நினைத்ததில்லை. எனவே உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பாணை, இறுதிக் கட்டளை, தீர்ப்பு ஆகியவை குறித்த மேல்முறையீட்டு அதிகாரம் 75-80 ஆண்டுக் கால வரலாறு கொண்டதென்பதையும், இந்த நீண்ட காலத்தில் அவை சற்றும் மாற்றுதலுக்காளாகாது நீடித்து வந்துள்ளன என்பதை யும் கருத வேண்டும். எனவே, நீண்டகாலமாக, காலத்தின் சோதனை களையும் தாண்டி நல்லமுறையில் செயல்பட்டுவரும் விதிமுறை களைத் தகுந்த வலுவான காரணங்கள் இன்றி மாற்ற வேண்டிய தில்லை. உச்சநீதிமன்றம் குறித்து அரசியலமைப்புச் சட்ட விதி களை உருவாக்குவதில் இவ்வரலாறு கவனத்தில் கொள்ளத்தக்கது.

இன்றைக்குச் சற்று முந்தைய காலத்தில்தான் இதே அவை (மத்திய) சட்டப் பேரவையாக இயங்கிக் கொண்டிருந்தபோது, இந்திய அரசுச் சட்டத்தின்கீழ் பிரிவிக் கவுன்சில் செலுத்தி வந்த அதிகாரங்கள் யாவும், கூட்டரசின் நீதிமன்றத்திற்கு மாற்றப்பட வேண்டும் என வற்புறுத்தி வந்தது என்பதை மறந்துவிடக்கூடாது. நாம் கூட்டரசு நீதிமன்றத்தின் இடத்தில் உச்சநீதிமன்றத்தை நிறுவு கின்ற கட்டத்தில், பிரிவிக் கவுன்சிலிருக்கிருந்த அதிகாரங்களை யெல்லாம் நமது உச்சநீதிமன்றத்துக்கு மாற்றித் தர வேண்டிய தரு ணத்தில், இதுகுறித்த விதிகளை நாம் அப்படியே எடுத்தாளக் கூடாது என்று எதிர்ப்பு காட்டுவது மிக விந்தையாக உள்ளது. இங்கு நான் குறிப்பிட விரும்பும் முதன்மையான கருத்து அடிப்படையில் நாம் பொருளளவிலோ, நிலைத்தன்மையிலோ எவ்வித மாற்றமும் செய்ய முற்படவில்லையென்பதே. நாம் இங்கு செய்வதெல்லாம் உயர்நீதிமன்றங்களுக்கும் பிரிவிக் கவுன்சிலுக்குமிடையே நிலவிய உறவுகள், தன்மையில் சற்றேதும் மாற்றமின்றி, உயர்நீதி மன்றங் களுக்கும் உச்சநீதிமன்றத்துக்கு மிடையிலான உறவாக இனித் தொடரும் என விதி வகுப்பதுதான்.

ஐயா, தற்போது, எனது உரையின் தொடக்கத்தில் குறிப் பிட்ட திருத்தங்களுக்கு வருகிறேன். அவை, எனது திருத்தமும் (எண் 25), பேராசிரியர் சிபன்லால் சாக்சேனாவின் திருத்தமும் ஆகும். எனது திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், உச்சநீதி மன்றம் தொடர்ந்து மேல்முறையீட்டு நீதிமன்றமாகச் செயல் படும். நாடாளுமன்றம், முறையீடுகளின் எண்ணிக்கையையும் தன்மையையும் குறித்து வரம்பு நிறுவ முடியுமேயன்றி, மேல் முறையீட்டு நீதிமன்றம் எனும் நிலையை மாற்றிவிட இயலாது. எவ்வாறாயினும், துணைப்பிரிவு (3) நாடாளுமன்றத்தால் மாற்ற இயலாத அளவில் உறுதியாய் இடம்பெற்றிருக்கும். என்னுடைய நோக்கில் எந்தெந்த வகையான வழக்குகளில் பிரிவி கவுன்சிலில் (உச்சநீதிமன்றத்தில்) மேல் முறையீடு செய்யலாம் என்பதில் வேண்டுமானால் அவ்வப்போது முடிவெடுக்க நாடாளுமன்றத்தை அனுமதிக்கலாமேயன்றி, விதி 111, விதி (1), துணைப்பிரிவு (3)ல் நாடாளுமன்றம் கைவைக்க ஒருபோதும் அனுமதிக்கலாகாது. ஏனெனில் அஃது வெறும் சட்ட விஷயம் மட்டுமன்று; நீதியியலின் அடிப்படைக் கோட்பாடுமாகும். எந்தவொரு குறிப்பிட்ட வழக்கி லாவது, வழக்கறிஞர்களுக்கு வெளிப்படையாய்த் தெரியக்கூடிய காரணங்களுக்காக, சொத்து மதிப்பீட்டின் அளவு காரணமாக, அவ்வழக்கு, துணைப்பிரிவுகள் (a), (b) ஆகியவற்றின் வரம்புக்குள் அடங்காதென உயர்நீதிமன்றம் தீர்மானித்த போதிலும்கூட, அவ் வழக்கு, இரண்டு வழக்காடிகளை மட்டுமே பாதிப்பதாக இல் லாமல் பொதுமக்களை பாதிக்கும் ஒன்று எனில், உச்சநீதிமன்றத் தில் மேல்முறையீடு செய்வதற்குத் தடையேதும் இருக்கக் கூடாதா தலின், இக்கருத்து உயர்நீதிமன்ற அதிகார வரம்பிலேயே பிணைந் திருக்க வேண்டும். ஆகவேதான் துணைப்பிரிவு (C), நாடாளுமன் றத்தின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்டதாக நிறுவப்பட வேண்டு மென்று கருதுகிறேன்.

மாறாக, பேராசிரியர் சாக்சேனாவின் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டால் இரண்டு விளைவுகள் நிகழும். ஒன்று, நண்பர் பக்ஷி தேக் சந்து சுட்டிக்காட்டியது போன்று, உரிமையியல் வழக்கு களில் உச்சநீதிமன்றத்தின், மேல்முறையீட்டு அதிகார வரம்பு நீக்கப்பட்டுவிடும். இந்த நாட்டில் உச்சநீதிமன்றம் என ஒன்றை நிறுவிவிட்டு, அதில் மேல்முறையீடு செய்யும் உரிமைகளில் கைவைக்க நாடாளுமன்றத்தை அனுமதிப்பதென்பது ஏமாற்று

வேலையென்றே உறுதியாய்க் கூறுவேன். அதற்கு மாறாக, நாமே இதன் பொறுப்பைத் துணிவுடன் ஏற்றுக் கொண்டு, உரிமையியல் வழக்குகளில் உச்சநீதிமன்றம், மேல்முறையீட்டு நீதிமன்றமாகச் செயல்படாது என்றும், வெறும் கூட்டரசு நீதிமன்றம் போலத்தான் செயல்படும் என்றும் கூறிவிடலாமே.

நீதியியலின் அடிப்படை அகக்கூறு என்று நான் குறிப்பிட்ட துணைப் பிரிவு (C), நிரந்தரமாக அரசியலமைப்புச் சட்டத்தில் இடம்பெறுதற்கு மாறாக, அதை நீக்கும் அதிகாரம் நாடாளுமன்றத் திற்குக் கொடுக்கப்படும் என்பது இரண்டாவது விளைவாகும். எனவே உச்சநீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகாரம் இளக்கத் தன்மையோடு விளங்க வேண்டுமென்ற வேண்டுகோளை எனது திருத்தம் (25) நிறைவேற்றும் என்றே கருதுகிறேன். எவ்வாறெனில் உச்சநீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகார வரம்பை முற்றும் நீக்காமலேயே, துணைப் பிரிவுகள் (a), (b) ஆகியவற்றில் தக்க மாற்றங்களைச் செய்ய நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்கப் படும்; ஆனால் துணைப்பிரிவு (C) யினை எவ்விதத்திலும் மாற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்குக் கிட்டாது. ஆகவேதான் பேரா சிரியர் ஷாவின் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

*(மொத்தத்தில் நான்கு திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டன; ஒன்று தள்ளுபடி செய்யப்பட்டது, விதி 111, திருத்தப்பட்டவாறு அரசியலமைப்புச் சட்டத் தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 112

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூற ஏதுமில்லை.

**அவைத் தலைவர்:** ''விதி 112இல்,

'தற்போதைக்கு முதல் அட்டவணையின் பகுதி III இல் வரையறுக்கப் பட்டுள்ள மாநிலங்களிலன்றி, அரசியலமைப்புச் சட்டத்தின் விதிகள் 110ஒ, 111ஒ பொருந்தா' எனும் சொற்கள் நீக்கப்படலாம்''

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 6, 1949, பக். 640.

விதி 112, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## புது விதி 112 - A

[1]திரு. அவைத் தலைவர்: டாக்டர் அம்பேத்கர் தமது 191 ஆம் திருத்தமாகத் தாக்கல் செய்துள்ள புதுவிதி எடுத்துக் கொள்ளப் படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

''திருத்தங்களின் பட்டியலில் 1932வது திருத்தமாக, விதி 112ஐ அடுத்து,

| | |
|---|---|
| உச்சநீதிமன்றம் விதித்த ஆணைகளையும் தீர்ப்புகளையும் மறுபரிசீலனை செய்தல் | '112-A நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்கள் அரசியல் சட்டத்தின் விதி 121இன் கீழ் தரப்படும் நெறிமுறைகள் ஆகியவற்றின் வரம்புக்குள்ளாக, உச்சநீதிமன்றத்தின் தீர்ப்புகளையும் ஆணைகளையும் மேலாய்வு செய்யும் அதிகாரம் உச்சநீதிமன்றத்துக்கு உண்டு |

என்பது சேர்க்கப்படலாம்'' என முன்மொழிகிறேன்.

ஐயா, அரசியலமைப்புச் சட்ட வரைவு, இப்போதுள்ள நிலையில்.....[2]

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** இங்கு ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுகிறது. திருத்தம் 1932 தாக்கல் செய்யப்படவில்லை...

**திரு. அவைத் தலைவர்:** அது தாக்கல் செய்யப்படவில்லை; எனினும் புதிய விதியாக இதனை அனுமதிக்கிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** திருத்தம் 1932 முற்றிலும் திருத்தம் 1928ஐயொத்தது எனச் சுட்ட விரும்புகிறேன். எனவே

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 6, 1949, பக். 640-41
2. ... புள்ளிகள் குறுக்கீட்டைக் குறிக்கின்றன.

திருத்தம் 1928 தாக்கல் செய்யப்படுமாயின், 1932 ஆம் திருத்தத்தைத் தாக்கல் செய்ய வியலாது.

**திரு. அவைத் தலைவர்:** இதனைப் புதிய விதியாகவே எடுத்துக் கொள்வதாய் ஏற்கெனவே கூறியுள்ளேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியலமைப்புச் சட்ட வரைவில், தீர்ப்புகளை மறுபரிசீலனை செய்ய வழிவகுக்கப் படவில்லை. இது, ஒரு பெருங்குறை யென்பதை உணர்ந்தமை யால், உச்சநீதிமன்றத்திற்கு அந்த அதிகாரங்களை வழங்குவதற் காக இப்புதுவிதி கொண்டு வரப்படுகிறது.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்** (சென்னை: பொது): தலைவர் அவர்களே, இவ்விதியின் வரைவு, நாம் நிறைவு கொள் ளும் அளவுக்கு சரியாக இல்லையென அஞ்சுகிறேன். குறிப்பாகச் சொல்வதெனில், உச்சநீதிமன்றத்திற்கு அதிகாரம் ஒன்றைக் கொடுத்து விட்டு அதை உச்சநீதிமன்றமே வரம்புறுத்த விதிகள் இயற்றலாம் எனக் கூறுதல் முறையான சட்டமன்று. உச்சநீதிமன்றத்தின் இந்தச் சாதாரண அதிகாரத்தில் குறுக்கிட நாடாளுமன்றத்துக்கு உரிமை தரக் கூடாது.

**திரு. அவைத் தலைவர்:** உச்சநீதிமன்றத்தின் முடிவுகளைப் பற்றியதே இந்த விதி.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** அதற்கும் இப்போது வருகிறேன். உச்ச நீதிமன்றம் தனது தீர்ப்பையே மறுபரிசீலனை செய்வதற்குத் தடைகள் ஏதும் இருக்கக்கூடாது என்பதற்கு வலுவான காரணங்கள் உண்டு. இந்த இரு நோக்கிலும் விதி குறையுடையதாய்த் தோன்றுகிறது. விதியை இதே வடிவில் புகுத்துவதா அல்லது அதனை வேறு மாற்று வடிவில் புகுந்தவியலுமாவென ஆலோசனை செய்யுமாறு டாக்டர் அம்பேத்காரை வேண்டுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நண்பர் சந்தானம் விதியை முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டமையாலேயே இக் கருத்துக்களைக் கூறியிருக்கிறாரென்று கருதுகிறேன். முதலாவதாக, இங்கு விதிகள் உருவாக்கும் அதிகாரம் எதையும் உச்சநீதிமன்றத்

துக்கு நாம் தந்துவிடவில்லை. இந்த அதிகாரம் விதி 121 இலிருந்தே கிடைக்கிறது. அந்த விதியை நோக்கினால்,

> ''... உட்பட உச்சநீதிமன்றத்தின் நடைமுறை, செயல் நெறி ஆகியவற்றை ஒழுங்குபடுத்தும் விதிகளை, உச்சநீதிமன்றம், நாடாளுமன்றமியற்றும் சட்டங்களுக்குட்பட்டும், குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடனும் இயற்றிக் கொள்ளலாம்''

எனும் வாசகம் இருப்பதைக் காணலாம். எனவே இந்த விதி உச்ச நீதிமன்றத்துக்கு இவ்வதிகாரத்தைக் கொடுக்கிறது என்பது தவறு. உச்சநீதிமன்றம் ஏற்கெனவே இவ்வதிகாரத்தைப் பெற்றுள்ளது. அதைக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் பயன்படுத்த வேண்டும். திரு. சந்தானம் தவறான கருத்தைக் கொண்டதற்கு மற்றொரு காரணம், மறுபரிசீலனை பற்றிய விதிகள் உருவாக்குதல் குறித்து விதி 121, பிரிவு (bb) எனவொன்றைச் சேர்ப்பதற்காக, நான் முன்மொழிந்துள்ள பட்டியல் I இல் 42 ஆம் திருத்தத் தீர்மானத்தை அவர் நோக்கத் தவறியதுதான் என்று கருதுகிறேன். எனவே, இவ்விரண்டு கூறுகளையும் கருத்திலெடுத்துக் கொள்வோமாயின், உச்ச நீதிமன்றத்தின் மறுபரிசீலனை அதிகாரம், விதி 121, திருத்தம் 42 ஆகியவற்றின் வரம்புகளுக்குட்பட்டிருக்க வேண்டிய தேவையைப் புரிந்து கொள்ள முடியும்.

(விதி 112-A நிறைவேற்றப்பட்டு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).

## விதி 113

**திரு. அவைத் தலைவர்:** விதி 113.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** இதுகாறும் இந்த அவை, முதலாம் அட்டவணையில் பகுதி III இல் தெளிவாகவே மாநிலம் என்ற சொல்லைத் தவிர்த்து வந்துள்ளது. ஆகையால் விதி 113 தேவையற்றது. அவையில் வாக்கெடுப்புக்கு விட்டு அதனை நீக்கி விடலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். நிலைமை அதுதான்.

(விதி 113, அரசியலமைப்புச் சட்டத்திலிருந்து நீக்கப்பட்டது).

★ ★ ★

## விதி 114

**திரு. அவைத் தலைவர்:** விதி 114ஐ எடுத்துக் கொள்கிறோம். இதற்குத் திரு. குப்தேயின் திருத்தத் தீர்மானம் ஒன்று உண்டு.

*(திருத்தத் தீர்மானம் தாக்கல் செய்யப்படவில்லை)*

''எவராவது பேச விரும்புகிறீர்களா?''

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர், நமது அரசியலமைப்புச் சட்ட வரைவில், உச்சநீதிமன்றத்தின் அதிகாரங்களை வகுக்கும் விதிகள் எவற்றிலும், வருமானவரி வழக்குகளில் மேல்முறையீடு செய்வதற்கான அனுமதி ஏதும் தெளிவாக உரைக்கப்படவில்லை என்று கூறியது எனது கவனத்தை ஈர்த்தது. இதைப்பற்றிக் கூர்மையாக ஆய்ந்து கொண்டிருக்கிறேன் என்பதையும், இத்தகைய அதிகாரத்தை உச்சநீதிமன்றத்திற்கு வழங்க, ஏற்கெனவே உள்ள விதிகள் எதனையும் பயன்படுத்த இயலாதென்று தெரியவந்தால், இதைக்குறித்து மட்டும் வகுப்பதற்கென்று, புதிய விதி ஒன்றை சேர்க்கக் கருதியுள்ளேன் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே இந்த விதி வரைவிலுள்ளபடியே நிறைவேற்றப்படலாம்.

*(விதி 114 அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 121

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, ''விதி 121, பிரிவு (3) இன் வரைவுக்குப் பதிலாக,

> 'உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பு எதுவும், திறந்த நீதிமன்றத்திலன்றி வெளியிடப்படலாகாது. மேலும் இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் விதி 119இன் கீழ் எந்த அறிக்கையும் திறந்த நீதிமன்றத்தில் வெளியிடப்பட்ட கருத்தின்படியல்லாது வெளியிடப்படலாகாது' எனும் வாசகம் இடம்பெறலாம்''

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 6, 1949, பக். 642.
2. அதே நூல், பக். 645

என முன்மொழிகிறேன். மேலும், 1966 ஆம் திருத்தமாக, ''விதி 121, பிரிவு (4)க்கு பதிலாக,

> '(4) எந்தவொரு வழக்கிலும், வழக்கெடுப்பின்போது அமர்ந்து விசாரணை நடத்திய நீதிபதிகளில் பெரும்பான்மையோரின் ஒப்புதலின்றி வழக்கின் தீர்ப்போ, கருத்தோ வெளியிடப்படலாகாது. ஆனால், பெரும்பான்மையோர் கருத்துடன் ஒத்துப்போகாத நீதிபதியொருவர், மாறுபட்ட கருத்தையோ, தீர்ப்பையோ தெரிவிப்பதற்கு இந்த விதி ஒருபோதும் தடையாயிராது''

எனும் பகுதியைச் சேர்க்கலாம்'' எனும் தீர்மானத்தையும் முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, அருமை நண்பர் மதிப்பிற்குரிய லாரி தாக்கல் செய்துள்ள திருத்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ளவியலாது என்பதை மிக வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். அவரது இந்தத் திருத்தத்தின் விளைவு குறித்து அவர் முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டார் என்று எனக்குத் தோன்றுகிறது.

உச்சநீதிமன்றத்தின் நடைமுறைக்கான விதிகளை, உச்சநீதிமன்றமே தடையின்றி உருவாக்கிக் கொள்ள விட்டு விட்டால், நாட்டு வருவாய் மீது கணிசமான பளுவைச் சுமத்துவதான விதிகளைக் கூட நீதிமன்றம் உருவாக்கிக் கொள்ளலாம் என்பதால், உச்சநீதிமன்றம் உருவாக்கும் விதிகளுக்குக் குடியரசுத் தலைவரின் ஒப்புதல் தேவைப்படுகிறது. எடுத்துக்காட்டாக ஒரு குறிப்பிட்ட வழக்கினை விசாரிக்க இரண்டு நீதிபதிகள் அமர வேண்டுமென்று உச்சநீதிமன்றம் விதி வகுக்கலாம். ஆனால், அது பொதுநிதியின் மீது சுமையாகக் கூடும். வழக்குகளுக்கான கட்டணங்களை ஒழுங்குபடுத்த உச்சநீதிமன்றம் உருவாக்கக்கூடிய விதிகள் நாட்டின் நிதிச் சுமையைக் கூடுதலாக்கக் கூடும். எனவேதான் விதிகளை உருவாக்கும் பொறுப்பினை முழுமையாக உச்சநீதிமன்றத்திடம் விட்டுவிடுவதற்கில்லை. எனவேதான், விதி 121ஐப் பயன்படுத்தி நீதிமன்றம் ஒழுங்கு விதிகளை வகுப்பின் அதற்குக் குடியரசுத்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 6, 1949, பக். 649-50.

தலைவரின் ஒப்புதல் பெறல் தேவையென்றே கருதுகிறேன். நிதிச் சுமை தொடர்பான எந்தச் செயல்பாட்டானும் இறுதியாகப் பொதுமக்கள் மீதே சுமை விழுகிறது. இச்சுமையை தாங்குதற்குரிய நிதிக்கு ஏற்பாடு செய்யும் பொறுப்பு கொண்ட உறுப்புகள் சட்ட (நாடாளு) மன்றமும் அரசாங்கமுமே. அப்பொறுப்பு மக்கள் மீது வரி விதித்தலில் முடியும். எனவேதான் அரசாங்கத்தின் தொடர்பிலிருந்து விலகி இதனைச் செய்தல் இயலாது.

மேலும், 1935 ஆம் வருட இந்திய அரசுச் சட்டத்தில் கூட்டரசு நீதிமன்றம் குறித்த விதி 214, உயர்நீதிமன்றங்கள் குறித்த விதி 224 ஆகியவற்றை அப்படியே மறுமதிப்பு செய்ததுதான் அரசியலமைப்புச் சட்டவிதி 121. ஆகவே, இந்த விதி நிறைவேற்றப்படுவதால் இப்போதைய நிலையில் மாற்றம் ஏதும் ஏற்பட்டுவிடாது. மதிப்பிற்குரிய நண்பர் டி.டி. கிருஷ்ணமாச்சாரி தாக்கல் செய்த 42 ஆம் திருத்தத் தீர்மானம் குறித்து, திரு. சந்தானம் என்ன கூற வருகிறார் என்பதைப் புரிந்துகொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன். இதைப் பற்றி என்னால் கூற முடிவதெல்லாம், வரைவுக்குழு அரசியலமைப்புச் சட்டத்தை மறுபார்வையிட அமரும்போது இவை கவனிக்கப்படும் என்பதுதான். உச்சநீதிமன்றத்திற்கு மறுபரிசீலனை அதிகாரம் தரும் விதிகளைக் குறித்து மறுவரைவின்போது நல்ல சொல்லாட்சி முறையை மேம்படுத்த முடியுமெனில் அதனைச் செய்யத் தவற மாட்டோம்.

அடுத்து நான் குறிப்பிட விரும்புவது, திருத்தத் தீர்மானம் 43 பற்றித்தான். நண்பர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் தாக்கல் செய்துள்ள இந்தத் திருத்தத்திற்கு, எனது முழுமனதான ஆதரவு உண்டு. விதி 110இன் கீழ் அல்லாத பொருள் ஒன்றில், அரசியலமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படுமெனில், அதை விசாரிக்க ஐந்து நீதிபதிகள் கொண்ட அமர்வு ஏற்பாடு செய்யப்படும் என்றும், அரசியல் சட்ட விளக்கம் தெளிவுற்ற பின்னர் முதலில் விசாரித்த அமர்வுக்கே வழக்கு திருப்பியனுப்பப்படும் என்றும் ஏற்கெனவே வரம்புரையொன்று உண்டு. இவ்வாறு இயற்றப்பட்ட வரம்புரையில் விதி 111ஐப் பற்றிய குறிப்பும் காணப்படுகிறது. ஆனால், இந்த அவை பின்னொரு நாளில் உச்சநீதிமன்றத்துக்குக் குற்றவியல்

வழக்குகளிலும் மேல்முறையீட்டு அதிகாரம் நல்குவதென்று முடிவு செய்யுமானால், அதற்கேற்ப இவ்வரம்புரையின் பயன்பாட்டுப் பொருளை நீட்டிக்க வேண்டியிருக்கும் என்பதையும் உணருவதுடன், இவ்வவையின் முன்பும் அதனைப் பணிவுடன் வைக்கிறேன்.

*(அம்பேத்கரின் 2 திருத்தங்களுடன், 5 திருத்தங்கள் நிறைவேற்றப் பட்டன. ஒன்று தள்ளுபடி செய்யப்பட்டது. விதி 121, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 191

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, ''விதி 191, பிரிவு (1) துணைப்பிரிவு (a) இல்,

''கிழக்குப் பஞ்சாப் மாநில உயர்நீதிமன்றமும், அயோத்தியில் உள்ள தலைமை நீதிமன்றமும்'', என்ற சொற்களுக்குப் பதிலாக, ''கிழக்குப் பஞ்சாப், அசாம், ஒரிசா ஆகிய மாநிலங்களின் உயர்நீதிமன்றங்கள்'' எனும் சொற்கள் இடம்பெறலாம்'' என முன்மொழிகிறேன். மேலும்,

''திருத்தங்களின் பட்டியலில் காணப்படும் திருத்தங்கள் 2567, 2570 ஆகியவற்றையொட்டி, விதி 191இன் வரைவு வாசகத்திற்குப் பதிலாக,

'191 (1) ஒவ்வொரு மாநிலத்திலும் உயர்நீதிமன்றம் ஒன்று இருக்க வேண்டும்.

(2) இந்த அரசியலமைப்புச் சட்டம் செயல்முறைக்கு வரும் முன்னரே, எந்த மாநிலத்திலாவது உயர்நீதிமன்றம் செயல்பட்டுக் கொண்டிருந்தால், அந்நீதிமன்றம் தொடர்ந்து இந்த அரசியலமைப்புச் சட்டத்தின்படி அமைந்த உயர்நீதிமன்றமாக இயங்கிவரும்.

(3) இந்த விதியில் குறிப்பிடப்படும் உயர்நீதிமன்றங்கள் அனைத்துக்கும், இவ்வதிகாரத்தில் கூறப்படும் விதிகள் யாவும் பொருந்தும்'

எனும் வாசகம் இடம்பெறலாம்'' என முன்மொழிகிறேன்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 6, 1949, பக். 656.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** நாம் இந்தத் திருத்தம் பற்றிய விவாதத்தை முதலில் எடுத்துக் கொள்வோம். ஏனெனில் இத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், எஞ்சியுள்ள திருத்தத் தீர்மானங் கள் யாவும் தேவையில்லாது போகும். இந்தத் திருத்தம் விதியின் அமைப்பையே மாற்றுவதுடன், அதனை எளிமைப்படுத்தவும் செய்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** மேலும் சில திருத்தங்களும் உள்ளன. அவற்றை விரைந்து நோக்க முயல்வேன்.

*(திருத்தங்கள் 2568, 2577 ஆகியவை தாக்கல் செய்யப்பட வில்லை)*

**திரு. அவைத் தலைவர்:** எனவே, டாக்டர் அம்பேத்கர் தாக்கல் செய்த திருத்தங்கள்தான் எஞ்சியுள்ளன. திருத்தங்கள் குறித்தோ, விதியினைக் குறித்தோ யாராவது, ஏதாவது பேச விரும்புகிறீர்களா?

திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

*(விதி 191, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது)*

## விதி 192

*(திருத்தங்கள் 2578, 2580 ஆகியவை தாக்கல் செய்யப்படவில்லை)*

[1]**அவைத் தலைவர்:** திருத்தம் 2581 டாக்டர் அம்பேத்கரின் பெயரிலுள்ளது. அது முறையாகத் தாக்கல் செய்யப்பட வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> ''விதி 192க்கான வரம்புரையில் 'எவற்றுடனாவது ஒன்றாகச் சேர்த்து' என்பதிலிருந்து தொடங்கி 'இந்த அத்தியாயத்தின்' என முடியும் பகுதி நீக்கப்பட்டு, 'ஆறு' என்ற சொல்லையடுத்து, 'அவ்வப்போது'

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 6, 1949, பக். 657.

எனும் சொல்லைச் சேர்க்கலாம்'' என்று முறைப்படி தாக்கல் செய்கிறேன். மேலும்

''திருத்தங்களின் பட்டியலில் 2581 ஆம் திருத்தத்தையொட்டி, விதி 192இன் வரைவு வாசகத்திற்கு பதிலாக,

| | |
|---|---|
| பதிவு உயர்நீதி மன்றங்கள் | 'ஒவ்வொரு உயர்நீதிமன்றமும் பதிவு நீதிமன்றமாகச் செயல்படும், நீதிமன்ற அவமதிப்புக்காகத் தண்டிக்கும் அதிகாரம் உட்படப் பதிவு நீதிமன்றங்களுக்குரிய அதிகாரங்கள் யாவையும், உயர்நீதிமன்றங்களும் பெற்றிருக்கும்.'' |
| உயர்நீதிமன்றத்தை நிறுவுதல் | '192-A. ஒவ்வொரு உயர்நீதிமன்றத்திலும் தலைமை நீதிபதியொருவருடன், அவ்வப்போது குடியரசுத் தலைவரால் தேவையென்று கருதப்படும் எண்ணிக்கையில் நீதிபதிகள் நியமிக்கப்படுவர். |

அவ்வாறு நியமிக்கப்படும் நீதிபதிகளின் உச்ச எண்ணிக்கை, ஒவ்வொரு நீதிமன்றத்துக்குமாகக் குடியரசுத் தலைவரால் வரம்பு கட்டப்பட்ட எண்ணிக்கைக்கு மேல் இருக்கக்கூடாது'

எனும் வாசகம் இடம் பெறலாம்''

என முறைப்படி முன்மொழிகிறேன்.

★ ★ ★

## விதி 193

[1]**திரு. அவைத் தலைவர்:** நேற்று விதி 193 பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தோம். இன்றும் அதனைத் தொடர்வோம். ஒரு திருத்தம் தாக்கல் செய்யப்பட்டது; மேலும் பல திருத்தங்கள் எஞ்சியுள்ளன. டாக்டர் அம்பேத்கரின் 2592 ஆம் திருத்தத் தீர்மானம் பிற திருத்தங்கள் வயது பற்றிய சிக்கல் தவிர அனைத்தையும் உள்ளடக்குகிறது. எனவே, டாக்டர் அம்பேத்கர் தமது தீர்மானத்தை முதலில் தாக்கல் செய்யட்டும். வயதுச் சிக்கல் தவிர்த்துப் பிற திருத்தங்கள் எதையும் தாக்கல் செய்யத் தேவையிராது. வயது வரம்பு பற்றிய சிக்கலைப் பிந்தைய கட்டத்தில் நாம் தனியே எடுத்துக் கொள்வோம்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7, 1949, பக். 661.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *அந்தத் திருத்தத்தை நான் தாக்கல் செய்யவில்லை.*

***அவைத் தலைவர்:*** ஆயின், பிற திருத்தங்களை நாம் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான்.

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *தலைவர் அவர்களே,*

> *''திருத்தங்களின் பட்டியலில் 2610 ஆம் திருத்தத்தினையொட்டி, விதி 193, பிரிவு (1)க்கான வரம்புரையின் துணைப் பிரிவு (c) யில், 'உயர்நீதிமன்றம்' என்ற சொல்லையடுத்து, 'முதல் அட்டவணையில் இப்போதைக்கு வரையறுக்கப்பட்ட எந்த மாநிலத்திலும்' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்''*

*என முன்மொழிகிறேன்.*

*ஐயா, மாநிலங்களுக்கும், இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையிலான வேறுபாடுகள் அனைத்தையும் களைவதுதான் இத் திருத்தத்தின் நோக்கம். இதனால் பல்வேறு உயர்நீதிமன்றங்களுக் கிடையே நீதிபதிகளை மாற்றுவதில் தடையிராது.*

*மேலும், திருத்தங்களின் பட்டியலில் 2614 ஆம் திருத்தமாக,*

> *''விதி 193, பிரிவு (2) துணைப்பிரிவு (c) யில் 'மாநிலம்' என்ற சொல்லுக்கு பதிலாக, 'முதல் அட்டவணையில் இப்போதைக்கு வரையறுக்கப் பட்ட மாநிலம்' எனும் சொற்கள் இடம்பெறலாம்''*

*எனும் தீர்மானத்தை முறைப்படி தாக்கல் செய்கிறேன். மேலும் பின்வரும் திருத்தத் தீர்மானங்களையும் தாக்கல் செய்கிறேன்:*

> *''திருத்தங்களின் பட்டியலில், திருத்தம் 2614ஐயொட்டி, விதி 193 பிரிவு (2), துணைப்பிரிவு (a) இல் 'எந்த மாநிலத்திலும் அல்லது உயர்நீதிமன்றம் உள்ள பகுதிகளிலும்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'இந்தியாவின் நிலப்பரப்பில்' எனும் சொற்கள் இடம் பெறலாம்''.*
>
> *''திருத்தங்களின் பட்டியலில், 2614 ஆம் திருத்தத்தையொட்டி, விதி 193, பிரிவு (2), துணைப்பிரிவு (b) யில், 'உயர்நீதிமன்றம்' என்ற சொல்லை யடுத்து, 'முதல் அட்டவணையில் வரையறுக்கப்பட்ட எந்த மாநிலத் திலும்' எனும் சொற்கள் சேர்க்கப்படலாம்.''*

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7, 1949, பக். 664-65

''திருத்தங்களின் பட்டியலில் 2614 ஆம் திருத்தத்தையொட்டி விதி 193, பிரிவு (2)க்கான விளக்கத்தின் துணைப்பிரிவு (b)யில், 'முதல் அட்டவணையின் Iவது அல்லது IIவது பகுதியில் இப்போதைக்கு வரையறுக்கப்பட்ட மாநிலம் ஒன்றில்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'இந்திய நிலப்பரப்பில்' எனும் சொற்கள் இடம்பெறலாம்'. 'திருத்தங்களின் பட்டியலில் 2614 ஆம் திருத்தத்தையொட்டி, விதி 193, பிரிவு (2)க்கான விளக்கத்தின், துணைப்பிரிவு (b) இல், 'பிரிட்டிஷ்' இந்தியா என்ற சொல்லுக்கு பதிலாக, 'இந்தியா' எனும் சொல் இடம்பெறலாம்.

''திருத்தம் 2622ஐ யொட்டி.....''

**திரு. அவைத் தலைவர்:** அதற்கு முன்பாகத் திருத்தம் எண் 2622ஐத் தாங்கள் முறைப்படித் தாக்கல் செய்யலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

''விதி 193, பிரிவு (2)க்கான விளக்கம் IIவுக்கு பதிலாக,

'விளக்கம் II - இப்பிரிவின் துணைப் பிரிவுகள் (a), (b) ஆகிய வற்றில், முதல் அட்டவணையின் பகுதி IIIஇல் வரையறுக்கப்பட்டுள்ள மாநிலங்களைப் பொறுத்தமட்டில், 'உயர் நீதிமன்றம்' எனும் சொற்கோவைக்கு, இவ்வரசியலமைப்புச் சட்டத்தின் விதிகள் 103, 106 ஆகியவற்றைப் பொறுத்தமட்டில், குடியரசுத் தலைவரால் விதி 123 இன்கீழ் அறி விக்கப்பட்ட நீதிமன்றம் என்று பொருள்படும்' என்பதைச் சேர்க்கலாம்' என முறைப்படி முன்மொழிகிறேன். மேலும், 'திருத்தங்களின் பட்டியலில் 2622 ஆம் திருத்தத்தையொட்டி, விதி 193, பிரிவு (1)க்கான விளக்கம் II நீக்கப்படலாம்'' எனவும் முன்மொழிகிறேன்.

திருத்தங்கள் 196 முதல் 200 வரையிலானவற்றின் நோக்கம், பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையில் நிலவி வந்த வேறுபாடுகள் அனைத்தையும் அகற்றுவதே. திருத்தங்களில் சில, குறிப்பாக 199 ஆம் திருத்தமும் 200 ஆம் திருத்தமும், முதன்மையான திருத்தத்தை நிறைவேற்றுவதால் எழும் திருத்தங்களே.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்! இதுகுறித்து ஏதாவது பேச விரும்புகிறீர்களா?

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7, 1949, பக். 674.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பதிலுரை ஏதும் தேவையில்லையென்று கருதுகிறேன்.

*(4 திருத்தங்கள் மட்டும் நிறைவேற்றப்பட்டன. ஏனையவை தள்ளுபடி செய்யப்பட்டன. விதி 193, திருத்தப்பட்டவாறு, அரசிய லமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 193 - A

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்! பேராசிரியர் ஷாவின் தீர்மானம் குறித்து ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பேராசிரியர் ஷாவின் திருத்தத்தை ஏற்கவியலாமைக்கு வருந்துகிறேன். பேரா சிரியர் ஷாவை நான் புரிந்துகொண்ட வகையில், அவரது திருத் தத்தின் நோக்கம், ஆட்சித் துறைக்கும் நீதித்துறைக்குமிடையே தெளிவான பிரிவினை தேவை எனும் கொள்கைக்குச் செயல் வடிவம் கொடுப் பதுதான். ஆட்சித் துறைக்கும் நீதித்துறைக்கு மிடையே தெளிவான பிரிவினை தேவையென்பதில் கருத்து வேறுபாட்டுக்கிடமில்லை யென்றே நானும் கருதுகிறேன். சொல்லப் போனால், உயர்நீதிமன்றம், உச்சநீதிமன்றம் ஆகியவை குறித்த விதிகளெல்லாம் இக் கோட்பாட்டைக் கருத்தில் கொண்டே எழுதப்பட்டவை. ஷாவின் திருத்தம் இப்பிரிவினையை எவ்வாறு கொணருகிறது என்பதே இப்போது எனது கேள்வி. ஆட்சித்துறை, நீதித்துறை இரண்டுக்கு மிடையே பிரிவினை என்பதற்கு நானறிந்த பொருளின்படி, ஒருவர் நீதித்துறையில் பதவி வகித்துக் கொண் டிருக்கும் காலத்திலேயே ஆட்சி நிருவாகப் பதவி எதையும் ஏற்கக் கூடாது என்பதும், அவ்வாறே ஆட்சி நிருவாகப் பதவியிலிருக்கும் போதே நீதித்துறையில் எந்தப் பதவியையும் ஏற்கக்கூடாது என்பதும் தான். ஆனால் பேராசிரியர் ஷா நம்முன் வைக்கும் திருத்தமோ, இதற்குப் புறம்பான பொருளைப் பற்றியதென உணருகிறேன். அரசுப் பணியாளர் தேர்வாணைய உறுப்பினர்கள் அப்பதவிக்காலம் முடிந்த பிறகு அரசுப் பணியெதையும் ஏற்கலாமா என்பது குறித்து

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 7, 1949, பக். 678-79.

நாம் முன்னர் சிந்தித்த வினாக்களையே இத்திருத்தமும் எழுப்புகிறது. எனது கருத்தில், நீதித்துறைப் பதவிகளின் நிலையும், அரசுப் பணித் தேர்வாணைய உறுப்பினர் பதவிகளின் நிலையும் முற்றிலும் வெவ்வேறானவை. அரசுப் பணியாளர் தேர்வாணைய உறுப்பினர்கள் நிருவாகப் பணிகளுக்கான நபர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள்; ஆட்சித் துறையோடு நெருக்கமான பிணைப்பு கொண்டவர்கள். நீதித்துறையோ பெரும்பாலான நிலைகளில் ஆட்சி நிருவாகத்துடன் நேரடித் தொடர்பு இல்லாதது. அது பெரும்பாலும் மக்களின் உரிமைகளையும், அவ்வப்போது அரசாங்க உரிமைகளையும் காப்பதில் ஈடுபட்டிருக்கும். அரசுக்கு எவ்வித ஈடுபாடும் இல்லாது, மக்களின் தனியுரிமைக் காக்கும் பணியில், அது ஈடுபட்டிருக்கும். இதன் விளைவாக அரசாங்கத்தின் செல்வாக்கு நீதித்துறையைப் பாதிப்பதற்கான வாய்ப்பு மிகக் குறைவே. எனவே இந்தக் கற்பிதக் காரணத்துக்காகப் பிற பதவி வகிப்பதிலிருந்து தகுதி நீக்கம் செய்தல் மிகைப்படியான செயலே. நீதித்துறை குறித்து நாம் உருவாக்கும் விதிமுறைகள் அப்பதவிக்குத் தக்காரைப் பெரும் எண்ணிக்கையில் ஈர்க்கும் அளவுக்கு நிறைவு தருவதாய் இல்லையென்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இங்கிலாந்து நாட்டில் நீதிபதிகள் ஓய்வுபெறும் வயது 75. அமெரிக்காவிலோ உச்சநீதிபதி வாழ்நாள் முழுதும் அப்பதவியில் இருக்கலாம். நாமோ ஓய்வுபெறும் வயதை அறுபது என விதித்துள்ளோம். ஆகவே இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் பணிஓய்வு பெற்ற பின்னர் பிறபணிக்குச் செல்லல் என்பது மிக அரிதே.

அவ்வாறே ஓய்வூதியம் குறித்து நோக்கினால், இங்கிலாந்து நாட்டில் நீதிபதிகளின் ஓய்வூதியம் சம்பளத்தில் எழுபது அல்லது எண்பது விழுக்காடு வரை இருப்பதாய் அறிகிறேன். அமெரிக்காவில் உச்ச நீதிபதிகளின் ஓய்வூதியமும் சம்பளமும் ஒன்றே. நமது நாட்டில் நீதிபதிகளில் ஓய்வூதியம் மிகச் சொற்பமானதே. அதிலும் அறுபது வயதிலேயே பணிஓய்வு என்பதையும் சேர்த்துப் பார்க்கும்போது, நமது நாட்டில் நீதிபதிகள் பணி ஓய்வுக்குப் பிறகு வேறு பணியெதையும் ஏற்கக் கூடாதென்பதே சரியான நோக்கு ஆகாது. இந்நிலைகளைக் கருத்தில் கொண்டு நோக்கினால், பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தம் நீதித்துறைக்கும் ஆட்சித்துறைக்குமிடையே பிரிவினை எனும் பெயரால், நீதித்துறையில் பொறுப்பேற்க முன்வருவோர் மீது கடுமையான சுமைகளைத் திணிக்க முற்படுகிறதென்பது புலப்படும்.

**திரு. மாண்புமிகு எச்.வி. காமத்:** இந்தத் திருத்தம் பணியிலிருக்கும் நீதிபதிகளுக்கு மட்டும் பொருந்துமெனக் கொள்ளலாமே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவ்வாறு கொள்ளலாம் என்றாலும், திருத்தம் குழப்பமாக உள்ளது. தீர்மானத்தில், 'தொடர்ந்து ஐந்தாண்டுகள் பணிபுரிந்தவருக்கு' அது பொருந்தும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது குடியரசுத் தலைவர் ஐந்தாண்டுக்குக் குறைவான காலத்திற்கு ஒருவரை அப்பதவியில் நியமித்தால் அவருக்கு இவ்விதி பொருந்தாதெனப் பொருள் படுகிறது. அதனால் பேராசிரியர் ஷா இத்தீர்மானத்தைக் கொண்டு வந்ததன் நோக்கம் நிறைவேறாமலும் போய்விடும். குடியரசுத் தலைவர் ஒருவரை ஐந்தாண்டுக்கும் குறைவான காலத் துக்கு நீதிபதியாக நியமித்துப் பின்னர் அவருக்கு தூதர், வணிகத் தூதர், வணிக ஆணையர் போன்ற பதவிகளை (வெகுமானமாக) அளிக்க இடமுண்டல்லவா? எனவே இத்தீர்மானத்தின் கருத்தே தவறான எண்ணத்தின் அடிப்படையில் உருவாகியுள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** ''விதி 193ஐ யடுத்து,

> ''193-A. உச்சநீதிமன்றத்திலோ, கூட்டரசு நீதிமன்றத்திலோ உயர்நீதிமன்றத்திலோ, நீதிபதியாகத் தொடர்ந்து ஐந்தாண்டுகளுக்கு மேல் பதவி வகித்த எவரும், இந்திய அரசின் கீழோ மாநில அரசுகளில் ஒன்றின் கீழோ, தூதர், அமைச்சர் முழு அதிகாரம் கொண்ட தூதர், உயர் ஆணையாளர், வணிக ஆணையாளர், வணிகத் தூதர் முதலான பதவிகள் உட்பட ஆட்சி நிருவாகப் பதவிகள் எதையும் ஏற்கத் தகுதியானவரல்லர்'' எனும் புதுவிதி 193-A சேர்க்கப்படலாம்''

எனும் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது.

*(பேராசிரியர் கே.டி. ஷாவின் திருத்தத் தீர்மானம் ஏற்கப்படவில்லை)*

★ ★ ★

## விதி 195

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே,

> ''விதி 195 இல், 'ஒரு சாற்றுகை' என்ற சொற்களுக்கு பதிலாக, 'ஓர் உறுதிப்பாடு அல்லது உறுதிமொழி' எனும் சொற்கள் இடம்பெறலாம்''

என முன்மொழிகிறேன். இஃதொரு முறைசார் திருத்தமே.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7, 1949, பக். 680.

விதி 195, திருத்தப்பட்டவாறு, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 196

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, ''விதி 196 இன் வரைவு வாசகத்திற்கு பதிலாக,

'உயர்நீதிமன்ற நீதிபதியாகப் பதவி வகித்தோர் நீதிமன்றங்களிலோ, பிற விசாரணை மன்றங்களிலோ, வழக்குரைஞராய்ச் செயல்படுதற்குத் தடை விதித்தல் என்பது இடம்பெறலாம்.'

'196. இந்த அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்த பின்னர், உயர்நீதிமன்ற நீதிபதியாகப் பதவி வகித்தவர் எவரும், இந்திய நிலப்பரப்பிற்குள்ளாக எந்தவொரு நீதிமன்றத்திலோ, பிற விசாரணை மன்றங்களிலோ வழக்கறிஞராகச் செயல்படுதல் கூடாது' என முன்மொழிகிறேன்.

இது வெறும் சொல்லமைப்புத் திருத்தமே.

**திரு. பிரபுதயாள் ஹிமத்சிங்கா:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தாக்கல் செய்யப்பட்டிருப்பதால், எனது திருத்தம் (எண். 2632) தேவையில்லை.

★ ★ ★

[2]**திரு.அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர்! நீங்கள் ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏதும் கூறுதல் தேவையில்லை.

**திரு. அவைத் தலைவர்:** முதலில் சர்தார் ஹுக்கும் சிங்கின் திருத்தத் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்படுகிறது. அது ஏற்கப் பட்டால், அதற்கேற்ப டாக்டர் அம்பேத்கரின் திருத்தமும் மாற்ற முறும்.

சர்தார் ஹுக்கும் சிங்கின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட வில்லை.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 7, 1949, பக். 680.
2. அதே நூல், பக். 685.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. விதி 196, திருத்தப்பட்டவாறு அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

## விதி 196 - A

*(திருத்தம் எண் 2639 தாக்கல் செய்யப்படவில்லை)*

**திரு. அவைத் தலைவர்:** இதனைப் போன்றே திருத்தம் எண் 1870 விரிவாக விவாதிக்கப்பட்டுப் பின்னர் தள்ளி வைக்கப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 103-A தள்ளி வைக்கப்பட்டது போன்றே, விதி 196-A ம் தள்ளி வைக்கப்படலாம்.

**திரு. அவைத் தலைவர்:** ஏற்றுக் கொள்கிறேன். இவ்விதி குறித்துப் பின்னர் பார்க்கலாம்.

## விதி 197

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 197-ம் கூடத் தள்ளி வைக்கப்படலாம்.

**திரு. அவைத் தலைவர்:** ஏற்றுக் கொள்கிறேன். இவ்விதியும் கூடத் தள்ளிவைக்கப்படுகிறது.

## விதி 198

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா,

''198 ஆம் விதிக்கு மாறாக பின்வரும் விதியைச் சேர்க்கலாம்:

*தற்காலிகதலைமை நீதிபதியை தற்காலிகமாக நியமிப்பது.*

*''198. ஒரு உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியின் பதவி காலியாக இருக்கும்போது அல்லது வாராமை அல்லது வேறு காரணங்களினால் தமது பணிகளை செய்ய முடியாமலிருக்கும்போது இதற்காகக் குடியரசுத் தலைவர், அந்த நீதிமன்றத்தின் பிற நீதிபதிகளில் ஒருவரை நியமித்து, அந்தப் பணிகள் நிறைவேற்றப் படும்.*

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 7, 1949, பக். 685.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** ஐயா, திருத்தம் எண் 2650-ன் நோக்கத்தையே, டாக்டர் அம்பேத்கர் கொண்டுவந்த திருத்தமும் கொண்டுள்ளது. ஏனெனில் அது (2) ஆவது பிரிவுக்குத் தொடர்புடையது.

★ ★ ★

## விதி 200

டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் பெருமளவில் அதே போன்றது தான். அதில் பிரிவு (2) நீக்கப்பட்டு, பிரிவு (1) தக்க வைக்கப்பட்டுள்ளது.

**டாக்டர் பி.கே. சென்:** நான் அந்தத் திருத்தத்தைக் கொண்டு வர விரும்பவில்லை.

(திருத்தங்கள் எண் 2651, 2652 மற்றும் 2653 முன்மொழியப் படவில்லை.)

(டாக்டர் அம்பேத்கரின் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப் பட்ட 198-ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது.)

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் திருத்தம் எண் 201க்கான முன்னறிவிப்பைக் கொடுத்துள்ளார். திரு. ஜஸ்பத் ராய் கபூர் கொண்டுவந்துள்ள திருத்தத்தைப் போன்றதுதான் இது. அந்தத் திருத்தம் முன்மொழியப்பட வேண்டியதில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''விதி 200ல் 'இந்த விதியின் வழிவகைகளுக்குட்பட்டு' என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும்.''

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, உச்சநீதி மன்றத்தைக் குறித்து, இது போன்ற ஒரு விதி நிறைவேற்றப்பட்டுள்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7 1949, பக்கம் 688
2. அதே நூல் பக்கம் 693-95.

ளதால், இந்த விதி குறித்த விவாதம் இவ்வளவு நீண்டு செல்லும் என்று நான் நினைக்கவில்லை. எனினும் விவாதம் முடிந்த நிலையில் உறுப்பினர்களில் சிலர், குறிப்பிட்ட சில கேள்விகளை என்னிடம் கேட்டுள்ளதால், அவற்றுக்குப் பதிலளிக்க உள்ளேன்.

விதி 200-க்கு ஈடாக வேறுநாடுகளில் எதிலாவது முன்னுதாரணம் உள்ளதா என்பது தமக்குத் தெரியாது என்று என் நண்பர் திரு. காமத் கூறினார். வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தை அவர் படிக்கவில்லை என்பது நிச்சயமாகத் தெரிகிறது. அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் இதே போன்ற ஏற்பாடு உள்ளது என்பது அடிக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது. (திரு. காமத்தின் முணுமுணுப்புக் குரல்) சொல்லப்போனால் உண்மையில் இங்கிலாந்தின் நீதித் துறையின் உச்சநீதிமன்றச் சட்டத்தின் பிரிவு 8லிருந்து வார்த்தைக்கு வார்த்தை அப்படியே எடுக்கப்பட்டதுதான் விதி 200. சொல்லாக்கத்தில் கூட எந்த மாற்றமும் கிடையாது. முன்னுதாரணம் பற்றி இதுவே என் பதில்.

ஆனால் முன்னுதாரணம் ஒருபுறமிருக்க, 200-ஆம் விதியைப் போன்றதொரு விதியை உருவாக்க எல்லா ஆதாரங்களும் உள்ளதாகவே நான் கருதுகிறேன். தற்காலிக அல்லது கூடுதல் நீதிபதிகளை நியமனம் செய்யும் வழிவகைகள் எல்லாவற்றையும் முற்றிலுமாக நீக்கிவிட்டோம் என்பதை இந்த அவை மறந்திருக்க முடியாது. தற்காலிக அல்லது கூடுதல் நீதிபதிகள் பற்றிய பிரிவுகள் யாவும் அரசியல் அமைப்புச் சட்டத்திலிருந்து நீக்கப்பட்டுவிட்டன. உயர் நீதிமன்ற நீதிபதிகள் யாவரும் நிரந்தரமானவர்களாகத்தான் இருக்க முடியும். தற்காலிக அல்லது கூடுதல் நீதிபதிகள் இருக்கப் போவதில்லையாகையால், சிலவகை அலுவல்களை நிறைவேற்ற, உயர்நீதிமன்ற நீதிபதியின் கடமைகளை நிறைவேற்ற, தற்காலிக நீதிபதி ஒருவரைக் குறித்த நேரத்தில் நியமிப்பது சாத்தியமில்லை. ஆகையால் இதற்கு ஏதாவது ஏற்பாடு செய்தாக வேண்டும். 196-ஆம் விதியுடன் (நீதிபதி ஓய்வுபெற்ற பிறகு தொழில் நடத்தக்கூடாது என்று வரையறுக்கப்பட்டுள்ளது) இணக்கமான ஒரே ஒரு மாற்று ஏற்பாடு 200-ஆம் விதியில் அடங்கியுள்ள ஏற்பாடுதான். எனது நண்பர் டாக்டர் தேக் சந்த் கூறியதுபோல், இந்த விதியின் நோக்கம் அல்லது கருத்துகள் பற்றி அவநம்பிக்கைகளும், தவறான எண்ணங்களும் ஏராளமாக உள்ளதாகத் தெரிகிறது. நிச்சயமாக, உயர்நீதிமன்றங்களிலிருந்து ஓய்வு பெற்றவர்களை எவ்வளவு காலத்துக்கு வேண்டுமென்றாலும்,

பின் வாசல் வழியாகக் கொண்டு வரும் நோக்கம் கொண்டதல்ல இந்த விதி. எனவே இதைக் குறித்து எவரும் எவ்வித அவநம்பிக்கையும் கொள்ள வேண்டிய அவசியமில்லை.

என்னிடம் கேட்கப்படும் மற்றொரு கேள்வி, விலக்குக் கூறைப் பற்றியதாகும். இந்த விலக்குக் கூறைப் பற்றி பேசிய பலரும் அது பொருளற்றதாகவும், தேவையற்றதாகவும் தோன்றுவதாகக் கூறினர். அவர்களுடன் நான் உடன்படவில்லை. அந்த விலக்குக் கூறு நிச்சயம் தேவையானது என்றே நினைக்கிறேன். அந்த விலக்குக் கூறு இல்லை என்றால், அழைப்பை ஏற்க மறுக்கும் நீதிபதி ஒருவருக்குத் தண்டனை ஏதாவது அளிக்கும் வாய்ப்பு, சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு கிடைக்கும். அழைப்பை ஏற்க மறுக்கும் ஓய்வுபெற்ற அதிகாரி நீதிமன்றத்தை அவமதித்த குற்றச்சாட்டுக்கு ஆளாகவும் கூடும். ஓய்வுபெற்ற உயர் நீதிமன்ற நீதிபதி ஒருவருக்கு இப்படிப்பட்ட தண்டனைகள் அளிக்கப்படுவதை நாங்கள் விரும்பவில்லை. உடல் நலக்குறைவு, இயலாமை அல்லது தமது தனிப்பட்ட தொழிலில் ஈடுபட்டிருப்பதன் காரணமாக தலைமை நீதிபதி அளிக்க முன்வந்துள்ள அழைப்பை அவர் ஏற்க முடியாது என்று முடிவு செய்திருக்கலாம். விலக்குக் கூறுக்கு இதுதான் நியாயமான காரணம். கேட்கப்பட்ட மற்றொரு கேள்வி என்னவென்றால் 200 ஆம் விதியில் உள்ள ''தனிச் சலுகை'' என்ற சொல் உயர்நீதிமன்ற நீதிபதிக்கு உரித்தான ஊதியத் தொகையை முழு அளவில் கோருவதற்கு ஓய்வுபெற்ற நீதிபதிக்கு உரிமை அளிக்குமா என்பதுதான். ஓய்வூதியம் சம்பந்தமான விதிகளே இந்தப் பிரச்சினையைத் தீர்மானிக்கும் என்பதே என் பதில். குறிப்பிட்ட அரசுப் பதவியை ஏற்றுக்கொள்ள ஓய்வுபெற்ற ஊழியர் ஒருவரை அழைக்கும்போது தம் ஓய்வூதியத் தொகை போக அந்தப் பதவிக்கான ஊதியத்தை அவர் பெறுவார் என்பதே தற்போதைய விதியாக உள்ளது. இதுதான் பொதுவான விதி என நான் நம்புகிறேன். ஒரு வேளை நான் புரிந்துகொண்டது தவறாக இருக்கலாம். இருப்பினும் அந்த விஷயம் ஓய்வூதிய விதிகளாலேயே தீர்மானிக்கப்படுகின்றது. அதேபோன்று இந்த விஷயத்தையும் ஓய்வூதியம் சம்பந்தமான விதிகளே தீர்மானிக்கட்டும் என்று விட்டுவிடலாம். இந்த விஷயம் சம்பந்தமாக இந்த விதியிலே குறிப்பிட்ட எதையும் குறிப்பிட்டு நாம் சேர்க்க வேண்டாம்... விவாதத்தின்போது எழுப்பப்பட்ட விமர்சனங்கள் சம்பந்தமாக நான் கூற விரும்புவது இவ்வளவுதான்.

**திரு. எச்.வி. காமத்:** அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் சட்டத்தில் இந்த மாதிரியான ஏற்பாடு உள்ளதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த வாசகம் என் முன்னால் இல்லை. அமெரிக்காவில் ஊதியமும் ஓய்வூதியமும் கிட்டத்தட்ட ஒரே அளவில் இருப்பதால் இந்தக் கேள்வி அங்கு எழுவ தில்லை.

திரு. கபூரின் 89 ஆம் எண் திருத்தத்தை ஏற்றுக் கொள்கிறேன். ஏனெனில் ஓய்வு பெற்ற தம் நீதிபதி நண்பரை ஒன்றுக்கு மேற்பட்ட தடவை அழைக்க, தலைமை நீதிபதி 200 ஆம் விதியைத் தவறாகப் பயன்படுத்தக்கூடும் என்ற கருத்து சிலரிடம் உள்ளது. குடியரசுத் தலைவரின் சம்மதத்தைப் பெற்ற பிறகே அழைப்பு அனுப்பப்பட வேண்டுமென்ற திரு. கபூரின் முன்மொழிவை ஏற்றுக்கொள்கிறேன்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** ''தனிச் சலுகைகள்'' என்ற சொல்லின் விளக்கத்தை நாடாளுமன்றத்துக்கே விட்டுவிடுவது என்ற கருதப் பட்டுள்ளதா என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்தச் சொல் லின் பொருள் வரையறுக்கப்பட வேண்டியதுதான். உச்சநீதிமன்றம் மற்றும் உயர்நீதிமன்றங்களைக் கட்டுப்படுத்தும் நீதித்துறைச் சட்டம் ஒன்றை நாடாளுமன்றம் நிறைவேற்ற வேண்டுமென்பதில் எந்த ஐயப்பாடும் இல்லை. அதில் ''தனிச் சலுகைகள்'' என்ற இந்தச் சொல்லின் பொருள் தீர்மானிக்கப்பட்டு வரையறுக்கப்படலாம்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** ஆனால் திரும்பப் பணிக்கு அழைக்கப் படும் நீதிபதிகளுக்கும் நிரந்தர நீதிபதிகளுக்கும் தனிச் சலுகைகள் ஒரே மாதிரியாகத்தானே இருக்கும். இதைத்தான் 200-ஆம் விதி கூறு கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால், தனிச் சலுகை என்பது முழு ஊதியமும் அல்ல.

**திரு. அவைத் தலைவர்:** திரு. ஜஸ்பத் ராய் கபூரால் கொண்டு வரப்பட்டுள்ள திருத்தம் எண் 89, டாக்டர் அம்பேத்கரால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இப்பொழுது நான் அதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

''200 ஆம் விதியில் ''எந்த நேரத்திலும்'' என்ற சொற்களுக்குப் பிறகு ''குடியரசுத் தலைவரின் முன் ஒப்புதலுடன்'', என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(டாக்டர் அம்பேத்கர் முதலில் கொண்டுவந்த திருத்தமும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப்பட்ட விதி 200 அரசியல் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

★ ★ ★

## விதி 202

[1]டாக்டர் பக்ஷி தேக் சந்த்: ...நான் கொண்டுவந்த திருத் தத்தை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொள்வார் என்று நம்புகிறேன். மேலும், திருத்தம் செய்யப்பட்ட விதி அவையில் நிறைவேற்றப் படும் என்று நம்புகிறேன்.

திரு. அவைத் தலைவர்: டாக்டர் அம்பேத்கர் அவர்களே, திருத்தம் எண் 2663ஐ நீங்கள் முன்மொழிய விரும்புகிறீர்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இல்லை ஐயா, திரு. பக்ஷி தேக் சந்தின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். பதில் ஒன்றும் தேவையில்லை என நினைக்கிறேன்.

திரு. எச்.வி. காமத்: ''அல்லது'' என்பதற்குப் பதிலாக ''மற்றும்'' என்ற சொல்லை மாற்றுவதற்கான திருத்தம் உள்ளது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விதியின் சாரத்தைப் பொறுத்தவரையில் எவ்வித மாற்றமும் இல்லை.

திரு. எச்.வி. காமத்: பொருளைப் பொறுத்தவரையில் மாற்றம் உள்ளது.

டாக்டர் பக்ஷி தேக் சந்தின் திருத்தம்:

''திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2661 சம்பந்தப்பட்டவரை விதி 202ன் பிரிவு (1)ல் ''அல்லது நீதிப்பேராணை போன்ற ஆணைகள்'' என்ற

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 7 1949, பக். 697.

சொற்களுக்குப் பதிலாக "ஆணைகள் அல்லது பல்வேறு நீதிப்பேராணைகள் போன்ற பேராணைகள் உட்பட" என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்."

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(திருத்தம் செய்யப்பட்ட விதி 202 அரசியல் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

## விதி 203

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, விதி 203ஐ ஒத்திவைக்க விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** விதி 203 ஒத்திவைக்கப்பட்டது.

★ ★ ★

## விதி 204

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

"204 ஆம் விதிக்கான விளக்கம் நீக்கப்படுகிறது".

ஐயா, அது அவசியமற்றது.

★ ★ ★

[3]**திரு. தாஜ்மல் ஹுசைன்:** ...டாக்டர் அம்பேத்கர் கொண்டு வந்த திருத்தம் முற்றிலும் சரியானது. அந்த திருத்தத்தை ஆதரிக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவை அலுவலை முடித்து எழுவதற்குள் இந்த விதியைப் பரிசீலித்து முடிவு செய்துவிடலாம் என நினைக்கிறேன். இப்பொழுதே மணி 12 ஆகிவிட்டது.

★ ★ ★

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 7 1949, பக். 698.
2. அதே நூல் பக். 699
3. அதே நூல் பக். 701.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 12 மணிக்கு அமைச்சரவைக் கூட்டத்திற்கு நான் போக வேண்டியிருக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்துக்கு ஆதரவாகவோ, எதிர்த்தோ அதிகம் சொல்ல வேண்டியதில்லை என நினைக்கிறேன். சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லப்பட்டுவிட்டன. மேலும் உரைகளுக்கு அவசியமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது நண்பர் திரு. பாரதியின் கருத்துக்களைப் பொறுத்தவரையில்,

**திரு. எச்.வி. காமத்:** ஐயா, நீங்கள் என்னைப் பேச அழைத் துள்ளீர்கள். இரண்டு அல்லது மூன்று நிமிடங்களுக்கு மேல் நான் பேசப் போவதில்லை. இப்பொழுது பேசட்டுமா அல்லது நாளையா?

**திரு. அவைத் தலைவர்:** நாளை.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** 204-ஆம் விதி சம்பந்தமான விவா தத்தை நாம் இப்பொழுது எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): 204 ஆம் விதிக்கு ஒரு திருத்தம் கொண்டுவர விரும்புகிறேன். நிலைமை யைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தேன். பரி சீலனையை முடித்துவிட்டதால் நான் இந்தத் திருத்தத்தைக் கொண்டு வர விரும்புகிறேன். ஐயா, உங்களுடைய அனுமதியுடன் முன்மொழி கிறேன்:

"திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2674 சம்பந்தமாக 204 ஆம் விதிக்குப் பதிலாக பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்படும்:

உயர்நீதி மன்றத்துக்கு சில வழக்குகளை மாற்றம் செய்தல்

'204. உயர்நீதிமன்றம், தனக்குக் கீழுள்ள ஒரு நீதிமன்றத்தில், முடிவுறா நிலையிலுள்ள வழக்கில் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் அடங்கிய சட்டப் பிரச்சினை இருப்பதையும், அந்த வழக்கினை முடிவு செய்வதற்கு அதனை தீர்வுசெய்வது அவசியம் என்று உணர்ந்தால் அந்த வழக்கினை, தானே எடுத்துக் கொண்டு

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 7 1949, பக். 703-704.

*(அ) அந்த வழக்கினை தானே முடிவு செய்யலாம், அல்லது*

*(ஆ) அந்தச் சட்டப் பிரச்சினையை முடிவு செய்து, எந்த நீதிமன்றத்தி லிருந்த திரும்பப் பெறப்பட்டதோ அந்த நீதிமன்றத்துக்கே அனுப்பிவிடலாம். அந்த நீதிமன்றம் வழக்கைத் திரும்பப் பெற்றதும் அந்தத் தீர்ப்புக்கு இணங்க வழக்கை முடிவு செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.''*

*இதுதான் அந்த திருத்தம். ஐயா, நீங்கள் விரும்பினால், அதைப் பற்றி இப்பொழுது சிறிது பேசுகிறேன். ஆனால் இருமுறை பேசி நேரத்தை வீணடிக்காமல், என் கருத்துகளை இறுதியில் தெரிவிக்கவே நான் விரும்புகிறேன்.*

***திரு. அவைத் தலைவர்:*** *உங்கள் விருப்பப்படி செய்யுங்கள்.*

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *நான் கொண்டு வந்த திருத்தத்தைப் பற்றி ஒரு முடிவுக்கு வர நீண்டதொரு விவாதம் தேவைப்படும் என்று நினைக்கவில்லை. ஐயா, 204ஆம் விதியைப் பற்றி நேற்று நாம் விவாதித்தபோது எனது நண்பர் திரு. பாரதி ஒரு கேள்வியை எழுப்பியதை அவை மறந்திருக்காது. விதி 204ன் கடைசி வாசகத்தைப் பற்றியது அது. அதாவது, உயர்நீதிமன்றம் அந்த வழக்கைத் திரும்பப் பெற்றுக் கொண்டு தானே அதை முடிவு செய்யும் என்பதுதான் அது. பாரதி எழுப்பிய கேள்வி பிரச்சினைக்கு மிகவும் தொடர்புள்ள ஒன்று என்றுதான் நான் நினைக்கிறேன். அவரது கேள்வி இதுதான்: அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் முக்கிய சட்டப் பிரச்சினையை உயர்நீதிமன்றம் தீர்மானிக்க வேண்டும் என்றுதான் 204 ஆம் விதியின் முக்கியப் பகுதி கூறுகையில், இதற்காக வழக்கு முழுவதையும் ஏன் திரும்பப் பெற்று, அதை, அதுவே முடிவு செய்ய வேண்டும்? ஒரு வழக்கில் பல பிரச்சினைகள் அடங்கியிருக்கும் என்பதுதான் அவர் நிலை. அதில் ஒரு கேள்வி மட்டும் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் ஒரு முக்கிய சட்டப் பிரச்சினையாக இருக்கும். மற்றப் பிரச்சினைகளெல்லாம் நாடாளுமன்றம் இயற்றிய சட்ட விளக்கங்கள் தேவைப்படுபவைகளாக இருக்கும். இந்த மாதிரியான ஒரு கலப்பு வழக்கு இருக்கும்போது, அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் சட்டப் பிரச்சினையுடன், சாதாரண சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச்சினைகளைக் கொண்ட*

---

*1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள்,* தொகுதி VIII, *ஜுன் 8 1949, பக். 716-19.*

ஒரு கலப்பு வழக்கில் அரசியல் அமைப்புச் சட்டம் சம்பந்தமான விளக்கம் தேவைப்படும் பிரச்சினையை தீர்மானித்து முடிவு செய்யும் அதிகாரம் உயர்நீதிமன்றத்துக்கு இருப்பது நியாயமானதுதான். ஆனால் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச் சினைகள் மட்டுமின்றி சாதாரண சட்டங்கள் தீர்மானிக்கும் மற்ற பிரச்சினைகளையும் நீதிமன்றம் எடுத்துக் கொள்ள வேண்டுமா? நான் கூறியபடி அது ஒரு பொருத்தமான கேள்விதான். அவருடைய வாதத்தைக் கேட்ட உடனேயே அந்தக் கேள்வியின் வலிமையைப் புரிந்துகொண்டேன். எனவே இந்த விதியை நிறுத்தி வைக்க உங்க ளுடைய அனுமதியைக் கோருகிறேன்.

121 ஆம் விதியைக் குறித்து விவாதம் நடைபெற்றபோதும் இதே போன்றதொரு கேள்வியை எனது நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் எழுப்பினார். அந்த விதியும் உச்சநீதிமன்றத் துக்கு மேல்முறையீடு செய்யக்கூடிய கலப்பு வழக்குகள் சம்பந்தமாக இருந்தது. அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் சட்டப் பிரச்சினைகளையும் அத்துடன் நாடாளுமன்றம் இயற்றும் சாதாரண சட்டங்களால் தீர்மானிக்கப்பட வேண்டிய பிரச்சினைகளையும் கொண்டவை இந்த வழக்குகள். அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச்சினைகள் கொண்ட எல்லா வழக்குகளையும் அதாவது இந்த மேல் முறையீட்டை ஐந்து உறுப்பினர்கள் கொண்ட பெஞ்சுதான் முடிவு செய்ய வேண்டும் என்று ஆரம்ப வரைவில் கூறப்பட்டிருந்தது. திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் எழுப்பிய கேள்வி இதுதான்: ஒரு கட்சிக்காரர் கெட்ட நோக்கத்துடன், அதாவது ஐந்து நீதிபதிகளைக் கொண்ட பெஞ்சில் தன் வழக்கு தீர்மானிக்கப் பட வேண்டும் என்ற நோக்கத்துடன் தனது மேல்முறையீட்டுக்கான காரணங்களில் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் ஒரு பிரச்சினையை எழுப்பி வைப்பார். அந்தப் பிரச்சினை கடைசி யில் எந்தவித சாராம்சமும் இல்லாமல் போலியானது என்று கண்டுபிடிக்கப்படும். உச்சநீதிமன்றத்தைச் சேர்ந்த ஐந்து நீதிபதிகள் அரசியல் அமைப்புச் சட்டம் விளக்கம் தேவையுள்ள பிரச்சினை ஏதுமில்லாத ஒரு மேல் முறையீட்டை தீர்வு செய்வதில் தங்களுடைய நேரத்தை ஏன் வீணடிக்க வேண்டும்? அவருடைய அந்த வாதம் ஏற்றுக் கொள்ளப்பட்டதை அவை நினைவில் வைத்திருக்கும் என்று நம்புகிறேன். எனவே, நான்காவது வாரத் திருத்தப் பட்டியல் எண் 1, திருத்தம் 43 சம்பந்தமான கோப்புகள் அவையில் இருக்குமானால், அதில் ஒரு வரம்புரைக்கு ஏற்பாடு செய்திருப்பதை நீங்கள் காணலாம்.

இந்த மாதிரி வழக்குகளில், ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து வரும் மேல் முறையீட்டில், சாதாரணச் சட்ட விளக்கங்கள் சம்பந்தமான பிரச்சினைகளன்றி வேறு பிரச்சினைகளும் உட்பட்டிருக்குமானால், இந்த மேல்முறையீடு, உச்சநீதிமன்றம் வகுத்துள்ள விதிகளின்படி உருவாக்கப்பட்டுள்ள சாதாரண பெஞ்சுக்கு அனுப்பப்படும். இந்த பெஞ்சு இரண்டு அல்லது மூன்று நீதிபதிகளைக் கொண்டதாக இருக்கும் என்று நினைக்கிறேன். மேல்முறையீட்டை கேட்ட பிறகு அந்த பெஞ்சு, வழக்கில் மிக முக்கியமான அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் சட்டப் பிரச்சினை உள்ளது என்று கருத்துக் கூறினால் மட்டுமே, ஐந்து நீதிபதிகள் கொண்ட பெஞ்சுக்கு மேல் முறையீட்டுக்கு இந்த வழக்கு அனுப்பப்படும். ஐந்து நீதிபதிகளைக் கொண்ட இந்த பெஞ்சு அரசியல் அமைப்புச் சட்ட விளக்க பிரச்சினைக்கு மட்டும் தீர்ப்பு அளிக்கும். மற்றப் பிரச்சினைகளைக் குறித்து அல்ல. அரசியல் அமைப்புச் சட்டம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைத் தீர்மானித்த பிறகு அந்த நீதிபதிகள் அந்த வழக்கை உச்ச நீதிமன்றத்தின் இரண்டு அல்லது மூன்று நீதிபதிகள் கொண்ட, துவக்கத்தில் விசாரணை செய்த பெஞ்சிற்கு, முடிவு செய்ய திரும்பி அனுப்ப உத்தரவிடுவார்கள்.

என்னுடைய தாழ்மையான விளக்கம் என்னவென்றால் திருத்தம் எண் 42ல் அடங்கியுள்ள, 121 ஆம் விதியின் (2அ) பிரிவுக்கான வரம்புரையின் சாரத்தைத்தான் நான் இன்று காலை கொண்டு வந்துள்ள 204 ஆம் விதிக்கான திருத்தத்தில் கொடுத்துள்ளோம். இங்குகூட நாம் கூறுவது இதுதான்: உயர்நீதிமன்றம் முறையானது என்று கருதினால் அந்த வழக்கைத் தானே எடுத்துக்கொண்டு, அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டு, பிறகு நாடாளுமன்றம் நிறைவேற்றிய மற்ற சட்ட விளக்கங்களால் முடிவு செய்ய வேண்டிய பிரச்சினைகளை முடிவு செய்ய சார்நிலை நீதிபதிக்கு வழக்கைத் திரும்ப அனுப்ப வேண்டும். உச்சநீதிமன்றம் சம்பந்தமாக நாம் நிறைவேற்றியதை ஒப்பிட்டால் புதிதாக, நவீனமாக, அசாதாரணமாக எதையும் நாம் செய்துவிடவில்லை என்றுதான் நினைக்கிறேன். ஆகவே என்னுடைய தாழ்ந்த அபிப்பிராயம் என்னவென்றால், 121 ஆம் விதியின் (2 அ) பிரிவின் வரம்புரையை நாம் ஏற்றுக் கொண்டது போல, இதையும் ஏற்றுக் கொண்டால் அது அவை பெரும் தவறு செய்துவிட்டது என்றோ அல்லது நாம் தடம் புரண்டு சென்று விட்டோமென்றோ ஆகாது...

**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:** ஐயா, ஒரு விளக்கப் பிரச்சினை. மேல்முறையீட்டுக் கட்டத்தில் எழும் பிரச்சினைக்கும், முதல் விசாரணை நீதிமன்றத்தில் முடிவுறாமல் இருக்கும் வழக்கில் எழும் பிரச்சினைக்கும் இடையில் எந்த வேறுபாடும் இல்லை என்பது உங்கள் கருத்தா என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்பு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தத்தின் பொதுவான கட்டமைப்பைப் பற்றித்தான் விளக்குகிறேன். 121 ஆம் விதியின் பிரிவு 2அ-வின் வரம்புரைக்கு முற்றிலும் இணையானது தான் நான் கொண்டு வந்துள்ள திருத்தமும் என்பதே என் பணிவான கருத்து. நாம் முன்பு எடுத்த நடவடிக்கைகளிலிருந்து எந்தவித திசை மாற்றமும் இல்லை என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம்.

பிறகு இரண்டு கேள்விகள் எழுப்பப்பட்டுள்ளன. 'தீர்ப்பு' என்ற சொல்லின் உபயோகத்தைப் பற்றியது ஒன்று. 'தீர்ப்பு', என்ற சொல்லுக்கு வேறுவிதமாக விளக்கமளிக்கப்படுகிறது என்று சொல்லப் பட்டது. 110-ஆம் விதியின்படி உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு அல்லது இறுதி ஆணையின் அடிப்படையில்தான் மேல்முறையீட்டிற்கான வாய்ப்பு உள்ளது என்று நாம் கூறியுள்ளதால் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் ஒரு வழக்கை உச்சநீதிமன்றம் தன்வசம் எடுத்துக் கொள்ளும்போது அந்தக் கட்சிக்காரர் உச்சநீதிமன்றத்தை அணுக முடியாது என்று சொல்லப்படுகிறது. அந்தத் தீர்ப்பை 110-ஆம் விதியின்படி தீர்ப்பு என்று எடுத்துக் கொள்ள முடியாது என்றும் அல்லது உயர்நீதிமன்றத்தின் இறுதி ஆணை என்று கொள்ள முடியாது என்றும் வாதிக்கப்படுகிறது. 110-ஆம் விதியில் தீர்ப்பு என்ற சொல்லை அந்தப் பொருளில் உபயோகப்படுத்தியதால், அதாவது உச்சநீதி மன்றத்துக்கு மேல் முறையீடு செய்ய வாய்ப்பளிக்கும் முடிவாக அது உள்ளதால் இந்த திருத்தத்திலுள்ள ''தீர்ப்பு'' என்ற சொல்லும் ஏன் அதே பொருளை கொடுக்க முடியாது என்பதை தனிப்பட்ட முறையில் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. வாதம் சரி யானது என்று எடுத்துக் கொண்டால் ''தீர்ப்பு'' என்ற சொல்லுக்குப் பதிலாக ''தீர்மானம்'' என்ற சொல்லை உபயோகிப்பதன் மூலம் எளிய முறையில் இந்த விஷயத்துக்கு தீர்வு கண்டுவிடலாம். 110 ஆம் விதியைப் பொறுத்தவரையில் தீர்மானம் என்பது இறுதி ஆணை என்று விளக்கத்தைச் சேர்த்துக் கொள்வதன் மூலம் இது சாத்திய மாகிறது. இந்தத் தடை கடக்க முடியாதது என்று நான் நினைக்க வில்லை.

மேல்முறையீட்டுப் பிரச்சினை சம்பந்தப்பட்டவரை வழக்கைத் திரும்பப் பெற்றக் கட்சிக்கு தன் விருப்பப்படி செயல்பட நிச்சயமாக வாய்ப்பு உள்ளது. அரசியலமைப்புச் சட்ட விளக்கம் சம்பந்தமான முடிவை ஆய்வதற்காக திரும்பப் பெறப்பட்ட ஒரு வழக்கில் உயர்நீதிமன்றத்தால் தீர்ப்பு வழங்கப்பட்டவுடன், அது நேராக உச்சநீதிமன்றத்தை அணுகி அந்தப் பிரச்சினைக்கு இறுதி முடிவைப் பெறலாம் அல்லது எல்லாக் கேள்விகளுக்கும் கீழ் நீதி மன்றத்தால் முடிவு அளிக்கப்படும் வரை காத்திருந்து அந்தக் குறிப் பிட்ட விஷயங்கள் சம்பந்தமாக உயர்நீதிமன்றம் மூலம் மேல்முறை யீட்டுக்குச் சென்ற பிறகு விஷயத்தை உச்சநீதி மன்றத்துக்குக் கொண்டு போகலாம். அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப் படும் பிரச்சினை. வழக்கின் பிரதான பிரச்சினையாக இருக்கும் போது அதாவது ஒரு தீர்மானம் எடுக்கப்பட்டால் அதுவே முழு வழக்குக்குமான முடிவாக அமையும்போது எந்த நடைமுறைக்கும் கட்சிக்காரர் கட்டுப்படுத்தப்படவில்லை. பாதிக்கப்பட்ட கட்சி கீழ் நீதிமன்றத்தில் வழக்கின் இதர விஷயங்களைப் பற்றி விசாரணை யில் ஈடுபடு வதைவிட உடனடியாக உச்சநீதிமன்றத்தை அணுகி அரசியல் சட்ட விளக்கத்தைப் பெறுவார் என்பதில் எனக்கு ஐயப்பாடு எதுவும் இல்லை. இதில் எந்தவிதமான சிக்கல்களும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

எழுப்பப்பட்ட மற்றொரு கேள்வி இதுதான்: அங்கே அமர்ந் திருக்கும் என் நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் ஏதோ கூறினார். அவர் கூறியது என் காதில் விழவில்லை. தனிப்பட்ட உரையாடல்களின்போது அவர் குறிப்பிட்டுள்ளதாவது: அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச்சினைகளையும் இதரப் பிரச்சினைகளையும் பிரித்து ஆய்வது உயர்நீதிமன்றத்துக்குக் கடுமையான பணியாக இருக்கும். மேலும் மற்றப் பிரச்சினைகளைப் பற்றி விளக்கவும் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப் படும் பிரச்சினைகள் சம்பந்தமாக உயர்நீதிமன்றத்துக்கு மற்றப் பிரச் சினைகளையும் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும். அந்த வழக்கு ஒரு சிறு வழக்காக இருந்து, சட்ட விளக்கம் தேவைப் படும் பட்சத்தில் அந்த வழக்கை கீழ் நீதிமன்றத்துக்கு அனுப்பாமல் உயர்நீதிமன்றமே ஏன் முடிவெடுக்கக் கூடாது? இந்த இரண்டு சாத்தியப்பாடுகளையும் செயல்படுத்தவே இந்தத் திருத்தம், வழக்கைத் தானே எடுத்து முடிவு செய்ய உயர்நீதிமன்றத்துக்கு அதிகாரம் அளிக் கிறது. சுட்டிக்காட்டப்பட்டுள்ள பல சிக்கல்களைத் தீர்க்க இது

போதுமானதாக இருக்கும் என்று நான் நினைக்கிறேன். வழக்கு முழுவதையும் உயர்நீதிமன்றம் பரிசீலிக்கும்போது வழக்கின் எல்லாக் கேள்விகளுக்கும் முடிவெடுக்கும் சுமை அதற்குக் கிடையாது. அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் குறிப்பிட்ட கேள்வி சம்பந்தமாக மட்டும் முடிவெடுக்க அதற்குச் சுதந்திரம் உள்ளது. எனவே நமது நோக்கங்களை திருத்தம் பிரதிபலிக்கிறது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் ஒரு விஷயத்தை நான் தெரிவிக்கலாமா? உரிமையியல் சட்டத்தின் பகுதி 24-ன்படி, ஒரு வழக்கைத் தானே எடுத்துக் கொண்டு விசாரித்து தீர்ப்பளிக்க உயர்நீதிமன்றத்துக்கு அதிகாரம் உள்ளது. ஆனால் பகுதி 24-ல் உள்ள இடர்ப்பாடு என்னவென்றால் ஒரு வழக்கை திரும்பப் பெற உயர்நீதிமன்றம் தீர்மானித்தால், அது வழக்கு முழுவதையும் எடுத்துக் கொள்ள வேண்டும். அதன் ஒரு பகுதியை மட்டும் எடுத்து, அது பரிசீலிக்க முடியாது. ஆனால் நம்முடைய நோக்கம் என்னவென்றால் வழக்கின் எந்தப் பிரச்சினைக்கு அரசியல் அமைப்புச் சட்டம் விளக்கம் தேவைப்படுகிறதோ அதை மட்டும் உயர்நீதிமன்றம் முடிவெடுக்க வேண்டுமென்பதே. நாம் இப்பொழுது 204 ஆம் விதியில், குறிப்பாகச் செய்துள்ள வழிமுறைகள் இல்லையென்றால், அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் தேவைப்படும் பிரச்சினைகள் உள்ள வழக்குகளில், வழக்கு முழுவதையும் உயர்நீதிமன்றம் எடுத்துக்கொள்ள வேண்டிய நிலை உருவாகும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் ஒரு விஷயத்தை எடுத்துரைக்க விரும்புகிறேன். நான் இப்பொழுது கொண்டு வந்துள்ள குறிப்பிட்ட திருத்தத்தின் சொல்லாக்கத்தை கூர்ந்து கவனிக்க நேற்றிலிருந்து இன்று வரைக்கும் சமயம் கிடைக்கவில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். சில சிறு பிழைகளுக்காக, முரண்பாடுகளுக்காக ஒவ்வொரு விதியையும் நிறுத்திவைப்பது சரியல்ல என்று நான் கருதுவதால் இந்தத் திருத்தத்தை நான் முன்மொழிகிறேன். இந்தத் திருத்தத்தை முன்மொழியும் அதேவேளையில், இதில் ஏதாவது பிழைகள் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டால் அந்தப் பிழைகளைத் திருத்தி வேண்டிய மாற்றங்களை செய்ய வரைவுக் குழுவுக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்று விரும்புகிறேன். அதன் மூலம் இந்த அவை நிறைவேற்றிய மற்ற விதிகளுக்கு ஒப்பாக இதுவும் அமையும்.

**திரு. அவைத் தலைவர்:** பேராசிரியர் ஷாவின் திருத்தம் 2674ஐ இப்பொழுது வாக்களிப்புக்கு விடுகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தம், இந்தத் திருத்தத்தை அவசியமற்றதாக்கிவிட்டதெனக் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி முழுவதையும் நான் முற்றிலும் மாற்றியுள்ளேன். திருத்தம் 2674ஐ நீங்கள் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** விதி முழுவதையும் மாற்றி அமைப்பதற்கான திருத்தம் உங்களுடையது. அப்படியானால் உங்களுடைய திருத்தத்தை வாக்களிப்புக்கு விடுகிறேன்.

விஷயம் இதுதான்:

*"விதி 204க்குப் பதிலாக பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்வது:-*

*உயர்நீதிமன்றத்துக்கு மாற்றம் செய்யப்படும் சில வழக்குகள்*

*''204. உயர்நீதிமன்றம், தனக்குக் கீழுள்ள ஒரு நீதிமன்றத்தில் முடிவுறா நிலையிலுள்ள வழக்கில் அரசியல் அமைப்புச் சட்ட விளக்கம் அடங்கிய சட்டப் பிரச்சினை இருப்பதையும், அந்த வழக்கினை முடிவு செய்வதற்கு அதனை தீர்வு செய்வது அவசியம் என்று உணர்ந்தால் அந்த வழக்கினை தானே எடுத்துக் கொண்டு -*

*(அ) அந்த வழக்கினை தானே முடிவு செய்யலாம். அல்லது,*

*(ஆ) அந்தச் சட்டப் பிரச்சினையை முடிவு செய்து, அந்த பிரச்சினையில் தனது முடிவினை ஒரு நகலுடன் அந்த வழக்கு எந்த நீதிமன்றத்திலிருந்து திரும்பப் பெறப்பட்டதோ அந்த நீதிமன்றத்துக்கே அனுப்பிவிடலாம். அந்த நீதிமன்றம் வழக்கைத் திரும்பப் பெற்றதும் அந்தத் தீர்ப்புக்கு இணங்க வழக்கை முடிவு செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.*

திருத்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(திருத்தம் செய்யப்பட்ட விதி 204 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் நிறைவேறியது. திருத்தம் செய்யப்பட்ட 204ஆம் விதி அரசியல் அமைப்புச்சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது இது மூல விதியாகி விட்டது. முன்மொழியப்பட்ட திருத்தங்கள் எல்லாம் ரத்தாகிவிட்டன.

விஷயம் இதுதான்:

''திருத்தம் செய்யப்பட்ட 204 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தின் பகுதியாகிறது."

திருத்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தம் செய்யப்பட்ட விதி 204 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் நிறைவேறியது. திருத்தம் செய்யப்பட்ட 204 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).

## விதி 205

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது விதி 205ஐ அவை எடுத்துக் கொள்ளும். இதற்கு ஒரு திருத்தம் எண் 2676 டாக்டர் அம்பேத்கரின் பெயரில் உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

விதி 205க்குப் பதிலாக பின்வருவதைச் சேர்க்கவும்:-

உயர்நீதிமன்றங்களின் அலுவலவர்களும் பணியாளர்களும் மற்றும் செலவுகளும்

'205 (1) உயர்நீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள், அந்த நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாலோ அல்லது அவர் பணிக்கும் அந்த நீதிமன்றத்தின் வேறொரு நீதிபதியாலோ, அலுவலராலோ நியமிக்கப்படுவர்.

இருப்பினும் அந்த உச்சநீதிமன்றத்தின் முக்கிய இடம் அமைந்துள்ள மாநிலத்தின் ஆளுநர், தான் வகுக்கும் விதியின் மூலம், அந்த விதிகளில் குறிப்பிட்டுள்ள நேர்வுகளில் தேர்வாணையத்தைக் கலந்தாலோசியாது அந்த நீதிமன்றம் சம்பந்தப்பட்ட எந்த அலுவலகப் பணிக்கும் அந்த நீதிமன்றத்தைச் சார்ந்தவர் அல்லாதவர் எவரையும் நியமிக்கக் கூடாது என வலியுறுத்தலாம்.

2. மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தின் வழிவகைகளுக்குட்பட்டு, அந்த உயர்நீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்களின் பணி நிபந்தனைகள், அந்த நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாலோ, அதற்கென விதி

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 8 1949, பக். 719 -20.

வகுக்க, அந்தத் தலைமை நீதிபதியால் அதிகாரமளிக்கப்பட்டுள்ள அந்த நீதிமன்றத்தின் வேறு நீதிபதி அல்லது அதிகாரி வகுக்கும் விதிகளின்படி இருக்கும்.

இந்த அலுவலர்களுக்கும் மற்றும் பணியாளர்களுக்கும் கொடுக்கப்பட வேண்டிய அல்லது அவர்கள் சம்பந்தமான ஊதியங்கள், படிகள் மற்றும் ஓய்வூதியங்கள், இந்த உயர்நீதிமன்றம் செயலாற்றிவரும் மாநில ஆளுநருடன் கலந்தாலோசித்து, இந்த நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியால் நிர்ணயிக்கப்படும்.

(3) நீதிமன்ற அலுவலர்கள் மற்றும் பணியாளர்கள் பெற வேண்டிய அல்லது சம்பந்தப்பட்ட ஊதியங்கள், படிகள், ஓய்வூதியங்கள் உட்பட அந்த நீதிமன்ற நிர்வாகச் செலவுகள் மற்றும் அந்த நீதிமன்றத்தின் ஊதியங்கள் மற்றும் படிகள் அந்த மாநில வருவாயின் மீது சார்வு செய்யப்படும். மற்றும் அந்த நீதிமன்றம் வசூலிக்கும் கட்டணங்கள் மற்றும் பிற தொகைகள் அந்த வருவாயின் பகுதியாக இருக்கும்."

**திரு. அவைத் தலைவர்:** திரு. கபூர் ஒரு திருத்தம் கொண்டு வருகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்தத் திருத்தத்துக்கு ஒரு திருத்தம் என்னிடம் உள்ளது. நீங்கள் அனுமதி அளித்தால் அதை முன்மொழிகிறேன். பட்டியல் 11ல் பக்கம் 3ல் அது உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் அதை முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

"திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2676 விதியைப் பொறுத்த வரையில் 205-ஆம் விதியின் (2) ஆவது பிரிவின் வரம்புரைக்குப் பதிலாக பின்வரும் வரம்புரையைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:

"இந்த பிரிவின்படி இயற்றப்படும் விதிகள், ஊதியங்கள், படிகள் விடுப்பு ஓய்வூதியங்கள் சம்பந்தப்பட்டவரை அந்த உயர்நீதி மன்றம் செயல்படும் பிரதான மையம் உள்ள மாநிலத்தின் ஆளுநரின் அனுமதி பெறப்பட வேண்டும்."

ஐயா, உச்சநீதிமன்றம் சம்பந்தமான வழிவகைகளுக்கு முற்றிலும் இசைவானதுதான் இந்த வழிவகைகளும்.

**திரு. அவைத் தலைவர்:** திரு. கபூர், உங்களுடைய திருத்தத்தையே இது பிரதிபலிக்கிறது.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர் (ஐக்கிய மாகாணங்கள்: பொது):** ஆம் ஐயா, என்னுடைய திருத்தத்தைக் கொண்டுவர வேண்டிய அவசியத்தை இது தேவையற்றதாகிவிட்டது.

(திரு. அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப் பட்ட விதி 205, அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

## விதி 206

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த விதியை நீக்கிவிடலாம் என்று நான் முன்மொழிகிறேன்.

206-ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்திலிருந்து நீக்கப் பட்டது.

## விதி 90 - தொடர்ச்சி

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இப்பொழுது நிதி சம்பந்தமான விதியை எடுத்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள் கிறேன். விவாதிக்கப்பட்டு வந்த விதி 90ஐ இப்பொழுது எடுத்துக் கொள்வோம்.

**திரு. அவைத் தலைவர்:** நாம் விவாதத்தை ஒத்திவைப்பதற்கு முன்தினம், இந்த விதிக்குப் பல திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. அவை டாக்டர் அம்பேத்கர் பெயரிலுள்ள திருத்தங்கள் எண் 3, 4 மற்றும் 6 ஆகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா நான் முன்மொழிகிறேன்:

''விதி 90ன் பிரிவு (1) உட்பிரிவு (இ) மற்றும் (ஈ) ஆகியவைகளுக்குப் பதிலாக பின்வரும் உட்பிரிவுகளைச் சேர்த்துக் கொள்வது;

'(இ) இந்தியத் தொகுப்பு நிதி அல்லது எதிர்பாராச் செலவின நிதியத்தை நிர்வகித்தல், இத்தகைய நிதியம் எதிலும் பணம் செலுத்துதல் அல்லது அதி லிருந்து பணம் எடுத்தல்;

'(ஈ) இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து பண ஒதுக்கீடு செய்தல்.''

ஐயா, திருத்தம் எண் 4ன் கருத்தையே திருத்தம் 3ம் கொண் டிருப்பதால் அதை நான் முன்மொழியப் போவதில்லை.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 8 1949, பக். 723-26

ஐயா, மேலும் இதை முன்மொழிகிறேன்:

''விதி 90 பிரிவு (1)ன் (ஊ) (எ) உட்பிரிவுகளில் உள்ள ''இந்தியாவின் வருவாய்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''இந்தியாவின் தொகுப்பு நிதியம்'', என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

ஐயா, பண்டிட் குன்சுருவின் பெயரிலுள்ள திருத்தம் எண் 5ன் நோக்கத்தையும் இது நிறைவேற்றி விடுவதால் அது அவசியமில்லை என நினைக்கிறேன்.

ஐயா, உங்கள் அனுமதியுடன் இந்தக் கட்டத்தில், இப்பொழுது கொண்டு வந்துள்ள குறிப்பிட்ட திருத்தங்களினால் விளக்கப்படாத நிதி விஷயங்கள் சம்பந்தமாகக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறை களில் செய்யப்பட்டுள்ள சில மாற்றங்களை, அவை புரிந்துகொள்ள ஓர் அறிமுக உரை நிகழ்த்த விரும்புகிறேன்.

இந்த விஷயம் சம்பந்தமாக நான் கொண்டுவரத் தீர்மானித் துள்ள பல்வேறு திருத்தங்களினால் நாம் செய்துள்ள மாற்றங்கள் இவைதான். சட்டம் இல்லாமல் வரி விதிப்பு இல்லை என்பதே செய்யப்பட்ட முதலாவது மாற்றம். மக்கள் மீது வரி ஏதாவது விதிக்கப் பட வேண்டுமென்றால் அதற்கு அனுமதி அளிப்பது சட்டந்தான். விதி 248ல் இதற்கான வழிவகை செய்யப்பட்டுள்ளது. அது பின்பு எடுத்துக் கொள்ளப்படும். நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம் என்பதைப் பற்றிய ஒரு முழுச் சித்திரத்தை அவைக்கு அளிப்பதற்கே நான் இங்கே அதைக் குறிப்பிட்டுள்ளேன். தற்பொழுதுள்ள வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தில் அப்படியொரு வழிமுறை இல்லை. தொகுப்பு நிதியம் என்ற ஒரு கருத்தை அறிமுகப்படுத் துவது இரண்டாவது விஷயம். பின்னால் எடுத்துக் கொள்ளப்படும் விதி எண் 248 'ஆ' வின் மூலம் இது செயல்படுத்தப்படும். நாடாளு மன்றம் நிறுவ விரும்பும், எதிர்பாராச் செலவின நிதியம் ஒன்றை அமைக்க வகை செய்யவும் விரும்புகிறோம். புதிய விதி 243 'ஆ' வின் மூலம் இது செயல்படுத்தப்படும்.

சட்ட அனுமதியின்றி எந்த வரி விதிப்பும் இருக்கக்கூடாது என்ற முதல் ஏற்பாட்டைக் குறித்து விளக்கம் எதுவும் அவசியம் இருக்காது என்று நான் நினைக்கிறேன். அது ஒரு நல்ல ஆரோக்கிய மான ஏற்பாடு. நாடாளுமன்றத்தின் அனுமதி பெறாமல் நிருவாகத் துறை மக்களின் மீது வரி விதிக்க முடியாது. தொகுப்பு நிதியத்தைப்

பொறுத்த வரையில் உண்மையிலேயே அதை ஒரு புதிய கருத்து என்று சொல்ல முடியாது; புதிய சொல்லாக்கந்தான். ''இந்திய கவர்னர் -ஜெனரலின் பொதுக்கணக்கு'' என்று அது தற்பொழுது அழைக்கப் படுகிறது. கருவூல விதிகளின் தொகுப்பு தொகுதி 1ஐ, மரியாதைக்குரிய உறுப் பினர்கள் பார்த்தீர்கள் என்றால் பொதுக்கணக்கைத் தொகுப்பு நிதியம் என்றும் குறிப்பிட்டிருப்பதைக் காணமுடியும். அதன் விளக் கத்தைப் படிக்கிறேன். 'மத்திய அரசின் பொதுக்கணக்கு' என்பது, சட்டத்தின் விதி 136ல் வகுக்கப்பட்டுள்ளபடி கவர்னர் ஜெனரலின் வருவாய் சம்பந்தமாகப் பெறப்படும் பணம் செலுத்தப்படவும், வரவு வைக்கப் படவும், அரசின் சார்பாகவும் அரசிற்கான எல்லாச் செலவு களையும் பட்டுவாடாச் செய்யவும் ஏற்படுத்தப்பட்ட தொகுப்பு நிதியம் ஆகும்.

எனவே 'தொகுப்பு நிதியம்' என்ற சொற்களின் உபயோகம் சொல்லமைப்பின் மாற்றம் மட்டுமே, ஏனெனில் அந்தச் சொல் மத்திய அரசின் பொதுக்கணக்கு என்று பொருள்படும்படி உபயோ கிக்கப்பட்டுள்ளது.

தொகுப்பு நிதியம் என்ற கொள்கைக்குப் பின்னே ஒரு முக்கிய கருத்து உள்ளது. சுமார் 1777 ஆம் ஆண்டுவாக்கில் இங்கி லாந்தில் தொகுப்பு நிதியம் என்ற சிந்தனை உதயமானது என்பது உறுப்பினர்களுக்குத் தெரிந்திருக்கக்கூடும். இந்தத் தொகுப்பு நிதியம் இங்கிலாந்தில் உருவாக்கப்பட்டதன் நோக்கம் இதுதான். ஆரம் பத்தில் வரிகள் அரசருக்காகக் கோரப்பட்டது. அரசர் அதைச் சேகரித்து, தாம் விருப்பப்பட்ட நோக்கங்களுக்குச் செலவழித்து வந்தார். பல நேரங்களில் அரசர் தான் கோரிய இனங்களுக்கு முற்றிலும் மாறான இனங்களுக்குச் செலவு செய்தார். வரி விதிப்பிற்கு வாக்களித்த பிறகு நாடாளுமன்றத்துக்கு இதன் மீது எந்தக் கட்டுப்பாடும் இல்லை. பிறகு ஒரு கட்டத்தில் நாடாளுமன்றம் வேறு ஒரு நடைமுறையைப் பின்பற்றியது. ஒரு குறிப்பிட்ட வரியை விதித்த பிறகு, அந்த வரி விதிப்பில் கிடைக்க வருவாயை ஒரு குறிப்பிட்ட இனத்திற்குச் செலவு செய்ய நிதி ஒதுக்கீடு செய்தது. இதன் விளைவாக நிதிநிலை அறிக்கையை நிறைவேற்ற வேண்டிய சமயத்தில் எல்லா வரிப் பணங்களும் சில குறிப்பிட்ட இனங்களின் செலவுக்காக ஒதுக்கப்பட்டு விட்டதால் எந்தவிதப் பணமும் எஞ்சியிருக்கவில்லை. வரவுச் செலவுத் திட்டத்தின் பொதுத் தேவைக்காக எந்தப் பணமும் மிஞ்சி இருக்கவில்லை. தனிப்பட்ட வரிவிதிப்புகளின் மூலம் திரட்டப்படும்

பணத்தைக் குறிப்பிட்ட இனங்களுக்காக நிதி ஒதுக்கீடு செய்வதால் பணம் செலவு ஆவதைத் தவிர்க்க வரிவிதிப்பின் மூலம் கிடைக்கும் வருவாய் முழுவதையும் எந்த ஒரு குறிப்பிட்ட இனத்துக்கும் ஒதுக்கீடு செய்யாமல் ஒன்றாகத் திரட்டப்பட்ட நிதியமாக உருவாக்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் நாடாளுமன்றம் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றித் தீர்மானிக்கும்போது அதனிடம் செலவு செய் வதற்கு ஒரு நிதியம் இருக்கும். வேறு வார்த்தைகளில் கூறுவதென் றால், தொகுப்பு நிதியம் என்பது மிக அவசியமான விஷயம். வரி விதிப்பின் மூலம் கிடைக்கும் வருமானத்தை மக்களின் பொதுவான தேவைகளைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல், குறிப்பிட்ட இனங்களுக்காக நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்களின் மூலம் விரையமாவதைத் தடுப்பதற்கான வழியாகும். தொகுப்பு நிதியம் என்பது ஒரு அவசியமான நடவடிக்கை என்பதால் இதற்கான ஏற் பாட்டை ஏற்றுக் கொள்வதில் அவைக்கு எந்த இடர்ப்பாடும் இருக்காது என்று நான் நினைக்கிறேன். தொகுப்பு நிதியத்திற்கு வகை செய்யாத அரசியல் அமைப்புச் சட்டம் எதுவும் இல்லை என்று கூறமுடியும். ஆஸ்திரேலியா, கனடா, தென் ஆப்பிரிக்கா அல்லது அயர்லாந்து அல்லது வேறு எந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை ஒப்பிட்டாலும் அவைகள் எல்லாவற்றிலும் வரி விதிப் பின் மூலம் அல்லது மற்ற விதத்தில் எழுப்பப்படும் பணம் ஒன்றாகத் தொகுப்பு நிதியமாக தொகுக்கப்பட வேண்டுமென்று வழிவகை செய்யப்பட்டுள்ளது. எனவேதான் நாம் எந்தவிதத்திலும் பாதை மாறிச் செல்லவில்லை.

பிறகு நாம் செய்ய விரும்பும் வேறு ஒரு ஏற்பாடு குடியரசுத் தலைவரின் சான்றிதழ் அட்டவணைக்குப் பதிலாக நிதி ஒதுக்கீடு சட்டத்திற்கான வழிவகைகளைச் செய்வதுதான். வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தின் 94ஆவது விதியை நோக்கினால் மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் இன்றைய நடைமுறை என்ன என்பதைத் தெரிந்து கொள்வர். முதலாவதாக நடைபெறுவது இதுதான். 92 ஆம் விதியின்படி, குடியரசுத் தலைவர் அதாவது அன்றைக்குப் பதவியில் இருக்கும் அரசு, ஒரு நிதி அறிக்கையை 94 ஆம் விதியின் பிரிவில் குறிப்பிட்டுள்ள படிவத்தில் நாடாளுமன்றத்துக்கு தாக்கல் செய்ய வேண்டும். இதில் செலவினங்களை இரண்டு பகுதிகளாக வேறு படுத்திக் காட்ட வேண்டும். ஒரு பகுதியில் இந்திய வருவாயில் சார்வு செய்யப்பட்ட செலவினங்களைக் குறிப்பிட வேண்டும். மற்றொரு

பகுதி இந்திய வருவாய் இனத்தில் சார்வு செய்யப்படாத செலவினங்களைத் தொகுப்பு நிதியத்தின் கீழ் குறிப்பிட வேண்டும். அது தாக்கல் செய்யப்பட்ட பிறகு, 93 ஆம் விதியில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இரண்டாவது கட்டம் வருகிறது. விதி 93ன்படி நடைபெறுவது இதுதான். தாக்கல் செய்யப்பட்டுள்ள நிதி அறிக்கையை தலைப்பு வாரியாகவும் துணைத் தலைப்பு வாரியாகவும் இனவாரியாகவும் நாடாளுமன்றம் விவாதிக்க முற்படுகிறது. நிர்வாகத்துறை பரிந்துரைத்துள்ள தொகைகளை ஏற்றுக் கொள்ளவோ குறைக்கவோ செய்கிறது. வெட்டுத் தீர்மானத்தின் மீதான ஏதாவது தீர்மானங்களின் மூலம் இது செயல்படுத்தப்படுகிறது. இதற்குப் பிறகு இப்போதைய நடைமுறைப்படி 94 ஆம் விதியின் ஏற்பாடுகள் நடைமுறைக்கு வருகின்றன. அதாவது நாடாளுமன்றத்துக்கு முன் வைக்கப்பட்டுள்ள பல்வேறு தலைப்பிலான செலவினங்களுக்குச் சட்டமன்றம் செய்துள்ள வழிமுறைகளை குடியரசுத் தலைவர் சான்றிதழ் அளிக்கிறார். குடியரசுத் தலைவர் அளிக்கும் சான்றிதழ் நடைமுறையை மாற்றி சரியான நிதி ஒதுக்கீடு சட்டத்தை சட்டமன்றம் நிறைவேற்றுவதுதான் புதிய ஏற்பாடு.

வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தின் 94 ஆம் விதியின் ஏற்பாடுகளுக்காக நிதி ஒதுக்கீடு மசோதா நடைமுறை மாற்றத்துக்குச் சாதகமான வாதங்கள் இதுதான். வழங்கீட்டுக்கான வாக்களிப்பை அளிக்கிறது சட்டமன்றம். எனவே சட்டமன்றமே தான் செய்ததை ஒரு சட்ட முறையில் நிறைவேற்ற வேண்டுமென்பது சரியான முறையே. பங்கீடு வாக்களிப்பு சம்பந்தமான சட்டமன்றத்தின் நடவடிக்கையை குடியரசுத் தலைவரின் நிருவாகச் செயல் மூலம் சான்றிதழ் பெற வேண்டிய அவசியம் ஏன்? இதுதான் நாம் தீர்மானிக்க வேண்டிய முக்கிய விஷயம். நிதி விவகாரங்களைப் பொறுத்த மட்டில் நாடாளுமன்றமே முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனெனில் 93 ஆவது விதியில் உள்ள ஏற்பாட்டின்படி நாடாளுமன்றத்தின் அனுமதியின்றி எந்தவித செலவினமும் செய்ய முடியாது. ஏதாவது தலைப்பின் கீழ் குறிப்பிட்ட தொகையை செலவழிக்க நாடாளுமன்றம் அனுமதித்தால் அந்தச் செலவுத் தொகைக்கு ஒப்புதலளிக்க (சான்றளிக்க) பொருத்தமான அதிகாரி நாடாளுமன்றமே தவிர குடியரசுத் தலைவர் அல்லர். எனவேதான் இந்த வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தின் 94 விதியில் உள்ள நடைமுறைகளுக்குப் பதிலாக நிதி ஒதுக்கீட்டுச் சட்ட நடைமுறை உள்ளது.

1935 ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டத்தின்படி 94 ஆவது விதி பொருத்தமானது என்பதையும் நான் குறிப்பிட வேண்டும். ஏனெனில் கவர்னர்-ஜெனரல் தம் விருப்பப்படியும் தனிப்பட்ட முடிவின்படியும் நிறைவேற்றப்படும் நடவடிக்கைகளுக்குத் தேவைப் படும் செலவினங்களுக்கு ஒப்புதல் சான்றிதழ் அளிக்கும் உரிமை பெற்றிருந்தார். கவர்னர்-ஜெனரல் தம் விருப்பப்படியும், முடிவின் படியும் நிறைவேற்றப்படும் செயல்கள் சம்பந்தமான செலவினங் கள் நாடாளுமன்றத்தின் கண்காணிப்புக்கும், அதிகாரத்துக்கும் அப்பாற்பட்டு இருந்தன. அவர் அந்தத் தொகையை மாற்றவும், அதிகரிக்கவும் உரிமை பெற்றிருந்தார். இதன் விளைவாகத்தான் ஒப்புதல் சான்றிதழ் அளிக்கும் உச்ச அதிகாரியாக கவர்னரே இருக்க வேண்டியிருந்தது. தமது விசேஷப் பணிகளை நிறைவேற்ற இந்த மாதிரி பட்ஜெட் ஏற்பாடுகளை (வழிமுறைகளை) செய்ய அவருக்கு தனிப்பட்ட அதிகாரம் இருந்தது. நமது புதிய அரசியல் அமைப்புச் சட்டப்படி அவரது விருப்பப்படியோ அல்லது தனிப்பட்ட முடிவு களின்படியோ நிறைவேற்ற எந்தவிதப் பணிகளும் கிடையாது. எனவேதான் சில வகையான பணிகளுக்கானச் செலவுத் தொகை களை ஒதுக்கும் பணியில் அவருக்கு எந்தப் பங்கும் இல்லை. இது இப்படி இருப்பதால், புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி, ஒப்புதல் சான்றிதழ் வழங்கும் நடைமுறைக்கு இடமில்லாமல் போகிறது. நிதி ஒதுக்கீட்டு நடைமுறை, கனடா, தென் ஆப்பிரிக்கா, இங்கிலாந்து போன்ற எல்லா நாடாளுமன்ற அரசுகளாலும் பின்பற்றப்பட்டு வருகின்றன என்பதை நான் தெரிவித்துக் கொள்ள வேண்டும்.

1935 ஆம் ஆண்டு, இந்த விஷயம் விவாதிக்கப்பட்டபோது, இந்திய அரசுச் சட்டம் தயாரிக்கப்படும் நிலையில் இருந்தது. அவ் வமயம் சட்டமன்றம் அனுமதித்த செலவினங்களை உறுதிப்படுத்து தற்கு, ஒப்புதல் சான்றிதழ் மூலம் அல்லாது, நிதி ஒதுக்கீட்டுச் சட் டத்தின் மூலம் செய்யப்படல் வேண்டும் என்று அரசுச் செயலரே யோசனை கூறினார் என்பதையும் நான் எடுத்துக் கூற வேண்டும். ஆனால் அன்றைய இந்திய அரசாங்கம் இந்த நிதி ஒதுக்கீட்டு மசோதா யோசனையை ஆதரிக்கவில்லை. ஏனெனில், தம்முடைய பணி களைச் செயல்படுத்துவதற்குக் குறிப்பிட்ட தொகையை, வரவு-செலவுத் திட்டத்தில் ஒதுக்கீடு செய்ய கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் இருந்தது. மற்றபடி, அரசுச் செயலரே இந்த ஆலோசனைக்கு ஆதரவு தெரிவித்தும், 1935ல் இந்திய அரசாங்கம் இந்த ஆலோசனையை

ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. தொகையைத் தீர்மானிக்கவும் அதைச் செலவுச் செய்யவும் நிருவாகத் துறைக்கு அதிகாரம் அளிக்கும் இந்தச் செயல்பாட்டை தொடர்ந்து வைத்துக் கொள்வது தேவை யற்றது என்று நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். செல வினங்களுக்கான தொகையை அனுமதிக்கும் விஷயத்தில் நாடாளு மன்றமே இறுதி அதிகாரம் பெற்றுள்ள, எல்லா நாடுகளிலும் உள்ள நடைமுறைகளுக்கு இணங்க, நமது நடைமுறைகளையும் மாற்றிக் கொள்வதே விரும்பத்தக்கது என்று நான் கருதுகிறேன்.

முன்னளிப்பு மானியம் என்று அழைக்கப்படும் மற்றொரு புதிய நடைமுறை இப்போது சேர்க்கப்பட்டுள்ளது. இப்பொழுது அதை ஏன் அறிமுகப்படுத்தியுள்ளோம் என்பதை விளக்க வேண்டுவது அவசியம். அதற்கு, 93 ஆம் விதியை, அது இப்பொழுதுள்ள நிலை யில், அவை உறுப்பினர்கள் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டு மென்று மீண்டும் கேட்டுக் கொள்கிறேன். விரிவான வரவு செலவுத் திட்டம் முழுவதையும் நாடாளுமன்றம் நிறைவேற்றப்படாத நிலை யில், 93 ஆம் விதியின்படி எந்தப் பணிகளுக்கும் தொகை அளிக்கப் படவோ செலவழிக்கப்படவோ முடியாது. 93ஆம் விதியைப் படித்துப் பார்த்தால் அதன் சாரம் இதுதான் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள். தலைப்புகள், துணைத் தலைப்புகள் மற்றும் இனம் வாரியாக வரவு-செலவுத் திட்டம் தாக்கல் செய்யப்பட வேண்டும். இத்தகைய தலைப்பு, துணைத் தலைப்பு மற்றும் இனங்கள் வாரியாக நாடாளுமன்றம் வரவு-செலவுத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும். பல்வேறு இனங்களின் தலைப்புகளில் 250 கோடிக்கு மேல் செல வினங்கள் கொண்டுள்ள, பெரும் அளவிலான ஒரு செயல்பாடுதான் வரவு-செலவுத் திட்டம் என்பது. 93 ஆம் விதியின் நிபந்தனைகள் அப்படியே இருக்குமானால், அதாவது நாடாளுமன்றம் எல்லாச் செலவினங்களையும் நிறைவேற்றிய பிறகே எந்தத் தொகையையும் செலவழிக்க முடியும். மேலும் அலுவல் ஆண்டு முடிவதற்கு முன்பு, வரவு-செலவுத் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற நிபந் தனையும் இருந்தால், வரவு செலவுத் திட்டத்தைக் குறித்த விவா தத்திற்குக் குறைந்த கால அளவே நிர்ணயிக்க முடியும். ஏனெனில் 93 ஆவது விதியின்படி வரவு-செலவுத் திட்டத்தின் எல்லா இனங் களும் நிறைவேற்றப்படாமல், தொகை எதுவும் செலவு செய்ய முடியாது. நான் கூறியபடி, வரவு-செலவுத் திட்டத்தை முழுவதுமாக விவாதிக்கும் உரிமையை நீங்கள் இழக்க வேண்டும் அல்லது 93 ஆம் விதியில் திருத்தம் செய்ய வேண்டும் அல்லது 93 ஆம் விதிக்கு ஒரு

வரம்புரையைச் சேர்க்க வேண்டும். ஒரு திருத்தத்தின் மூலம் நாம் அறிமுகப்படுத்தத் தீர்மானித்திருக்கும் முன்னளிப்பு மானிய நடைமுறை மூலம் நிருவாகத் துறைக்கு இரண்டு மாதப் பணிகளுக்கு ஒரு மொத்தத் தொகையை மானியமாக நாடாளுமன்றம் அனுமதிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. எனவே, அரசின் வரவு செலவுத் திட்டங்கள் மற்றும் நிதிநிலைத் திட்டங்கள் குறித்த, விரிவான விவாதத்திற்கு - முழுமையான விவாதத்திற்கு என்று நான் சொல்ல மாட்டேன், நாடாளுமன்றத்துக்கு இரண்டு மாதகால அவகாசம் கிடைக்கும். எனவே எதிர்க்கட்சித் தலைவருக்கும் அரசுக்கும் இடையில் ஏற்படும் ஒப்பந்தத்தின் அடிப்படையில், முன்னளிப்பு மானியம் என்ற நடைமுறை இல்லையென்றால், அதாவது இரண்டு மூன்று மாதச் செலவினங்களை ஈடுசெய்ய மொத்தத் தொகை ஒன்றை மானியமாக நிருவாகத் துறைக்கு அளிக்கப்படவில்லையெனில், இப்பொழுதுள்ளதை விட வரவு-செலவுத் திட்டத்தை விரிவான முறையில் விவாதிக்க உங்களுக்கு அதிக நேரம் கிடைக்காது. கடந்த தடவை வரவு-செலவுத் திட்டம் வேகவேகமாக நிறைவேற்றப்பட்டதாக ஓர் எண்ணம் நிலவியதை அவை மறந்திருக்க முடியாது. பல்வேறு வகைப்பட்ட இனங்களை விவாதிக்க, உறுப்பினர்களுக்கு ஏழெட்டு நாட்களுக்கு மேல் கொடுக்கப்படவில்லை. சிறிது நேரமே பேச அனுமதிக்கப்பட்டனர். வரவு-செலவுத் திட்டத்தை, மேலும் விவரமாக விவாதிக்க அதிக நேரம் தேவை என்று அவை விரும்பினால், நிதிநிலை விவரங்களை விவாதிக்க விரும்பினால் அரசியல் அமைப்புச் சட்டத்தில் வழிவகை ஏதாவது செய்தாக வேண்டும். அதன் மூலம், விவாதத்திற்கு இரண்டு மாதம் தேவை என்றால், இரண்டு மாதச் செலவினங்களுக்கான மொத்தத் தொகையை தொகுப்பு நிதியத்திலிருந்து நிருவாகத் துறைக்கு அவை ஒதுக்கிட வழி செய்யப்படும். நிதிநிலை அறிக்கையின் எல்லா வரவு செலவு இனங்களையும் நிறைவேற்றாமல் எந்தத் தொகையும் செலவிடக்கூடாது என்று 93 ஆம் விதி மிகவும் கண்டிப்பாக நிர்ணயித்திருப்பதால் 93 விதியின் வழிவகைகளுக்கு வரம்புரை அளிக்க வழிமுறை காணப்பட வேண்டும். முன்னளிப்பு மானியத்துக்கான வாக்களிப்பு என்ற ஏற்பாட்டின் மூலம் இதற்கு வழிவகுத்துள்ளோம். வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தில் நாம் கொண்டு வந்துள்ள மூன்று முக்கிய மாற்றங்கள் இவைதான் என்று கூறலாம் என நினைக்கிறேன். நான் முன்வைத்துள்ள இத்திருத்தங்களை முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]*திரு. பி. தாஸ்:* ...திருத்தப்படும் இந்த விதிகள் தவறுகள் நேரா வண்ணம் உத்தரவாதம் அளிக்கும் என்பதில் மீண்டும் மகிழ்ச்சி யடைகிறேன். தங்கள் பணிகளில் கவனத்துடன் செயல்படுவதுடன், செலவினங்களில் அமைச்சர்கள் ஊதாரித்தனமாக இருக்க முடியாது. இதற்காக டாக்டர் அம்பேத்கரை மீண்டும் வாழ்த்துகிறேன்.

*மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலஸ் ராய் (அசாம்-பொது):* உரையைத் தொடங்குமுன், டாக்டர் அம்பேத் கரிடம் சில விஷயங்கள் குறித்து விளக்கங்கள் கேட்க விரும்பு கிறேன். தொகுப்பு நிதியம் என்றழைக்கப்படும் ஒரு நிதியத்தை உரு வாக்க இந்திய அரசாங்கத்தை இத்திருத்தம் கட்டாயப்படுத்து கிறதா? அல்லது அது ஒரு அதிகாரமளிக்கும் திருத்தமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அது ஏற்கெனவே இருக்கிறது. பெயரில் மட்டும்தான் மாற்றம் செய்யப்பட்டுள்ளது.

*மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலாஸ் ராய்:* அப்படியென்றால் சட்டமன்றம் நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் ஒன்றை நிறைவேற்ற வேண்டும். அதுவும் அதே அமர்வில் நிறைவேற்றப்பட வேண்டும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம்.

* * *

*மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலாஸ் ராய்:* சந்தேகத்துக்கு இடமின்றி அதற்கு அதிக காலம் பிடிக்கும். ஐயா, எனவே இதுகுறித்துச் சில கருத்துகளைக் கூற விரும்புகிறேன். இந்திய அரசாங்க அமைச்சர்கள் பணத்தைச் செலவு செய்வது பற்றி யும், விரையம் செய்வது குறித்தும் கடுமையான குற்றச்சாட்டுகள் உள்ளன. மாகாண அரசுகள் பற்றியும் இதே விமர்சனங்கள் உள்ளன. 90-ஆம் விதியிலுள்ள கோட்பாடுகள் மாகாண அரசுகளுக்கும் பொருந்தும் என நான் எண்ணுகிறேன். 174-ஆம் விதியிலும் இதே கோட்பாடுகள் இருக்கின்றன.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 8 1949, பக். 737.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

★ ★ ★

[1]**மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலஸ் ராய்:** அதுதான் நிலைமையா, அல்லது ஒவ்வொரு மாநிலமும் செல வினங்களுக்காக நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் நிறைவேற்றக் கட்டாயப் படுத்தப்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் கட்டாயமானது. ஆனால் முன்னளிப்பு மானியம், அமைச் சகத்தின் விருப்பத்தைப் பொறுத்தது. ஏதாவது ஓர் அமைச்சகம் முன்னளிப்பு மானியம் தேவைப்பட்டால் அது சட்டமன்றத்தைக் கோரலாம்.

**மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலஸ் ராய்:** கவர்னரின் ஒப்புதல் சான்றிதழ் பெறும் தற்போதைய நடைமுறையை பின்பற்ற அசாம் அல்லது வேறு ஏதாவது மாகாண அமைச்சரவை விரும்பினால், அது அந்த முறையைப் பின்பற்றலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கவர்னரின் ஒப்புதல் சான்றிதழ் பெறும் நடைமுறை தற்பொழுது இல்லை.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. டி.டி. கிருஷ்ண மாச்சாரி கூறியதற்கு மேலாகப் பயனுள்ள எதையும் கூறுவதற் கில்லை என்று நினைக்கிறேன். கொண்டுவரப்படும் திருத்தங்கள் பற்றிய என் கருத்தை, குறித்த நேரத்தில் தெரிவிப்பேன். அதே வாதங் களே தொடரும் என்பதில் சந்தேகமில்லை.

(முன்பு குறிப்பிடப்பட்டுள்ள டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தம் செய்யப்பட்ட 90 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 8 1948, பக். 738.
2. அதே நூல் பக். 741

## கார்களின் எண் தகடுகளில் இந்தி மொழி எண்கள்

★ ★ ★

[1]பண்டிட் பாலகிருஷ்ண சர்மா: ...இந்தியை தங்கள் ஆட்சி மொழியாகவும், அரசு எழுத்தாக தேவநாகிரி எழுத்தையும் ஏற்றுக் கொண்ட மாகாணங்கள், எல்லாப் பக்கங்களிலும் சூழப்பட்டு, டில்லி மாகாணம் அமைந்துள்ளது என்பதை எப்பொழுதும் நான் கூறி வருகிறேன்.

திரு. அவைத் தலைவர்: அமைதி, அமைதி. நீங்கள் அளிக்க விரும்பிய விவரங்கள் எனக்குக் கிடைத்துள்ளன. நான் கூறியபடி மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் உரிமைப் பிரச்சினையின் மீதான என்னுடைய தீர்ப்புக்கு வற்புறுத்தக்கூடாது. அது அவர்களுடைய நலனுக்கு உகந்ததல்ல. நான் அறிவித்தபடி இந்த விஷயம் அரசிடம் எடுத்துச் செல்லப்படும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்: பொது): சட்டத்தை மீற எந்த உரிமையும் இல்லை.

★ ★ ★

## விதி 92

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

1. ''92 ஆம் விதியின் பிரிவு (3)ன் உட்பிரிவு (ஆ)ல் 'ஊதியம்' என்ற சொல்லுக்குப் பதில் 'சம்பளம்' என்ற சொல்லை சேர்க்க வேண்டும்.

எப்பொழுதும் பயன்படுத்தும் சொற்களையே நாம் பயன் படுத்த வேண்டும்.

★ ★ ★

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

2. ''92 ஆம் விதியின் 2 ஆம் பிரிவின் (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகளில் ''இந்தியாவின் வருவாய் ஆதாரங்கள்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''இந்தியாவின் தொகுப்பு நிதியம்'' என்ற சொற்களை சேர்ப்பது.

3. ''92 ஆம் விதியின் 3 ஆம் பிரிவில் ''இந்தியாவின் வருவாய் ஆதாரங்கள்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''இந்தியாவின் தொகுப்பு நிதியம்'' என்ற சொற்களைச் சேர்ப்பது.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 10 1949, பக். 746-48.
2. அதே நூல் பக். 750.

*4. 92 ஆம் விதியின் 3 ஆம் பிரிவின் (ஈ) உட்பிரிவிற்குப் பிறகு பின்வரும் உட்பிரிவைச் சேர்த்துக்கொள்வது:*

*(ஈஈ) கணக்காய்வாளர் மற்றும் இந்தியத் தலைமை தணிக்கையாளர் சம்பந்தமான அல்லது அவர்களுக்கு வழங்கப்படும் சம்பளம், படிகள், ஓய்வூதியம்.''*

9 ஆம் பிரிவைப் பொறுத்தவரையில் இந்தத் திருத்தத்தைக் கொண்டுள்ள 124ஆம் விதி 5 ஆம் பிரிவை அவை ஏற்கெனவே நிறைவேற்றிவிட்டது. தொகுப்பு நிதியத்தில் சார்த்தப்படும் எல்லா இனங்களையும் அரசியல் அமைப்புச் சட்டத்தில் பல்வேறு பகுதிகளில் உள்ளதை, ஒன்றாக ஒரே இடத்திற்குக் கொண்டு வருவதே சிறந்தது.

*(மேலே குறிப்பிடப்பட்டுள்ள டாக்டர் அம்பேத்கரின் நான்கு திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தப்பட்ட 92 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

## விதி 93

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் இப்பொழுது முன்மொழிகிறேன்:

*''93 ஆம் விதியின் (1) பிரிவில் உள்ள 'இந்திய வருவாய் ஆதாரங்கள்', என்ற சொற்களுக்குப் பதிலாக 'தொகுப்பு நிதியம்' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்வது.''*

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட 93 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).*

★ ★ ★

## விதி 94

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 10 1949, பக். 754.
2. அதே நூல் பக். 754-55.

*94 ஆம் விதிக்குப் பதிலாகப் பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்வது: -*

*நிதி ஒதுக்கீடு சட்ட முன்வடிவுகள்*

*'94 (1) மக்களவை, முந்தைய கடைசி விதியின்கீழ், மானியங்கள் வழங்கப்பட்டவுடன்,*

*(அ) மக்களவையால் அவ்வாறு அளிக்கப்பட்ட மானியங் களுக்கும்,*

*(ஆ) நாடாளுமன்றத்தில் முன்பே தாக்கல் செய்யப்பட்ட அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ள தொகைக்கு எவ்விதத் திலும் அதிகப்படாமல் தொகுப்பு நிதியத்தில் சார்த்தப்பட்ட செலவினங்களுக்கும், தேவைப்படும் பணத்தை, தொகுப்பு நிதியிலிருந்து ஒதுக்கீடு செய்ய சட்ட முன்வடிவு ஒன்றை அறிமுகப்படுத்த வேண்டும்.*

*(2) அத்தகைய முன்வடிவு எதற்கும், அளிக்கப்பட்ட மானியத் தொகையில் மாற்றம் செய்யும் அல்லது எந்த இனத்திற்காக கோரப்பட்டதோ அதை மாற்றம் செய்யும் அல்லது இந்தியத் தொகுப்பு நிதியத்தில் சார்த்தப்பட்ட செலவினங்களின் தொகை யில் மாற்றம் செய்யும் திருத்தம் எதையும் ஈரவைகள் எதிலும் கொண்டு வரக்கூடாது என்பதுடன் இந்த விதியின்படி திருத்தங்களை அனுமதிக்கலாமா என்பது குறித்து அவைக்குத் தலைமை தாங்குபவர் முடிவே இறுதியானது.*

*(3) அடுத்துத் தொடர்ந்துவரும் இரண்டு விதிகளின் வழிவகைகளுக்குட் பட்டு, இந்த விதியின் வழிவகைகளின்படி நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி ஒதுக்கீடு செய்யப்பட்டதைத் தவிர வேறு எந்தத் தொகையையும் இந்தியத் தொகுப்பு நிதியத்திலிருந்து எடுக்கக்கூடாது."*

நேற்று நான் விளக்கியபடி, இந்தப் புதிய 94 ஆம் விதி, கவர்னர் - ஜெனரல் அளிக்கும் ஒப்புதல் சான்றிதழ் பட்டியல் குறித்த பழைய விதியிலுள்ள வழிவகைகளுக்கு மாற்றாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, என்னுடைய நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி தெரிவித்த கருத்துகள், என்னுடைய நண்பர் திரு. சந்தானத்தின் விமர்சனங் களுக்குப் போதுமான பதிலாக அமையும் என நினைக்கிறேன். ஆனால் எனது நண்பர் திரு. பாரதி, தமது உரையில் எவ்விதத்திலும் தமது சந்தேகங்கள் தெளிவு பெறவில்லை என்பதைச் சுட்டிக்காட்டி யுள்ளதால் சில விளக்கங்களை அளிப்பது அவசியம் எனக் கருது கிறேன். நிதி ஒதுக்கீட்டு மசோதா என்ற நடைமுறையை தேவையற்ற

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 10 1949, பக். 762-64.

முறையில் நாம் கடன் பெற்றுள்ளோம் என்று என் நண்பர் சந்தானம் கருத்துத் தெரிவித்ததுடன், நம்முடைய தேவைக்குத் தற்போது நடைமுறையிலுள்ள ஒப்புதல் பட்டியலே போதுமெனக் கருதுகிறார். நான் அவரைச் சரியாகப் புரிந்துகொண்டிருந்தால், அவருடைய வாதம் இதுதான்: காமன்ஸ் சபையில், நிதி ஒதுக்கீட்டு மசோதாவுக்கு அவசியம் உள்ளது. ஏனெனில் காமன்ஸ் சபையில் ஒரு தனிக் குழுதான் வழங்கீட்டு மதிப்பீட்டைக் கவனிக்கிறது; காமன்ஸ் சபையல்ல. அவருடைய கருத்துப்படி, மதிப்பீடுகள் அவையின் ஒரு குழுவால் தீர்மானிக்கப்படும் நடைமுறைக்கு, நிதி ஒதுக்கீட்டு மசோதா தேவைப்படும் அம்சமாக கருதப்படுகிறது. தனிப்பட்ட முறையில் காமன்ஸ் சபையில் உள்ள குழுவின் மூலம் மதிப்பீடுகள் தீர்மானிக்கும் நடைமுறைக்கும் நிதி ஒதுக்கீட்டு மசோதாவுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்று நான் நினைக்கிறேன். வழங்கீட்டுக் குழு ஒன்றால் மதிப்பீட்டைத் தீர்மானிக்கும் காமன்ஸ் சபையின் நடைமுறை எப்படித் தோன்றியது என்பதை அவைக்கு விளக்க விரும்புகிறேன். ஒரு காலத்தில் இங்கிலாந்தின் அரசியல் வரலாற்றில் அரசரும், காமன்ஸ் சபையும் எதிரும் புதிருமாக இருந்ததை அவை மறந்திருக்க முடியாது. அரசருக்கும், காமன்ஸ் சபைக்கும் இடையே இன்றைக்கு நிலவும் நம்பிக்கையும், மகிழ்ச்சிகரமான உறவும் அன்றைக்கு இருக்கவில்லை. அரசர் ஒரு கொடுங்கோலராக, அடக்குமுறையாளனாகக் கருதப்பட்டார். காமன்ஸ் சபையின் நம்பிக்கைக்குப் பாத்திரமான, தேர்ந்தெடுக்கப்பட்ட பேரவைத் தலைவராக, காமன்ஸ் சபையின் தலைவர் கருதப்படவில்லை. அரசரின் ஒற்றராகக் கருதப்பட்டார். எனவே, முழு அவையும் அமர்ந்து மதிப்பீடு குறித்து விவாதித்தால், முழு அவையும் அமர்வில் இருக்கும்போது தலைமை தாங்கும் அதிகாரம் பெற்ற பேரவைத்தலைவர் தலைமை தாங்குவார். பெரும்பாலும், மன்னரின் நடவடிக்கைகள், அவரின் ஊதாரித்தனம் மற்றும் கொடுங்கோன்மை தன்மையைக் குறைகூறும் உறுப்பினர்களின் பெயர்களை, அரசரின் ஆதரவு பெற பேரவைத் தலைவர் அரசருக்குக் காட்டிக் கொடுப்பார் என்று காமன்ஸ் சபை உறுப்பினர்களுக்கு, எப்பொழுதுமே ஓர் அச்சம் இருந்து வந்தது. ஆரம்பத்தில் நான் கூறியபடி, அரசரின் கையாளாக இருந்து காமன்ஸ் சபையின் நிகழ்வுகளை அரசரிடம் திரித்துக் கூறும் ஒற்றறாகக் கருதப்பட்ட பேரவைத்தலைவரின் தலையீட்டைத் தவிர்க்க, மதிப்பீடுகளை ஒரு குழு தீர்மானிக்கும் நடைமுறையை உருவாக்கினர். ஏனெனில்

அவைக் குழுக்கள் அமர்வில் இருக்கும்போது அவைகளுக்கு தலைமை தாங்க பேரவைத் தலைவருக்கு உரிமை கிடையாது. இதுதான் வழங்கீட்டுக் குழுவாக காமன்ஸ் சபை அமர்ந்ததின் முக்கிய நோக்கம். நான் கூறியபடி, வழங்கீட்டுக் குழுவாக அவை அமராவிட்டாலும் கூட நிதி ஒதுக்கீட்டு மசோதா நிறைவேற்ற வேண்டிய அவசியம் இருக்கும். எவ்வளவு வரிகள் விதிக்க வேண்டும் என்பதை ஒருகாலத்தில் காமன்ஸ் சபையின் வழிவகைகள் குழு தீர்மானம் செய்தது என்பதை எனது வழக்குறைஞர் நண்பர்களுக்கு ஞாபகமிருக்கும். எனவே இவ்விதத்தில் நீண்டகாலமாக வரி வசூலிக்கப்பட்டு வந்தது. காமன்ஸ் சபையின் வழிவகைகள் குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் அடிப்படையில் மட்டுமே, 1913 வரை வரி வசூலிக்கப்பட்டது என நான் நினைக்கிறேன். 1913ல் இந்தக் கேள்வி நீதிமன்றத்துக்குச் சென்றது. காமன்ஸ் சபையின் வழிவகைகள் குழுவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் அடிப் படையில் மட்டுமே வரிகள் விதிக்கலாமா என்ற கேள்வி நீதிமன்றத் துக்கு எடுத்துச் செல்லப்பட்டது. வெறும் தீர்மானங்களின் அடிப் படையில் காமன்ஸ் சபைக்கு வரி விதிக்க உரிமை இல்லை என்று உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்தது. நாடாளுமன்றம் வரி வசூலிக்க வேண்டுமானால், அது சட்டம் ஒன்றை நிறைவேற்றுவதன் மூலமே முடியும். அதனால் வரி வசூலிக்கும் மாகாணச் சட்டம் ஒன்றை பிரிட்டிஷ் பாராளுமன்றம் நிறைவேற்றியது. காமன்ஸ் சபையின் தீர்மானங்கள் இறுதி அதிகாரமாக ஏற்றுக்கொள்ளப்பட்டு, வழங் கீட்டுக் குழுவில் செலவினங்கள் வாக்களிக்கப்பட்டால், அதுவும் நீதிமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட முடியாததே. ஏனெனில் தீர் மானங்கள் மூலம் செயல்பாடுகள் நடைபெற முடியாது. சட்டங்கள் வழிதான் செயல்கள் நடைபெற முடியும் என்பதே ஏற்றுக்கொள்ளப் பட்ட கொள்கை என்பதில் எனக்கு சந்தேகமில்லை. எனவே என் னுடைய முதல் வேண்டுகோள் இதுதான். ஒரு வகையில், காமன்ஸ் சபை, குழு மூலம் செயல்படும் நடைமுறையின் இணைந்த பகுதியே நிதி ஒதுக்கீட்டு மசோதா என்பதற்கு எவ்வித அடிப்படையும் இல்லை. குடியரசுத் தலைவரின் நிலைமையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டு, அவர் தம் விருப்பப்படி அல்லது தனிப்பட்ட முறையில் செயல்பட முடியாத நிலையில் உள்ளதால். நான் ஏற்கனவே கூறியுள்ளபடி, கவர்னர் ஜெனரலின் உறுதியொப்பமிட்ட ஒப்புதல் சான்றிதழ் பட்டியல் அளிக்கும் நடை முறை ஏன் அவசியம் இல்லை என்பதை கூறியுள்ளேன். நிதி நிலை விஷயங்களில் நாடாளுமன்றத்தின் அதிகாரமே இறுதியானது. நிதி நிலை விஷயங்களில் குடியரசுத் தலைவர் பிரதிநிதித்துவப்படுத்தும்

நிர்வாகத்துறை, இறுதி அதிகாரம் கொண்டதாக இருக்க முடியாது. எனவே இந்த விஷயத்தைப் பற்றி மேலும் எதுவும் கூற வேண்டிய தில்லை.

எனது நண்பர் திரு. சந்தானம், நான் அவரைச் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், புதிய விதி 94ன் (3) ஆம் பிரிவை 95-ஆம் விதி செயலற்றதாக்கி விடுகிறது என்று கூறினார். அவர் 96-ஆம் விதியைக் குறிப்பிட்டாரா இல்லையா என்பது தெரியவில்லை. ஆனால் அவர் நிச்சயமாக 95 ஆம் விதியை சுட்டிக்காட்டினார். சட்டப்படி நிதி ஒதுக்கீடு செய்யப்படாமல், பணம் எதுவும் செலவு செய்யப்பட முடியாது என்று 3 ஆம் பிரிவு கூறுகிறது. புதிய 96 ஆம் விதியில் கூறியபடி கூடுதல், அதிகப்படியான அல்லது மிகை மானியங்கள் மற்றும் புதிய 96 ஆம் விதியில் குறிப்பிடப்பட்டுள்ள முன்னளிப்பு மானியம் அல்லது பற்று மானியம் அல்லது விசேட மானியங்கள் நிதி ஒதுக்கீட்டுச் சட்டமின்றி வாக்களிக்கப்படும் என்ற எண்ணத்தில் அவர் இருப்பதாகத் தெரிகிறது. அவர் அந்த விதியை முழுவது மாகப் படித்ததாகத் தெரியவில்லை. புதிய 95 விதியின் பிரிவு (2) புதிய 96 ஆம் விதியின் கடைசிப் பத்தி மற்றும் பின்கட்டத்தில் கொண்டுவரப்படவுள்ள 248 அ, விதி ஆகியவைகளைப் படித்துப் பார்த்தால், துணை அல்லது கூடுதல் மானியங்கள், அல்லது முன்னளிப்பு மானியம், அல்லது வேறு ஏதாவது பணிக்கான மானி யத்திற்கு, சட்டப்படியான வழிவகையின்றி, தொகுப்பு நிதியி லிருந்து பணம் எடுப்பதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. சில இடங் களில் தொகுப்பு நிதியச் சட்டத்தைப் பற்றிப் பேசுகிறோம். மற்ற இடங்களில் நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தைப் பற்றி பேசுகிறோம். இதனால் பல உறுப்பினர்களின் மனதில் குழப்பம் தோன்றியுள்ளதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. விஷயம் இதுதான். அடிப்படையில் தொகுப்பு நிதியச் சட்டத்திற்கும், நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்திற்கும் எந்த வேறுபாடும் கிடையாது. உரிய முறையில் அமைக்கப்பட்ட அதிகார அமைப்புக்கு தொகுப்பு நிதியிலிருந்து பணம் எடுப்பதற்கு அங்கீகாரம் அளிப்பதே இரண்டின் நோக்கமும். தொகுப்பு நிதிச் சட்டத்திற்கும் நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்திற்கும் இடையேயான வேறுபாடு, தொகுப்பு நிதிச் சட்டத்தில் ஒரு மொத்தத் தொகை குறிப்பிடப்படுகிறது; ஆனால் நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தில் எல்லா விவரக் குறிப்புகளும் அளிக்கப்படுகின்றன. அதாவது செலவினத் தின் முக்கியத் தலைப்புகள், துணைத் தலைப்புகள் மற்றும் பிற இனங்கள் ஆகியவை. நிதி ஒதுக்கீட்டு மசோதாவின் நடைமுறை களை, தொகுப்பு நிதிய மசோதாவை தாக்கல் செய்யும் கட்டத்தில்

கொண்டுவர முடியாது என்பது தெளிவு. ஏனெனில், முக்கியத் தலைப்பு, துணைத் தலைப்புகள், துணைத் தலைப்புகளின் கீழுள்ள எல்லா இனங்களுக்குமான நிதி ஒதுக்கீட்டு நடைமுறை நாடாளு மன்றத்தால் முற்றிலுமாக முடிவு செய்திருக்க முடியாது. எனவே தொகுப்பு நிதியச் சட்டத்தின்படி வாக்களிக்கப்பட்ட தொகையை நிருவாகத்துறை தொகுப்பு நிதியத்திலிருந்து எடுத்துக் கொள்ள முடியும். பிறகு ஒரு கட்டத்தில் அந்தத் தொகை இறுதி நிதி ஒதுக் கீட்டுச் சட்டத்தில் காண்பிக்கப்படும். தொகுப்பு நிதியச் சட்டம் அல்லது நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் ஆகியவைகளின்கீழ் அல்லாமல் வேறு எந்த விதத்திலும் பணம் எடுப்பதற்கு நிருவாகத் துறைக்கு எந்த அதிகாரமும் இல்லை என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் கள் நினைவில் கொண்டால் இந்த விதிமுறைகள் எந்தவித ஒட்டையு மின்றி உறுதியாக இருக்க எல்லாவித முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டது என்பதை உணர்வார்கள்.

*(டாக்டர் அம்பேத்கரின் தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப்பட்ட 94 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக்கொள்ளப் பட்டது.)*

## விதி 95

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

''95 ஆம் விதிக்குப் பதிலாக பின்வரும் விதி சேர்த்துக் கொள்ள வேண்டும்:

துணை, கூடுதல் அல்லது மிகை மானியங்கள் — ''95 (1) குடியரசுத் தலைவர் -

(அ) நடப்பு நிதி ஆண்டிற்கான ஒரு குறிப்பிட்ட பணிக்குச் செலவிட, இந்த அரசியல் சட்டத்தின் 94-ஆம் விதியின் வழிவகைகளின்படி இயற்றப்பட்ட சட்டத்தால், அனுமதிக்கப்பட்ட தொகை அந்த ஆண்டுக்கான பணிக்கு போதுமானதில்லை என்று கண்டால் அல்லது அந்த ஆண்டிற்கான நிதிநிலை அறிக்கையில் திட்டமிடப்படாத புதிய பணிக்கான துணை அல்லது கூடுதல் செலவினங்களுக்கு தேவை எழுமானால், அல்லது

(ஆ) ஒரு நிதி ஆண்டில் ஏதாவது பணிக்கு செலவு செய்யப்பட்ட தொகை அந்தப் பணிக்கு, அந்த ஆண்டில் அனுமதிக்கப்பட்ட தொகைக்கு அதிகமாக இருப்பின், அந்தச் செலவினங்களின் தொகையைக் காட்டும் வேறு ஓர் அறிக்கையை நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும் தாக்கல் செய்யும்படி செய்யவோ, அல்லது நிலைமையைப் பொறுத்து அந்த அதிகப்படியான தொகைக்கு கோரிக்கை ஒன்றை மக்களவையில் தாக்கல் செய்யவோ வேண்டும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 10, 1949, பக். 765.

*(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள் சம்பந்தமாகவும், மானியம் ஏதாவது அளிப்பது சம்பந்தமாகவும், இந்தச் செலவினங்களுக்கு, மானியத்துக்கு இந்தியத் தொகுப்பு நிதியத்திலிருந்து நிதி ஒதுக்கீட்டிற்கு அதிகாரம் வழங்க இயற்றப்படும் சட்டம் சம்பந்தமாகவும் முந்தைய கடைசி மூன்று விதிகளின் வழிவகைகள் எவ்வாறு செயல் திறன் கொண்டதோ, அவ்வாறே அவையின் அறிக்கை மற்றும் செலவினங்கள் அல்லது கோரிக்கை மற்றும் அந்தக் கோரிக்கைக்கான மானியம் அல்லது செலவினங்களுக்கான தொகையைத் தொகுப்பு நிதியிலிருந்து ஒதுக்கீடு செய்ய அனுமதிக்கும் சட்டம் எதுவும் செயல்திறன் கொண்டதாக இருக்கும்.*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, அவை முன் வைக்கப்பட்டுள்ள நிதிநிலை சம்பந்தமான ஏற்பாடுகள் உறுப்பினர்களுக்கு அதிக கவலை அளித்துள்ளதாகத் தெரிகிறது. இதை என்னால் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது. ஒரு விஷயம் எனக்கு ஞாபகத்துக்கு வருகிறது. சர்ச்சிலுடைய தகப்பனார் பாராளுமன்றத்தில் மேல் மன்றத் தலைவராக இருந்தபோது புள்ளிகளுடன் கூடிய தசாம்ச எண்கள் கொண்ட வரவு-செலவுத் திட்டம், அவர் பார்வைக்கு அனுப்பப்பட்டது. அவர் ஒரு கணிதத்துறை மாணவரல்லாததால், புள்ளிகளுடன் கூடிய எண்கள் என்ன என்பதை அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. எனவே அவர் கோப்பில் பின்வருமாறு குறிப்பிட்டார்: இந்த நாசமாய்ப் போன புள்ளிகளுக்கு என்ன பொருள்? நிதித்துறைச் செயலரிடம் விளக்கம் கேட்டார். சர்ச்சிலின் தகப்பனார் போன்ற உயர் பதவியிலுள்ளவர்களே இம்மாதிரியான சிக்கல்களைத் சந்தித்திருக்கும்போது, இங்கே கொடுக்கப்பட்டுள்ள இந்த வழிவகைகளைப் புரிந்து கொள்வதில், அவையின் உறுப்பினர்கள் திணறுவதைக் கண்டு நான் சிறிதும் ஆச்சரியமடையவில்லை. உறுப்பினர்கள் நன்கு தெளிவுபெற இந்த விஷயத்தின் அடிப்படை விதிகளை விளக்க விரும்புகிறேன்.

ஐயா, 92, 93 (2), 94 ஆம் விதிகளில் உள்ள வழிமுறைகளின் விளைவுகளை அவைக்கு எடுத்துரைக்க விரும்புகிறேன். நடப்பு ஆண்டுக்கான நிதி அறிக்கையை நாடாளுமன்றத்தின் முன்வைக்க வேண்டுமென்று 92 ஆம் விதி குடியரசுத் தலைவரின் கடமையாகக் வகுத்துள்ளது. நடப்பு ஆண்டுக்கான நிதி அறிக்கை என்பதைக் கோடிட்டுக் காட்டுகிறேன். இந்த அறிக்கையில் சில பிரிவுகளில் ஏற்படும் செலவீனங்களை இந்திய வருவாய் ஆதாரத்தில் சார்த்தப்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 10, 1949, பக். 768-70.

படுபவைகள், இந்திய வருவாய் ஆதாரத்தில் சார்த்தப்படாதவைகள் என்று பிரித்துக் காண்பிக்க வேண்டும். அது முடிந்த பிறகு, மதிப் பீடுகள் எப்படித் தீர்மானிக்கப்பட வேண்டுமென்பதைக் குறித்த 93 (2) ஆம் விதி செயல்பாட்டுக்கு வருகிறது. கோரிக்கைகளாக இந்த மதிப்பீடுகள் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட பிறகு அது மக்களவையில் வாக்களிக்கப்படுகிறது. அந்த நடைமுறைக்குப் பிறகு 93 ஆம் விதி செயல்படுத்தப்படுகிறது. மக்களவையால் நிறை வேற்றப்பட்ட இந்த மானியங்கள் புதிய விதி 94ன்படி நிதி ஒதுக் கீட்டு சட்டம் 1 என்ற வடிவில் ஒழுங்குபடுத்தப்பட்டு கொண்டு வரப்படும். 92, 93 (2), 93 ஆம் விதிகளின் விளைவுகளை கவனத் தில் கொள்ளுமாறு உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். வேறு எந்த விதியையும் நிறைவேற்றவில்லை என்றால் விளைவு என்னவாகும்? 92, 93 (2), 94 ஆம் விதிகளில் உள்ள ஏற்பாடுகளின் படி அரசியலமைப்புச் சட்ட ரீதியாக வேறு எந்த மதிப்பீடுகளையும் அந்த ஆண்டில் நாடாளுமன்றத்தின் முன் குடியரசுத் தலைவர் கொண்டு வரமுடியாது என்பதே என் முடிவு எனக் கூறுவேன். சட்டப்படி அந்த மதிப்பீடுகளை மட்டும்தான் குடியரசுத் தலைவர் அளிக்க முடியும். அதன் பொருள் என்னவெனில் பற்று மானியங் கள், மற்றும் இதர வகைகளில் குறிப்பிடப்படும் கூடுதல் மானியங்கள், கூடுதல் கோரிக்கைகள் மற்ற மானியங்களின் மீதான மிகை மானி யங்கள் போன்றவைகளை தாக்கல் செய்ய எந்த ஏற்பாடும் இல்லாத தாகிவிடும். நான் குறிப்பிட்டுள்ள கூடுதல் மானியங்கள் மற்றும் மற்ற மானியங்கள், தாக்கல் செய்ய எந்தவித வழிவகைகளும் இல்லையென்றால் நிருவாகத்துறை செயலற்று நின்றுவிடும். எனவே தான், அந்தக் குறிப்பிட்ட ஆண்டுக்கான செலவின மதிப்பீடுகளைக் குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்துக்கு அளிக்க வேண்டுமென் பதற்கான பொதுவான சட்ட வழிமுறைகளை நிறைவேற்றும் அதே வேளையில், மற்ற மதிப்பீட்டுகளுக்கான தேவைகள் தோன்று மானால் அந்த மதிப்பீடுகளையும் தாக்கல் செய்ய சட்டப்படி அவருக்கு அனுமதியளிக்கப்பட்டுள்ளது. எனவேதான் கூடுதல் மற்றும் மிகை மானியங்கள் அளிப்பதற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தில் தெளிவான சட்ட வழிமுறைகள் செய்யப்படவில்லை யென்றால் 92, 93 (2) மற்றும் 94 ஆம் விதிகள் இந்த மாதிரிக் கோரிக்கைகளுக்கான வாய்ப்பைத் தடுத்துவிடும். இந்தக் கூடுதல் கோரிக்கையை அளிப்பதற்கான வழிமுறைகளைச் செய்ய வேண்டி யதன் அவசியம் என்ன என்பதை இப்பொழுது அவை புரிந்திருக்கும் என நினைக்கிறேன்.

மிகை மானியங்கள் குறித்துக் கேள்வி எழுப்பப்பட்டுள்ளது. ஆட்சேபம் இயற்கையானது என்றே நினைக்கிறேன். நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தின்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள தொகைக்கு அதிகமாக நிருவாகத்துறை செலவு செய்ய முடியாது என்று உறுப்பினர்களுக்கு அறிவித்த பிறகு மிகை மானியத்துக்கான கோரிக்கை எப்படி எழக்கூடும்? அதுதான் பிரச்சினை என்று நினைக்கிறேன். அதற்கான பதில் இதுதான். எனது நண்பர் பண்டிட் குன்ஸ்ரு முன்மொழிந்துள்ள திருத்தத்தின் மூலம் வழிவகைகள் செய்துள்ளோம். அதாவது பட்டியல் 1 பக்கம் 27ல், புதிய விதி 248 ஆ மூலம், தொகுப்பு நிதியத்திலிருந்து எதிர்பாரா செலவினங்களுக்கான நிதியத்தை நிறுவுவதற்கான வழிவகை செய்யப்பட்டுள்ளது. தனிப்பட்ட முறையில் இந்த வழிமுறை அவசியம் என்று நான் கருதவில்லை. ஏனெனில் நியூ சவுத் வேல்ஸ் மாகாணத்துக்கும் ஆஸ்திரேலியக் காமன்வெல்த்துக்கும் இடையே நடைபெற்ற வழக்கில் இந்தக் கேள்வி எழுப்பப்பட்டது. வருவாய் முழுவதும் தொகுப்பு நிதியத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்று சட்டம் நிர்ணயித்திருக்கும்போது காமன்வெல்த் ஓர் எதிர்பாராத செலவின நிதியத்தை நிறுவுவதற்கு உரிமை பெற்றுள்ளதா என்பதே அங்கு எழுந்துள்ள கேள்வி. தொகுப்பு நிதியம் நிறுவப்பட்டதன் காரணமாக, நாடாளுமன்ற சட்டமன்றம் அதிலிருந்து வேறு நிதியம் எதையாவது நிறுவுவதைத் தடை செய்ய முடியாது என்ற ஆஸ்திரேலிய காமன்வெல்த் உயர்நீதிமன்றம் தனது பதிலில் கூறியுள்ளது. எனினும் அந்த நிதியத்திலிருந்து அந்த ஆண்டு செலவு செய்யப்படாவிடினும், அது வேறு ஒரு வடிவத்திலான நிதி ஒதுக்கீடுதான். இந்த விஷயம் குறித்து எந்தவித ஐயப்பாடும் தோன்றாமலிருக்க, எதிர்பாரா செலவின நிதியத்தை நிறுவத் தொகுப்பு நிதியம் மூலம் வழிவகை செய்யப்பட்டிருப்பினும் அதன் முடிவு நாடாளுமன்றத்துக்கே விடப்பட்டுள்ளது. புதிய விதி 248 ஆ-ஐ சேர்ப்பதற்கான எனது நண்பர் திரு. பண்டிட் குன்ஸ்ருவின் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளப் போகிறேன். நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தின்படி அளிக்கப்படும் நிதியத்தைத் தவிர நிருவாகத் துறைக்கு தொகுப்பு நிதியமும் மற்றும் சட்டத்தின்படி உருவாக்கப் படும் இதர நிதியங்களும் இருக்கும். நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்தை மீற வேண்டும் என்ற நோக்கம் உண்மையில் இல்லாமலேயே நாடாளுமன்றம் அனுமதித்த தொகைக்கு அதிகமாகச் செலவு செய்துவிட்டு, எதிர்பாராச் செலவின நிதியம் அல்லது வேறு எந்த நிதியத்திலிருந்தாவது பணம் எடுக்க முடியும். எனவே சட்ட மீறல் நிகழ்ந்தாலும், ஒரு நெருக்கடியான கட்டத்தில் இதைச் செய்வது தவிர்க்க முடியாதது என்று நிருவாகத்துறை நினைப்பதுடன் அதை

நிறைவேற்ற அதற்கான நிதியத்திற்கும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இப்பொழுது எழும் கேள்வி இதுதான்: இம்மாதிரியான ஒரு நடவடிக்கை எடுக்கப்படும்போது, இந்த நடவடிக்கையை ஒழுங்குபடுத்த வழிவகைகள் செய்வது அவசியமில்லையா? உண்மையைச் சொல்வதென்றால், மிகை மானியத்தை நிறைவேற்றுவது என்பது நாடாளுமன்றம் நிறைவேற்றும் பொறுப்பிலிருந்து விலக்களிக்கும் சட்டமே. அதாவது தற்காலிகமாக, சட்டத்திற்குட்படாத செயலை நல்லெண்ணத்துடன் நிறைவேற்றிய சில அரசு அதிகாரிகளை குற்றச்சாட்டிலிருந்து விடுவித்தலாகும். இதைத் தவிர வேறு எந்தவித நோக்கமும், மிகை மானிய நடைமுறையில் கிடையாது. காமன்ஸ் சபையின் பொது அலுவல்களுக்கான நடைமுறை என்ற கைப்புத்தகத்திலிருந்து 230 ஆவது பத்தியை உறுப்பினர்களுக்குப் படித்துக் காட்ட விரும்புகிறேன். 230 ஆம் பத்தி கூறுவதாவது:

> ''பணிகள் எதற்காவது, நிதி ஆண்டு எதிலாவது அந்தப் பணிக்கு அந்த ஆண்டிற்கு அனுமதிக்கப்பட்ட தொகையை விட அதிகமான தொகை, எதிர்பாரா சிவில் செலவினங்கள் நிதியம், கருவூல நிதியம், வருவாய் ஆதாரத்திலிருந்து அதிகப்படியாகப் பெறப்பட்ட தொகை ஆகியவைகளிலிருந்து முன்பணம் பெறப்பட்டு செலவழிக்கப்பட்டிருந்தால், மிகை மானியம் அவசியமாகிறது."

எனவே, இதில் எந்த ஆச்சரியமும் இல்லை. இதில் உள்ள ஒரே விஷயம் என்னவென்றால், கூடுதல் மதிப்பீடு உள்ளபோது, அதிகப்படியான செலவு செய்யப்படாமலேயே அனுமதி கோரப்படுகிறது. மிகை மானியத்தைப் பொறுத்தவரையில் அதிகப்படியான செலவு ஏற்கனவே செய்யப்பட்டப் பிறகு, அதிகப்படியாகச் செலவு செய்யப்பட்ட தொகைக்கு நிருவாக அதிகாரி நாடாளுமன்றத்தில் அனுமதி கோருகிறார். எனவே இதில் எந்த ஆட்சேபனையும் இருக்க முடியாது. ஆட்சேபனை இல்லாமல் இருப்பதுடன், இது அவசியமும் ஆகும். இவ்வாறான நடைமுறை இல்லையென்றால், நிதி ஒதுக்கீட்டு சட்டத்தின்படி, அனுமதித்த தொகைக்கு அதிகமாகச் செலவு செய்த அதிகாரி குற்றவாளி என்று கருதப்பட்டு தண்டிக்கப்படுவார். இந்த மிகைமானிய நடைமுறையை, நீங்கள் நிறைவேற்ற வேண்டும்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** புதிய விதி 95 (2) கூறியுள்ளபடி சட்டத்தின் விதிகளால் முந்தைய மூன்று விதிகளும் பாதிக்கப்படுமா? ஒவ்வொரு கூடுதல் கோரிக்கையையும், கூடுதல் நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் தொடரவேண்டும் என்பதுதான் அதன் பொருளா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். அதுதான் நோக்கம்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** ஆண்டு முழுவதற்குமான ஒதுக்கீடாக அது இருக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கூடுதல் ஒதுக்கீடு இருக்கும். காமன்ஸ் சபையில் இது நடைபெறுகிறது.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** ஐயா, என்னுடைய திருத்தம் என்னவாயிற்று?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னை மன்னிக்கவும். பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா நிதியாண்டை மாற்ற வேண்டுமென்று தெரிவித்துள்ளார். நல்லது அவருடைய நோக்கம் நேர்மையானதாக இல்லை என்று நான் சந்தேகப்படுகிறேன் என்பதைத் தவிர சொல்வதற்கு ஒன்றுமில்லை. தம் விருப்பப்படி கதைகளைத் தொடர்ந்து அவிழ்த்துவிட அவர் ஒரு குளிர்காலக் கூட்டத் தொடர் வேண்டுமென்று விரும்புகிறார் என நினைக்கிறேன். அவர் ஒரு நீண்ட கூட்டத் தொடரை விரும்பினால், நாம் இப்பொழுது செய்வது போல கோடைகால மாதங்களில் அவர் அமர வேண்டும்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப்பட்ட 95 ஆம் விதி முன்பு குறிப்பிட்டது போல, அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 96

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா நான் முன்மொழிகிறேன்:

"96 ஆம் விதிக்குப் பதிலாக பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்வது:

| | |
|---|---|
| முன்னளிப்பு மானியம், முன்பற்று மானியம், சிறப்பு மானியங்களின் மீதான வாக்கெடுப்பு | 96 (1) இந்த அத்தியாயத்தில் மேலே குறிப்பிட்டுள்ள விதிமுறைகளில் குறிப்பிட்டிருப்பது எவ்வாராயினும் |

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 10, 1949, பக். 711-13.

*(அ) இந்த மானியத்திற்கு வாக்களிப்பு நடத்த இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 93 ஆவது விதியில் வகுக்கப்பட்டுள்ள நடைமுறைகள் முடிவடையாமல் இருக்கும் நிலையில், இந்தச் செலவினங்கள் சம்பந்தமாக அரசியல் அமைப்புச் சட்டப்படியான 94 விதிகளின்படி சட்டம் நிறைவேற்றப்படாத நிலையில், நிதியாண்டின் ஒரு பகுதிக்கு மதிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள் சம்பந்தமாக, முன்னதாக மானியம் ஏதாவது அளிப்பதற்கும்,*

*(ஆ) பணியின் பரிமாணம் அல்லது திட்டவட்டமற்ற நிலையினால் கோரிக்கை ஒன்றை ஆண்டு நிதிநிலை அறிக்கையில் வழக்கமாக கொடுக்கப்படும் விவரமான தகவல்களுடன் அளிக்க முடியாதபோது, எதிர்பாராத அக்கோரிக்கையை நிறைவேற்ற இந்திய வருவாய் ஆதாரங்களின் மீது மானியம் ஏதாவது அளிப்பதற்கும்,*

*(இ) நிதி ஆண்டு ஒன்றின் நடப்புப் பணிகளின் பகுதியாக அமையாத சிறப்பு மானியம் ஏதாவது அளிப்பதற்கும்,*

*மேற்குறிப்பிட்ட மானியங்களுக்காக இந்தியத் தொகுப்பு நிதியிலிருந்து பணம் எடுப்பதற்குச் சட்டப்படி அதிகாரம் அளிப்பதற்கும், மக்களவைக்கு அதிகாரம் உள்ளது.*

*(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள் எதற்காவது மானியம் அளிப்பது சம்பந்தமாகவும், இந்தச் செலவினங்களுக்காக இந்தியத் தொகுப்பு நிதியத்திலிருந்து நிதி ஒதுக்கீட்டிற்கு அதிகாரம் வழங்க இயற்றப்படும் சட்டம் சம்பந்தமாகவும் இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 93 மற்றும் 94 ஆவது விதிகளின் வழிவகைகள் எவ்வாறு செயல்திறன் கொண்டதோ அவ்வாறு இந்த விதியின் பிரிவு (1)ன்படி மானியம் வழங்குவதன் மீதும் அந்தப் பிரிவின்படி இயற்றப்படும் சட்டத்தின் மீதும் செயல்திறன் கொண்டதாக இருக்கும்.*

***மாண்புமிகு திரு. கே. சந்தானம்:*** *ஐயா, ஏற்கெனவே ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவான கொள்கையை திரும்பவும் ஆரம்பத்திலிருந்து விவாதிக்க விரும்பவில்லை. ஆனால் இந்த விதி வரைவு செய்யப்பட்ட விதம் குறைபாடுள்ளதாக உள்ளது.*

*உதாரணமாக பிரிவு (1)ல் அது கூறுகிறது: மக்கள் அவைக்கு அதிகாரம் இருக்கும். இதைத் தொடர்ந்து உட்பிரிவு (இ)க்கு பிறகு "... சட்டத்தின் மூலம் அதிகாரம் வழங்க" என்றுள்ளது. அரசியல் அமைப்புச் சட்டப்படி மக்களவை சட்டத்தின் மூலம் அதிகாரம் வழங்க முடியாது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, உட்பிரிவு (இ)க்கு பிறகு 3 வரிகளை வரைவுக்குழு மீண்டும் மாற்றியமைக்கும் உரிமை கொண்டுள்ளது என்பதைக் கூறியாக வேண்டும்.*

*மாண்புமிகு திரு. கே. சந்தானம்:* இதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை, ஐயா. தவறு என்று வெளிப்படையாகத் தெரியும் அரசியல் சாசனத்திற்கு புறம்பான ஒன்றை அவையில் நாம் நிறைவேற்றி வரைவுக்குழுவுக்கு அனுப்புகிறோம். நாம் நிறை வேற்றும் விதிமுறைகளில் ஏதாவது தவறுகள் அல்லது விடுதல் இருந்தாலன்றி வரைவுக்குழு அதை தன் விருப்பப்படி திருத்து வதற்கு விட்டுவிடலாம் என்று நான் நினைக்கவில்லை. முற்றிலும் ஒரு புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தை நமக்கு அளிப்பார்கள். அதை மீண்டும் ஒவ்வொரு விதியாக பரிசீலிக்கும் இன்னலுக்கு நாம் ஆளாகிவிடக்கூடாது. தெளிவாகத் தவறு என்று தெரியும் ஒரு பிரிவை இந்த அவை நிறைவேற்றுவது எனக்கு நியாயமாகப் பட வில்லை. நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் உள்ளது என்று அவர் கூற வேண்டும். அல்லது....

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இப்பொழுதே அந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கிறேன். நீங்கள் முன்மொழியலாம். சட்டத்தின் மூலம் அனுமதிக்க நாடாளு மன்றத்துக்கு அதிகாரம் உண்டு.

*மாண்புமிகு திரு. கே. சந்தானம்:* ஐயா, அந்த மானியங்கள் வழங்கப்பட்ட நோக்கங்களுக்காக இந்தியத் தொகுப்பு நிதியத்தி லிருந்து பணம் எடுப்பதற்கு சட்டத்தின் மூலம் அனுமதியளிக்கும் அதிகாரம் நாடாளுமன்றத்துக்கு உண்டு என்று அந்தத் திருத்தம் இருக்கும்.

பிரிவு (2)ஐ பொறுத்தவரையில் அது கூறுகிறது: ''மானியம் எதுவும் அளிப்பது சம்பந்தமாக விதி 93 மற்றும் 94ன் வழிவகைகள் செயல்திறம் பெற்றவை. இதற்காக நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் கொண்டு வரப்பட வேண்டும் என்பது இதன் பொருளா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். முன்குறிப்பிட்ட விதியில் குறிப்பிடப்பட் டுள்ள சார்த்தப்பட்ட மற்றும் சார்த்தப்படாத, வாக்களிக்கப்பட வேண்டிய மற்றும் வாக்களிக்கத் தேவையில்லாத எல்லாப் பிரிவு களையும் இந்த நிதி ஒதுக்கீட்டு மசோதா காண்பிக்குமா? அதுதான் அதன் கருத்து என்றால்...

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அப்படி இருக்க முடியாது.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** விதி எண் 93 கூறுவது...

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** நிதி ஒதுக்கீட்டுச் சட்டத்திற்கு முன்பு அடிப்படை விவரங்களைக் கொண்டுள்ள தொகுப்பு நிதிய மசோதா எண் 1 கொண்டு வரப்படும் என்று கூறினால் மாண்புமிகு உறுப்பினர் புரிந்துகொள்ள உதவியாக இருக்கும் என நினைக் கிறேன்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** தொகுப்பு நிதிய மசோதா எண் 1 சார்த்தப்பட்ட மற்றும் சார்த்தப்படாத, வாக்களிக்கப்பட்ட மற்றும் வாக்களிக்கத் தேவையில்லாத தொகைகளைக் கொண் டிருக்குமா அல்லது வாக்களிக்க வேண்டிய பகுதியை மட்டும் உள் ளடக்கியிருக்குமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சார்த்தப்பட்டப் பகுதி இறுதி நிதி ஒதுக்கீடு சட்டத்தில் மட்டும் வருகிறது. வருவாய் ஆதாரத்தில் சார்த்தப்படும் பணிகளிலிருந்து வேறுபடுத்திக்காட்ட சப்ளை பணிகள் என்று தொழில் முறையில் காமன்ஸ் சபையில் அழைக்கப்படுவதுதான் இந்த வாக்களிப்பு மான்யம். (கணக்கு)

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** 93 மற்றும் 94 ஆம் விதி களின் வழிமுறைகள் பின்பற்றப்பட வேண்டும் என்று இந்த விதி கூறுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிதி ஒதுக் கீட்டுச் சட்டத்தின் மீதான வாக்களிப்புதான் 93 மற்றும் 94 விதிகளின் பொருள்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** சார்த்தப்படும் பகுதி காண் பிக்கப்படும் என்று 93 ஆம் விதியின் முதல் பகுதி கூறுகிறது. வாக் களிக்கப்பட வேண்டிய பகுதி வாக்களிக்க விடப்படும் என்று இரண் டாவது பகுதி கூறுகிறது. வாக்களிக்க வேண்டிய மானியம் (கணக்கு) இந்த இரண்டு பகுதிகளுக்கும் பொருந்துமா என்பதை நான் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்திய வருவாய் ஆதாரத்தில் சார்த்தப்படும் பணிகளுக்கு அவையின் வாக்களிப்பு அவசியம் இல்லை என்று விதி எண் 93 கூறுகிறது.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** ஆனால் அவை நிதி ஒதுக்கீடுச் சட்டத்தில் காட்டப்பட வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிறைவேற்றப்பட்ட பிறகு இதைத்தான் தொகுப்பு நிதியச் சட்டம் 1 என்கிறோம்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** 94 ஆம் விதிக்கும் தொகுப்பு நிதியச்சட்டத்திற்கும் சம்பந்தமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுவும் நிதி ஒதுக்கீட்டுச் சட்டந்தான். நான் முன்பு கூறியது போல் எந்தவித வேறுபாடும் இல்லை. நிதி ஒதுக்கீட்டுச் சட்டம் விரிவான விவரங்களைக் கொடுக்கிறது. ஆனால் தொகுப்பு நிதியச் சட்டம் விவரங்களைக் கொடுப்பதில்லை.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** அந்த விதியின் திட்டவட்டமான வழிமுறைகளை டாக்டர் அம்பேத்கரின் விளக்கங்கள் புறக் கணித்துவிட முடியாது. அந்த விதி இப்பொழுதுள்ள நிலையில் 93 மற்றும் 94 விதிகளின் வழிமுறைகள் மற்ற சட்டத்திற்குப் பொருந் தியதைப் போல் தொகுப்பு நிதியச் சட்டத்திற்கும் பொருந்தும். எனவே நிதி அறிக்கையின் நடைமுறைகள் முழுவதும் திரும்பவும் நிறைவேற்றப்பட வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பிரிவு (2)ஐ மதிப்பிற்குரிய உறுப்பினர் நன்கு படித்துப் பார்த்தால் எந்தப் பிரிவை அது விளக்குகிறது என்பதை அவர் தெரிந்து கொள்வார். இந்த அரசியல் சாசனத்தின் 93 மற்றும் 92 விதிகள் பிரிவு (1)ன்படி அளிக்கப் படும் எந்த மானியத்தையும் பாதிக்கும்.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** மேலும் படியுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் கூறியபடி வருவாயில் சார்த்தப்பட்ட பணிகளைப் பொறுத்தவரையில் மானியம் என்ற கேள்வி எழுவதில்லை.

★ ★ ★

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 10, 1949, பக். 711-13.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மேலும் எதையும் சொல்ல வேண்டுமென்ற அவசியம் இருப்பதாக நான் நினைக்க வில்லை.

''பிரிவு (1)ன் உட்பிரிவில் பின்வரும் சொற்களை 'மற்றும்' என்ற சொல் லுக்குப் பிறகும் 'க்கு' என்ற சொல்லுக்கு முன்பும் சேர்க்க வேண்டும்.

''நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் இருக்கும்...''

*(டாக்டர் அம்பேத்கரின் முந்தைய தீர்மானத்துடன் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட விதி 96 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 97

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதில் ஒன்றும் தேவைப்படுவதாக நான் கருதவில்லை. ஐயா, உங்கள் அனுமதி யுடன் நானே ஒரு திருத்தத்தைக் கொண்டுவர விரும்புகிறேன். பின்வருமாறு முன்மொழிகிறேன்.

''திருத்தங்கள் பட்டியலில் திருத்தம் எண் 1723 சம்பந்தமாக விதி 97ன் பிரிவு (3)ல் உள்ள இந்தியாவின் 'வருவாய் ஆதாரங்கள்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதியம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்:** பிரிவின் இறுதியில் உள்ள சொற்கள் தேவையின்றி திரும்பவும் கொடுக்கப்பட்டுள்ளன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அப்படி நினைக்கவில்லை.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** நான் இப்பொழுது அம்பேத்கரின் திருத்தத்தை வாக்களிப்புக்கு விடுகிறேன். விஷயம் இதுதான்:

''திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 1723 சம்பந்தமாக விதி 97ன் பிரிவு (3)ல் உள்ள 'இந்தியாவின் வருவாய் ஆதாரங்கள்' என்ற சொற் களுக்குப் பதிலாக 'இந்தியாவின் தொகுப்பு நிதியம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்."

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 774.
2. அதே நூல், பக். 777-78.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட விதி எண் 97 அரசியல் அமைப்புச் சட்டத்தில் இணைக்கப்பட்டது.

★ ★ ★

## விதி 98

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. ஜஸ்பத் ராய் கபூரின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாது என்பதை மட்டும் சொல்லிக் கொள்கிறேன். தேவைப்படும் வழிவகைகளை விதிகள் மூலம் வகுப்பதற்கு பொருத்தமாக இந்த விஷயம் வளைந்து கொடுக்கும் முறையில் இருப்பதே சிறந்தது என்று கருதுகிறேன். திரு. காமத்தின் திருத்தத்தைப் பொறுத்தவரையில் அது என் சிந்தனையைக் கவர்ந்துள்ளது. ஆனால் இந்த நேரத்தில் நான் எந்த உறுதியையும் அளிக்க முடியாது. ஆனால் வரைவுக்குழு இந்த விஷயத்தைக் கருத்தில் எடுத்துக் கொள்ளும் என்று நான் அவருக்கு உறுதியளிக்க முடியும்.

**திரு. அவைத் தலைவர்:** எனவே திரு. காமத்தின் திருத்தத்தை வாக்களிப்புக்கு விடவில்லை. வரைவுக்குழுவின் தீர்மானத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும் ஒரு வரைவுத் திருத்தமாக அதை எடுத்துக் கொள்கிறேன்.

திரு. ஜஸ்பத் ராய் கபூரின் திருத்தம் 15ஐ பொறுத்தவரையில் ஒரு விஷயத்தை டாக்டர் அம்பேத்கரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். விதி எண் 98ன் பிரிவு (2)ல்

> ''டொமினியன் இந்தியாவின் சட்டமன்றம் சம்பந்தமாக'' என்ற சொற்கள் உள்ளன.

மற்றொரு இடத்தில் ''இந்திய அரசியல் நிர்ணய சபை'' என்ற சொற்றொடர் காணப்படுகிறது. இங்கும்கூட அதே சொற்றொடரையே டாக்டர் அம்பேத்கர் விரும்புவார் என நான் கருதலாமா?

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 780-81.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்.

**திரு. அவைத் தலைவர்:** பிரிவு (2)ல் டொமினியன் இந்தியாவின் சட்டமன்றம் என்ற சொற்றொடர் வருவதைக் குறிப்பிட்டேன். ஒருவேளை ''இந்திய அரசியல் நிர்ணயசபை'' என்ற சொற்றொடர் சிறப்பாக இருக்குமல்லவா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சொல்லப்போனால் இப்பொழுது, அரசியல் நிர்ணயசபை அரசியல் நிர்ணயசபையாக அமர்வது, அரசியல் நிர்ணயசபை சட்டமன்றமாக அமர்வது என நாம் இரண்டு பேரவைகளைக் கொண்டுள்ளோம். இரண்டு தரப்புகளிலும் விதிகள் உள்ளன. இந்திய டொமினியன் என்ற சொற்களை வைத்துக் கொள்வது விரும்பத்தக்கது என்று நான் நினைக்கிறேன். அப்பொழுதுதான் அந்தச் சூழலில் வழக்கத்தில் இருக்கும் விதிகளை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** இந்திய டொமினியன் சட்டமன்றம் என்ற சொற்றொடருக்குப் பதிலாக இந்திய அரசியல் நிர்ணய சபை என்ற சொற்றொடரை வைத்துக் கொண்டு அடைப்புக் குறிக்குள் (சட்டமன்றம்) என்ற சொல்லைப் போடலாம். அரசியல் நிர்ணயசபை சட்டமன்றமாகச் செயல்படும்போது அப்படித்தான் குறிப்பிடுகிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தியச் சுதந்திரச் சட்டத்தின் மொழியையே நாம் பயன்படுத்த வேண்டும். அந்தச் சட்டத்தின் கலைச்சொற்களையே நாம் பயன்படுத்த வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** அது எந்தச் சிக்கலையும் அளிக்காது என்றால் எனக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை. திரு. ஜஸ்பத் ராய் கபூர் கொண்டுவந்த திருத்தத்தை வாக்களிப்புக்கு விடுகிறேன்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** நான் அதைத் திரும்பப் பெறுவதற்கு அவையின் அனுமதியைக் கோருகிறேன். தோற்றுப் போகும் தீர்மானமாக அதன் விதி அமைய வேண்டாம்.

**திரு. அவைத் தலைவர்:** அவருடைய திருத்தத்தை திரும்பப் பெற அவை அனுமதிக்குமானால் அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

*(அவையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெறப்பட்டது. விதி 98 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

## விதி 98-அ

[1]**திரு. அவைத் தலைவர்:** ஒரு புதிய விதியைச் சேர்க்க வேண்டு மென்ற திருத்தத்திற்கான முன்னறிவிப்பை டாக்டர் அம்பேத்கர் அளித்துள்ளார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:-

*''விதி எண் 98க்குப் பிறகு பின்வரும் புதிய விதியைச் சேர்த்துக் கொள்வது.*

*நாடாளுமன்றத்தில் நிதி அலுவல் பற்றிய நெறிமுறையை சட்டத்தினால் ஒழுங்கு படுத்துதல்.*

*'98அ. நாடாளுமன்றம் நிதி அலுவல்களை உரிய காலத்தில் முடிக்கும் பொருட்டு நிதி சம்பந்தமாக எந்த விஷயங்கள் பற்றியும், இந்தியத் தொகுப்பு நிதியத்திலிருந்து நிதி ஒதுக்கீட்டிற்கான மசோதா சம்பந்தமாகவும், ஒவ்வொரு நாடாளுமன்ற அவையின் அலுவல் முறைகளையும், நடைமுறைகளையும் சட்டத்தின் மூலம் ஒழுங்குபடுத்தலாம். மேலும் இவ்வாறு இயற்றப்பட்டு சட்டத்தின் விதிமுறைகள் ஏதாவது கடைசி முந்தைய விதியின் அடிப்படையில் நாடாளுமன்றத்தினால் நிறைவேற்றப்பட்ட சட்டம், அல்லது அந்த விதியின் (2) பிரிவின் படி நாடாளுமன்றம் தொடர்பான நிலை ஆணை அல்லது விதிக்கு முரணாக இருந்தால் அவ்வாறு முரணாக இருக்கும் அளவுக்கு அந்த விதிமுறைகளே செல்லத்தகுந்ததாக இருக்கும்.''*

**திரு. அவைத் தலைவர்:** இந்தத் தீர்மானத்தைக் குறித்து எந்த உறுப்பினரும் பேச விருப்பம் தெரிவிக்காததால் இந்தத் தீர்மானத்தை வாக்களிப்புக்கு விடுகிறேன்.

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

விதி எண் 98 அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 781.

## விதி 173

[1]*திரு அவைத் தலைவர்:* ...அடுத்த திருத்தம் எண் 2464ஐ டாக்டர் அம்பேத்கர் முன்மொழியலாம்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, நான் முன் மொழிகிறேன்:-

> ''173 ஆம் விதியில் (4) ஆம் பிரிவில், 'நிறைவேற்றப்பட்டதாகக் கருதப் படும்' என்ற சொற்களுக்குப் பிறகு, 'இரண்டு அவைகளிலும் அது நிறை வேற்றப்பட்ட வடிவத்தில்', என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.''

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

திருத்தம் செய்யப்பட்ட விதி 173, அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 174

[2]***திரு. அவைத் தலைவர்:*** டாக்டர் அம்பேத்கர், பட்டியல் 1ல் எண் 69 மற்றும் எண் 70 திருத்தங்கள் உங்கள் பெயரில் உள்ளன. ஏற்கெனவே நாம் ஏற்றுக் கொண்டுள்ள வழிவகைகளை, இந்த விதியிலும் கொண்டு வருவதற்குத்தான் இந்த திருத்தங்கள்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா நான் முன் மொழிகிறேன்:-

> ''விதி 174ன் பிரிவு (1)ன் (இ) மற்றும் (ஈ) உட்பிரிவுகளுக்கு பதிலாக பின்வருவனவற்றைச் சேர்க்க வேண்டும்:
>
> (இ) மாநிலத்தின் தொகுப்பு நிதியம் மற்றும் எதிர்பாராச் செலவினங்களுக் கான நிதியம் ஆகியவற்றை நிர்வகிப்பது, இந்த நிதியங்கள் எதிலாவது பணம் செலுத்துவது அல்லது பணம் எடுப்பது (ஈ) மாநில தொகுப்பு நிதியத்திலிருந்து பணம் ஒதுக்கீடு செய்தல்.
>
> மேலும் -
>
> ''விதி 174ன் 1ஆம் பிரிவில் (ஈ) மற்றும் (உ) உட்பிரிவுகளில் 'மாநிலத்தின் வருவாய் ஆதாரம்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'மாநிலத்தின் தொகுப்பு நிதியம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 782.
2. அதே நூல், பக். 782-83.

[1]**திரு. அவைத் தலைவர்:** இந்த விதிக்கு வேறு திருத்தங்கள் இல்லை. அதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** இந்த விஷயத்தைக் குறித்து டாக்டர் அம்பேத்கர் ஏதாவது சொல்ல விரும்புகிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியலமைப்புச் சட்டத்தை மறு ஆய்வு செய்யும்போது இந்த விஷயத்தைக் கவனிப்பேன் என்பதை மட்டும் கூறிக் கொள்கிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)*

★ ★ ★

[2]**திரு. எச்.வி. காமத்:** இந்த விஷயத்தைக் கவனிப்பதாக டாக்டர் அம்பேத்கர் உறுதி அளித்துள்ளதால் அவருடைய முடிவுக்கே விட்டுவிடுகிறேன். பிந்தைய கட்டத்தில் அவர் அதை கவனத்தில் எடுத்துக் கொள்வார் என்று நினைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இரண்டு திருத்தங்களையுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரே ஒரு திருத்தந் தான் உள்ளது.

**திரு. எச்.வி. காமத்:** எந்தத் திருத்தத்தை அவர் கவனிப்பதாக உறுதி அளித்திருக்கிறார் என்பதைத் தெரிந்து கொள்ளலாமா? இதனை அவர் தெளிவுபடுத்துவார் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 2466.

**திரு. அவைத் தலைவர்:** மிக்க நல்லது. அவற்றை நான் வாக்கெடுப்புக்கு விடப்போவதில்லை.

திருத்தப்பட்ட விதி 174, அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 783.
2. அதே நூல், பக். 784.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 175ஐ ஒத்திவைக்கதான் விரும்புகிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** வரைவுக் குழுவில் பரிசீலிக் கப்படும் சில பிரச்சினைகளை 175 மற்றும் 176 ஆம் விதிகள் பாதிப் பதால் அவைகளை ஒத்திவைக்கலாம். 177 ஆம் விதியை எடுத்துக் கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியென்றால் 177 ஆம் விதியை எடுத்துக் கொள்வோம்.

## விதி 177

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> விதி 177ன் பிரிவு (2)ன், (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகளில் ''மாநிலத் தின் வருவாய் ஆதாரங்கள்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''மாநிலத்தின் தொகுப்பு நிதியம்'' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

ஐயா, நான் இதையும் முன்மொழிகிறேன்:

> ''விதி 177ன் பிரிவு, (3)ல் ''மாநிலங்கள் ஒவ்வொன்றின் வருவாய் ஆதா ரங்கள்'', என்ற சொற்களுக்குப் பதிலாக ஒவ்வொரு ''மாநிலத்தின் தொகுப்பு நிதியம்'' என்ற சொற்களைச்சேர்க்க வேண்டும்.

ஐயா, நான் இதையும் முன்மொழிகிறேன்:

> ''விதி 177ன் பிரிவு (3)ல் உட்பிரிவு (ஆ)வில் 'ஊதியம்' என்ற சொல்லுக்குப் பதிலாகச் 'சம்பளம்' என்ற சொல்லைச் சேர்க்க வேண்டும்.''

(டாக்டர் அம்பேத்கரின் எல்லா திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.)

## விதி 178

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''விதி 178ன் பிரிவு (1)ல் 'ஒரு மாநிலத்தின் வருவாய் ஆதாரங்கள்', என்ற சொற்களுக்குப் பதிலாக 'ஒரு மாநிலத்தின் தொகுப்பு நிதியம்', என்ற சொற்களைச் சேர்க்கவும்.''

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 784.
2. அதே நூல், பக். 784
3. அதே நூல், பக். 785-86.

(திருத்தம் எண் 2490 முன்மொழியப்படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** விஷயம் என்னவென்றால்,

''விதி 178ன் பிரிவு (1)ல் ''ஒரு மாநிலத்தின் வருவாய் ஆதாரங்கள்' என்பதற்குப் பதிலாக 'ஒரு மாநிலத்தின் தொகுப்பு நிதியம்', என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத்தலைவர்:** விஷயம் என்னவென்றால்,

''திருத்தம் செய்யப்பட்ட 178 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தின் பகுதியாகிறது.''

திருத்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தப்பட்ட 178 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 179

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:-

179 ஆம் விதிக்குப் பதிலாக பின்வருவனவற்றை சேர்த்துக் கொள்ள வேண்டும்:

நிதி ஒதுக்கீட்டு மசோதாக்கள்

'179 (1) கடைசிக்கு முந்திய விதியின்படி, சட்டப்பேரவை மானியங்கள் அளித்த பிறகு மாநிலத்தின் தொகுப்பு நிதியத்திலிருந்து தேவையான தொகையை

(அ) சட்டப்பேரவை வழங்கிய மானியத்திற்கும், மற்றும்

(ஆ) சட்டப் பேரவை அல்லது சட்டப் பேரவைகளில் முன்பு அளிக்கப்பட்ட அறிக்கையில் காட்டப்பட்ட தொகையை விட எந்த விதத்திலும் அதிகமாகாத, மாநிலத்தின் தொகுப்பு நிதியத்தில் சார்த்தப்படும் செலவினங்களுக்கும், ஒதுக்கீடு செய்ய மசோதா ஒன்று கொண்டுவர வேண்டும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 785-86

*(2) சட்டப்பேரவையிலோ அல்லது மாநிலத்தின் இரு அவைகளில் ஏதாவது ஒன்றிலோ, வழங்கப்பட்ட மானியத் தொகையையோ, அல்லது வழங்கப்பட்ட இனத்தையோ அல்லது மாநிலத்தின் தொகுப்பு நிதியத்தில் சார்த்தப்படும் செலவினங்களின் தொகையையோ மாற்றம் செய்ய எவ்விதத் திருத்தமும் இப்படிப்பட்ட மசோதாக்களுக்கு கொண்டுவர முடியாது. இந்தப் பிரிவின்படி அனுமதிக்கக்கூடிய திருத்தங்கள் சம்பந்தமாக தலைமை தாங்கு பவரின் முடிவே இறுதியானது.*

*(3) அடுத்துத் தொடர்ந்துவரும் இரண்டு விதிகட்குட்பட்டு, இந்த விதியின் கீழ் நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி ஒதுக்கீடு செய்யப்பட்டாலன்றி மாநிலத் தின் தொகுப்பு நிதியத்திலிருந்து எவ்விதத் தொகையும் எடுக்கக்கூடாது.*

***திரு. அவைத் தலைவர்:*** இந்த விதிக்கு வேறு எந்தவிதத் திருத் தமும் இல்லை.

***(தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட 179 ஆம் விதி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

★ ★ ★

## *விதி 180*

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

*''விதி 180க்குப் பதிலாக பின்வரும் விதி சேர்க்கப்பட வேண்டும்:-*

*''180 (1) ஆளுநர் -*

*துணை கூடுதல் அல்லது மிகை மானியங்கள்*

*(அ) இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 179 ஆவது விதிப்படி இயற்றப்பட்ட சட்டத்தின்படி ஒரு குறிப்பிட்ட பணிக்கு நடப்பு நிதி ஆண்டிற்கு அனுமதிக்கப்பட்ட தொகை அந்தப் பணிக்கு, அந்த ஆண்டிற்கு போதுமானதில்லை என்று கண்டால் அல்லது அந்த ஆண்டு நிதி அறிக்கையில் எதிர்பாராத ஏதாவது பணிக்கு அந்த நிதி ஆண்டில் நிறைவு செய்யும் செலவுக்கு அல்லது கூடுதல் செலவுக்கு அவசியம் நேர்ந்தால், அல்லது*

*(ஆ) நிதி ஆண்டு ஒன்றில், ஒரு பணிக்கு அந்த ஆண்டிற்கு ஒதுக்கப்பட்ட தொகையை விட அதிகம் செலவிடப்பட்டால், அந்தச் செலவீட்டுத் தொகை யின் மதிப்பீட்டைக் காட்டும் வேறொரு அறிக்கையை அல்லது நிலைமைக் கேற்ப அந்த கூடுதல் தொகைக்கான கோரிக்கையை அந்த மாநிலத்தின் சட்டப் பேரவையில் அல்லது சட்டமன்றங்களில் முன்வைக்க வேண்டும்.*

---

*1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10, 1949, பக். 786-87*

*(2) ஆண்டு நிதி நிலை அறிக்கை அதில் கூறப்பட்டுள்ள செலவினங்கள் அல்லது ஒரு மானிய கோரிக்கை அந்தச் செலவினங்களை அல்லது மானியத் திற்காக பணம் ஒதுக்கீடு செய்ய அதிகாரம் வழங்க இயற்றப்படும் சட்டம் ஆகியவைகள் சம்பந்தமாக கடைசி மூன்று விதிகளின் வழிவகைகள் எவ்வாறு செயல்திறன் கொண்டனவோ அவ்விதமே இவ்விதி, அறிக்கை மற்றும் செலவினங்கள், கோரிக்கை மற்றும் அச்செலவினங்கள் அல்லது அக்கோரிக்கை பற்றிய மானியத்திற்காக மாநிலத் தொகுப்பு நிதியத்திலிருந்து பணம் ஒதுக்கீடு செய்ய அனுமதிக்க நிறைவேற்றப்படும் ஏதாவது சட்டம் சம்பந்தப்பட்டதாகவும் செயல்திறன் கொண்டதாகவும் இருக்கும்.*

திருத்தப்பட்ட விதி 180 அரசியல் அமைப்புச் சட்டத்துடன் சேர்க்கப்பட்டது.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## விதி 181

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

*181 விதிக்குப் பதிலாக பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:-*

*முன்னளிப்பு மானியம், பற்றுத் தொகை மானியம், தனி மானியம் ஆகியவைகளின் மீதான வாக்கு அளிப்பு*

*181. (1) இந்த அத்தியாயத்தின் மேலே கண்ட வழிவகைகளில் எது எவ்வாறு இருப்பினும்*

*(அ) மானியத்தின் மீது வாக்களிப்பதற்கு இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 178 ஆம் விதியில் நிர்ணயிக்கப்பட்டுள்ள நடைமுறைகள் முடிவுறா நிலையிலும் அந்தச் செலவினங்கள் சம்பந்தமாக இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 179ஆம் விதியின் வழிவகைகளின்படி சட்டம் நிறைவேற்றப்படா நிலையிலும் ஒரு நிதி ஆண்டின் பகுதிக்குரிய மதிப்பீட்டு செலவினங் களுக்கான மானியத்தை முன்னதாகவே வழங்குவதற்கும்;*

*(ஆ) பணியின் திட்டவட்டமற்ற தன்மையின் அல்லது அளவின் காரணமாக வழக்கமாக ஆண்டு நிதி நிலை அறிக்கையில் கொடுக்கப்படும் விவரங் களுடன் கோரிக்கையைக் கொடுக்க முடியாத நிலையில் எதிர்பாராத அந்தக் கோரிக்கையை நிறைவேற்ற மாநிலத்தின் வருவாய் ஆதாரங்களின் மீது மானியம் வழங்குவத்தற்கும்;*

*(இ) நிதி ஆண்டு எதனிலும் நடப்புப் பணிகளின் பகுதியாக அமையாத சிறப்பு மானியம் அளிப்பதற்கும் ஒரு மாநில சட்டமன்றத்திற்கு அதிகாரம் உள்ளது.*

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி* VIII, *ஜனவரி 10 1949, பக். 787-88.*

மேலும் அத்தகைய மானியங்கள் அளிக்கப்பட்ட செலவினங்களுக்காக மாநிலத் தொகுப்பு நிதியத்திலிருந்து பணம் எடுப்பதற்கான சட்டம் இயற்ற மாநில சட்டமன்றங்களுக்கு அதிகாரம் உள்ளது.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள் சம்பந்தமாக மானியம் வழங்குதல், மேலும் அச்செலவினங்களுக்காக மாநிலத்தின் தொகுப்பு நிதியத்திலிருந்து பண ஒதுக்கீடு செய்ய அதிகாரம் வழங்க சட்டம் இயற்ற இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 178 மற்றும் 179 ஆம் விதிகளின் வழிவகைகள் எவ்வாறு செயல்திறன் கொண்டுள்ளதோ அவ்வாறே பிரிவு (1)ன் கீழ் அளிக்கப்படும் மானியம் மற்றும் அந்தப் பிரிவின் அடிப்படையில் இயற்றப்படும் சட்டத்தின் மீதும் செயல் திறன் கொண்டதாக இருக்கும்.

*(தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப்பட்ட விதி 181 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 182

[1]**திரு. அவைத் தலைவர்:** விஷயம் என்னவென்றால்:

''அந்த விதி 182 அரசியல் அமைப்புச் சட்டத்தின் பகுதியாகிறது.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, உங்கள் அனுமதியுடன் ஒரு சிறு திருத்தம் கொண்டுவர விரும்புகிறேன்:

''விதி 182ல் 'மாநிலத்தின் வருவாய் ஆதாரங்கள்', என்ற சொற்களுக்கு பதிலாக 'மாநிலத்தின் தொகுப்பு நிதியம்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.''

**திரு. அவைத் தலைவர்:** வேறு எந்த திருத்தமும் இல்லை.

★ ★ ★

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட விதி 182 அரசியலமைப்புச்சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

## விதி 183

[2]**திரு. அவைத் தலைவர்:** வேறு யாராவது ஏதாவது சொல்ல விரும்புகிறார்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (திரு. சித்வாவின்) இந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 788.
2. அதே நூல் பக். 789.

**திரு. அவைத் தலைவர்:** விஷயம் என்னவென்றால்:

''விதி 183ன் பிரிவு (1)ல் 'இருக்கலாம்', என்ற சொல்லுக்குப் பதிலாக 'வேண்டும்' என்ற சொல் சேர்க்கப்பட வேண்டும். இறுதியில் பின்வருவன வற்றைச் சேர்க்க வேண்டும்: -

''சட்டமன்றத்தின் முதல் அமர்வுத் தேதியிலிருந்து 6 மாதத்திற்குள்'

திரு. ஆர்.கே. சித்வாவின் திருத்தம் ஏற்கப்படவில்லை.

விதி 183 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.

★ ★ ★

## புதிய விதி 183 அ

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் 183 அ என்ற புதிய விதி ஒன்றைக் கொண்டு வருகிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிய விரும்புகிறேன்:

விதி 183க்குப் பிறகு பின்வரும் புதிய விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:

நிதி அலுவல்கள் சம்பந்தமாக மாநிலசட்டமன்ற நடவடிக்கைகளைச் சட்டத்தின் மூலம் ஒழுங்குப் படுத்துதல்.

'183-அ நிதி அலுவல்களை, குறித்தக் காலக் கெடுவில் முடிப்பதற்காக மாநிலத்தின் தொகுப்பு நிதியத்திலிருந்து பணத்தை ஒதுக்கீடு செய்வது சம்பந்தமான மசோதா மற்றும் நிதி அலுவல்கள் சம்பந்தமான மாநில சட்டமன்ற அவைகளின் அல்லது அவையின் நடவடிக்கைகளை சட்டத்தின் மூலம் ஒழுங்கு படுத்தலாம். முந்தைய கடைசி விதியின் கீழ் மாநிலத்தின் சட்ட மன்றங்களிலோ அல்லது ஏதேனும் ஒரு சட்டமன்றத்தினாலோ வகுக்கப்பட்ட சட்டத்திற்கு அல்லது அந்த விதியின் பிரிவு (2) கீழ் மாநில சட்டமன்றம் தொடர்பாக செயல்திறம் உடைய விதி அல்லது நிலையாணை எதுவும் முரணாக இருப்பின் அவ்வாறு முரணாக இருக்கும் அளவிற்கு அந்த வழிவகையே மேலோங்கி நிற்கும்.

**திரு. அவைத் தலைவர்:** யாராவது ஏதாவது கூற விரும்பு கிறார்களா? விஷயம் இதுதான்:

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 793.

"அந்தப் புதிய 183-அ விதியை அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்வது."

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

விதி 183அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## விதி 217

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** எந்தத் திருத்தத்தையும் நான் காணவில்லை.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** இன்று காலையில் அதற்கு முன் அறிவிப்புக் கொடுத்தேன். நான் முன்மொழிய....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய்-பொது):** அவருடைய திருத்தத்தின் நகல்கள் நமக்குக் கிடைக்கவில்லை.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி (சென்னை: பொது):** அவர் முன்மொழிவதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** நாம் அமர்வதற்கு சில நிமிடங்களுக்கு முன்பு அவர் தன்னுடைய திருத்தத்திற்கான முன்னறிவிப்பைக் கொடுத்தார். வார்த்தைக்கு வார்த்தை திருத்தம் எண் 2741 போன்றதே இந்தத் திருத்தம் என்று எனக்குக் கூறப்பட்டது.

★ ★ ★

[2]**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** ஐயா சில உறுப்பினர்கள் தங்களுடைய திருத்தங்களை அவையில் கொண்டு வராததன் காரணமாக, அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்த இந்த விதிகள், அவையின் கவனத்தை ஈர்க்காமல் போய்விடக்கூடாது என்று நான் கருதுகிறேன்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 793.
2. அதே நூல், பக். 794

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதைப் பற்றி ஒன்றிரண்டு விஷயங்களைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இது ஒரு முக்கியமான விஷயமாகத்தான் தெரிகிறது. முதலில் இது ஒரு திருத்தமா அல்லது திருத்தத்துக்கு திருத்தமா என்பதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன். அது ஒரு திருத்தத்துக்கு திருத்தம் என்றால் முதல் திருத்தத்தை முன்மொழியாமல் இந்தத் திருத்தத்தைக் கொண்டு வர முடியாது.

**திரு. அவைத்தலைவர்:** திரு. நஜிருத்தீன் அகமது கொண்டு வந்த திருத்தம் எண் 2743க்கான திருத்தந்தான் அது. திருத்தங்கள் எண் 2741, 2742, 2743, 2744 மற்றும் 2745க்கான திருத்தமே தன்னுடைய திருத்தம் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது முன் அறிவிப்பில் தெரிவித்துள்ளார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 2743க்கான திருத்தம் இது என்றால் அந்தத் திருத்தத்தின் வரம்புக்கப் பால் இது செல்கிறது. மூலத் திருத்தத்தை கணிசமான அளவில் மாற்றவில்லை என்பதை உங்களை ஏற்றுக்கொள்ள வைக்க அந்த உறுப்பினரால் முடியுமென்றால் அதைக் கொண்டு வரலாம். இப்பொழுதுள்ள நிலையில் திருவாளர்கள் சந்தானம், அனந்த சயனம் அய்யங்கார் மற்றும் இதரர்கள் பெயரில் இருக்கும் திருத்தத் தின் மறுபதிப்புதான் இது.

திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் பெயரிலுள்ள பின்வரும் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன:

> ''விதி 217ன் பிரிவு 2ல் 'பகுதி I' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு 'அல்லது பகுதி III' என்பதை சேர்த்துக் கொள்ள வேண்டும்.
>
> 'விதி 217ன் பிரிவு 3ல் 'பகுதி I' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு 'அல்லது பகுதி III' என்பதை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

திருத்தப்பட்ட விதி 217 அரசியல் அமைப்புச் சட்டத்துடன் சேர்க்கப்பட்டது.

★ ★ ★

## விதி 224

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதிகள் 224 மற்றும் 225ஐ ஒத்திப்போட விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** விதி 224 மற்றும் 225 ஒத்திவைக்கப் படுகின்றன.

★ ★ ★

## விதி 226

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தம் எண் 2775ஐ வழக்கமான முறையில் முன்மொழிகிறேன்:

பிறகு இதற்கு ஒரு திருத்தம் கொண்டு வருகிறேன்.

ஐயா, நான் முன்மொழிகிறேன்:

''திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2775க்குப் பதிலாக பின்வருவதைச் சேர்க்க வேண்டும்:

விதி எண் 226ஐ விதி 226ன் பிரிவு (1) என்று புதிய எண் கொடுக்கப்பட்டு மற்றும்

(அ) புதிதாக எண் மாற்றப்பட்ட அந்த பிரிவின் இறுதியில் ''அந்தத் தீர்மானம் நடைமுறையில் இருக்கும்போது'', என்ற சொற்கள் சேர்க்கப் படும். மற்றும்

(ஆ) புதிதாக எண் கொடுக்கப்பட்ட 226ன் பிரிவு (1)க்குப் பிறகு பின்வரும் பிரிவுகள் சேர்க்கப்படும்:

(2) இந்த விதியின் பிரிவு (1)ன்படி நிறைவேற்றப்பட்ட தீர்மானம் ஓராண் டிற்கு மிகாமல் அத்தீர்மானத்தில் குறித்த கால அளவிற்கு நடைமுறையில் இருக்கும்.

இருப்பினும் இந்தத் தீர்மானம் தொடர்ந்து அமலில் இருக்க இந்த விதியின் பிரிவு (1)ன் படி தீர்மானங்கள் கொண்டு வரும்போதெல்லாம் இந்தத் தீர்மானம் முந்தைய தீர்மானம் இந்தப் பிரிவின்படி எந்தத் தேதியிலிருந்து செயலிழக்குமோ அந்தத் தேதியிலிருந்து மேலும் ஓராண்டுக்கு அமலில் இருக்கும்.

(3) இந்த விதியின் (1) ஆவது பிரிவின்படி நிறைவேற்றப்பட்ட தீர்மானத் தின் மூலம் தகுதிபெற்று அதன்படி நாடாளுமன்றம் நிறைவேற்றும் எந்தச் சட்டமும் அத்தீர்மானம் செயலற்றுப்போன ஆறுமாத காலக்கெடு கழிந்தவுடன் நாடாளுமன்றம் செயல்திறம் பெற்றிராத அளவிற்கு செயல்திறம் அற்றதாகி விடும். ஆனால் அக்காலக்கெடு முடிவதற்கு முன்பு செய்யப்பட்ட அல்லது செல்லாது விடப்பட்டவை பாதிக்கப்படாது."

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜனவரி 10 1949, பக். 799-800.

[1]**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்தை வாக்களிக்க விடுவதற்கு முன்பு நீங்கள் ஏதாவது கூற விரும்புகிறீர்களா, டாக்டர் அம்பேத்கர் அவர்களே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏற்கெனவே அதிகம் பேசப்பட்டு விட்டது. நான் பேச வேண்டும் என்று நீங்கள் விரும்பி னாலன்றி நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** அது உங்கள் விருப்பம்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்துடன் திருத்தப்பட்ட விதி 226 ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் அமைப்புச் சட்டத்துடன் சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

## விதி 229

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

> *''229 விதியின் பிரிவு (1)க்கான திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத் தங்கள் எண் 2781 மற்றும் 2783 பொறுத்தவரையில் பின்வரும் பிரிவு சேர்க்கப் படும்:*
>
> *(1) இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் 226 மற்றும் 227 ஆம் விதிகளில் வகை செய்யப்பட்டுள்ளபடி அல்லாமல் மாநிலங்களுக்காக நாடாளுமன்றம் சட்டமியற்ற முடியாத பொருட்களில் தம் மாநிலங்களில் நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் ஒழுங்குப்படுத்த வேண்டும் என்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் கருதி அதன்படி அந்த மாநிலங் களின் சட்டமன்ற அவைகள் அனைத்தும் தீர்மானங்கள் நிறைவேற்றுமாயின் அதற்கிணங்க, அந்த விஷயத்தை ஒழுங்குபடுத்தச் சட்டம் ஒன்றை நாடாளு மன்றம் இயற்றலாம். அவ்வாறு இயற்றப்படும் சட்டம் அந்த மாநிலங்களுக்கு பொருந்துவதாக அமையும். பிறகு வேறு மாநிலம் எதுவும் தம் மாநில சட்ட மன்றத்தில் அல்லது இரு அவைகள் இருப்பின் அந்த இரு அவைகளிலும் தீர்மானம் நிறைவேற்றி அச்சட்டத்தை ஏற்றுக்கொண்டால் அச்சட்டம் அந்த மாநிலத்திலும் அமல் செய்யப்படும்.''*

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 13, 1949, பக். 809.
2. அதே நூல், பக். 811.

*இந்தத் திருத்தத்தைப் பற்றி சில சொற்களில் விளக்க விரும்புகிறேன். மூலவிதி கூறுவதாவது: ''ஒன்று அல்லது அதற்கும் மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றம் அல்லது சட்டமன்றங்கள் விரும்பினால் இத்யாதி ''புதிய திருத்தம் கூறுவதாவது'' இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட மாநிலங்களின் சட்டமன்றங்கள் விரும்பினால் இத்யாதி ''புதிய திருத்தத்தின்படி இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள் ஒன்று சேர்ந்து தீர்மானம் அனுப்பினால் மட்டுமே சட்டமியற்ற நாடாளுமன்றத்தின் உதவியை நாடமுடியும். விதி 229ன் உட்பிரிவு (1)ல் செய்யப்பட்டுள்ள மாற்றங்கள் ஆரம்பத் திருத்தத்தின் விளைவானதுதான். அதாவது ஒரே ஒரு மாநிலத்தின் விருப்பத்தினாலன்றி, இரண்டு அல்லது அதற்கும் மேற்பட்ட மாநிலங்கள் விரும்பினால்தான் அந்த அதிகாரத்தை நாடாளுமன்றம் பயன்படுத்த முடியும்.*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *மதிப்பிற்குரிய நண்பர் திரு. சந்தானம் எழுப்பிய கேள்வியை நான் மிகவும் பாராட்டுகிறேன். ஆனால் உட்பிரிவு (2)ஐ அவர் கவனமாகப் படிக்கவில்லை என்று நினைக்கிறேன். முக்கியமான சொற்கள் என்னவென்றால் ''அதே முறையில்'' எந்த மாநிலங்களின் நலனுக்காக இந்தச் சட்டம் நிறைவேற்றப்பட்டதோ அதே முறையில், அதாவது தீர்மானத்தின் மூலமாக இந்த சட்டத்தை திருத்த வேண்டுமென்றோ அல்லது ரத்து செய்ய வேண்டுமென்றோ ஒப்புக்கொண்டால் நாடாளுமன்றம் அதை நிறைவேற்ற வேண்டும்.*

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** *''திருத்தலாம்.''*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *''ஆம்'' என்றாலே வேண்டும் என்ற பொருள்தான். எந்தவித சிக்கலும் இல்லை.*

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட விதி 229 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 13 1949, பக். 812.*

## விதி 230

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''விதி 230ல் எந்த ''ஒரு மாநிலத்திற்காக அல்லது அதன் பகுதிக்காக'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''இந்தியாவின் ஆட்சி எல்லைக்கு முழுவது மாக அல்லது ஏதாவது பகுதிக்காக'', என்ற சொற்களை சேர்க்க வேண்டும்.

*(மேலும் விவாதம் ஏதுமின்றி திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தப்பட்ட விதி 230 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 231

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2788 சம்பந்தமாக விதி 231ன் பிரிவு (2)ல் பகுதி I என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு அல்லது பகுதி III என்பதை சேர்க்க வேண்டும்.

★ ★ ★

[3]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: திரு. தாணுப் பிள்ளை எழுப்பிய வினாவிற்கு விளக்கம் தேவை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அதற்கான விளக்கம் இதுதான். விதி 231ல் குறிப் பிடப்பட்டுள்ள முரண்பாடு பற்றிய விதி, எதிர்காலத்தில் நாடாளு மன்றம் இயற்றும் சட்டங்களைப் பொறுத்தவரையில் பின்பற்றப்பட வேண்டும் என்பதை அவர் ஒத்துக்கொள்வார் என நான் உறுதியாக நம்புகிறேன். விதி 231ல் ''முன்போ அல்லது பின்போ நிறைவேற்றப் பட்ட'' என்ற சொல்லாக்கத்தை அவர் கவனித்திருப்பார் என்று நினைக்கிறேன். இந்த அரசியலமைப்புச் சட்டம் அமலுக்கு வந்த பிறகு நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் சம்பந்தமாக நிச்சயமாக பகுதி I மற்றும் பகுதி IIIல் குறிப்பிட்டுள்ள மாநிலங்கள் நிறைவேற்றும் சட்டங்கள் சம்பந்தமாக முரண்பாடு விதிகள் முற்றிலும் ஒட்டு

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 13 1949, பக். 813.
2. அதே நூல், பக். 813.
3. அதே நூல், பக். 814-15.

மொத்தமாகப் பொருந்தும் எனலாம். இந்த அரசியலமைப்புச் சட்டம் நிறைவேற்றப்படுவதற்கு முன்பு வெளிவந்துள்ள சட்டங்கள் சம்பந்தமாக நிலைமையை இப்படிக் கூறலாம். இந்த அவையில் நான் அடிக்கடி கூறியது போல் அரசியலமைப்புச் சட்டத்தின் எல்லா விதிகளும் பகுதி I மற்றும் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ள எல்லா மாநிலங்களுக்கும் எந்தவித குறிப்பிட்ட வேறுபாடின்றி பொதுவாக அமல் செய்யப்பட வேண்டும். அதுவே அவையின் விருப்பம் என்று நிச்சயமாகக் கூறுவேன். விதி ஒன்றை நிறைவேற்றும்போதெல் லாம் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களுக்குச் சாதகமாக விலக்களிக்கும் வரம்புரை சேர்ப்பது அவ்வளவு சரியானதல்ல. இருப்பினும் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் நிறை வேற்றும் சட்டங்கள் சம்பந்தமாக ஓரளவு வரம்புரைகள் அவசியம் என்பதில் ஐயப்பாடு இல்லை. பகுதி IIIல் உள்ள மாநிலங்கள் சம்பந்த மான ஒதுக்கீடுகள் குறித்து ஒரு புதிய பகுதியில் அல்லது அட்ட வணையில் நான் கூறியபடி அதை நிறைவேற்ற உத்தேசிக்கப்பட்டுள் ளது. இதன் மூலம் அரசியல் அமைப்புச் சட்டம் அமலுக்கு வருவ தற்கு முன்பு நிறைவேற்றப்பட்ட சட்டங்கள் சம்பந்தமாக புதிய வடிவத்தில் அல்லது விசேஷ அட்டவணையில் நிறைவேற்றப்பட்ட சில வரம்புரைகள் மூலம் அவைகளுக்கு விலக்கு அளிக்க முடியும். மேலும் ஒரு கருத்தை இத்துடன் தெரிவிக்க விரும்புகிறேன். அதாவது பகுதி IIIல் உள்ள மாநிலங்களுக்கு அந்த விசேஷ பட்டியலில் ஒதுக் கீடுகள் செய்ய உத்தேசித்திருந்தாலும் அது ஒரு முழுமையான ஒதுக் கீடாக இருக்க முடியாது. ஏனெனில் அதில் அளிக்கப்பட்டுள்ள ஒதுக்கீடு அந்தச் சிறப்புப் பகுதியில் சில வழிவகைகளை மாற்றங் கள் செய்ய குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் 307 ஆவது விதிக்குக் கட்டுப்பட்ட வழிமுறைகளாக இருக்கும். இந்த மாற்றங் கள் பகுதி I மற்றும் பகுதி IIIல் உள்ள மாநிலங்கள் இரண்டுக்கும் பொருந்தும். எனவே அரசியலமைப்புச் சட்ட ஆரம்பத்திற்கு முன்பு நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்கள் அல்லது மாநிலச் சட்ட மன்றங்கள் இயற்றும் சட்டங்களும் விதி 231ன் பாதிப்பிலிருந்து விலக்களிக்கப்படும். ஆனால் விதி எண் 307ன்படி மன்றங்களுக் கான வழிமுறைகளுக்கு அவை உள்படும்.

(டாக்டர் அம்பேத்கரின் முன்பு குறிப்பிட்ட திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தம் செய்யப்பட்ட விதி 231 அரசியல் சட்டத்தில் சேர்த்துக்கொள்ளப் பட்டது.)

## விதி 232

[1]**திரு. அவைத் தலைவர்:** விதி எண் 232ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

*''232 ஆவது விதியின் தலைப்பான 'சட்டமன்ற அதிகாரங்களின் கட்டுப்பாடு' என்பது நீக்கப்பட வேண்டும்.*

*உங்களுடைய அனுமதியுடன் என்னுடைய புதிய திருத்தத்தை முன்மொழி கிறேன்.*

*''(i) பகுதி I'' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு 'பகுதி III'' என்ற சொல்லையும் எண்ணையும் சேர்த்துக் கொள்வது; மேலும்*

*(ii) விதி 232ன் பிரிவு (ஆ)விற்குப் பிறகு பின்வரும் பிரிவை இணைப்பது:*

*'(அஅ) பரிந்துரைத் தேவைப்படுவது அரசரிடமிருந்து என்ற இடத்தில் 'அரசரிடமிருந்து அல்லது குடியரசுத் தலைவரிடமிருந்து.''*

இப்பொழுது 'அரசர்' என்ற சொல்லை உபயோகப்படுத் துவது குறித்து உணர்ச்சிபூர்வமான எதிர்ப்பிருப்பதை காணமுடிகிறது. நான் அந்த உணர்ச்சிகளைப் புரிந்து கொள்கிறேன். தற்போதைக்கு திருத்தத்தை அவை ஏற்றுக்கொண்டு மேலும் அரசர் என்ற சொல் லுக்கு மாற்றுச் சொல்லைக் கண்டுபிடிக்கும் பணியை வரைவுக் குழுவுக்கு விட்டுவிடலாம் என்று கூறுகிறேன். இல்லையென்றால் அரசர் என்ற சொல்லுக்கு மாற்றாக இந்த நேரத்தில் வேறு ஒரு மாற்றுச் சொல் காணமுடியவில்லை என்ற காரணத்திற்காக மட்டுமே இந்த விதி நிறைவேற்றப்படாமல் ஒத்திபோட வேண்டியிருக்கும்.

*(டாக்டர் அம்பேத்கரின் எல்லாத் திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தம் செய்யப்பட்ட விதி 232 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)*

## விதி 234

**திரு. அவைத் தலைவர்:** விதி 234ஐ நாம் எடுத்துக் கொள்வோம்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 13 1949, பக். 815.
2. அதே நூல், பக். 816.

*விதி 234ல் பின்வரும் பிரிவைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:*

*(3) செய்தித் தொடர்பு சாதனங்களை அமைத்தல் அல்லது அவற்றை பேணிப் பராமரித்தல் குறித்து கடைசிக்கு முந்தைய விதியின்படி ஒரு மாநிலத் திற்கு இடப்பட்ட கட்டளையினால் ஏற்படும்.செலவு, அந்தக் கட்டளை பிறப்பிக்கப்படா நிலையில் அந்த மாநிலம் வழக்கமான கடமைகளை ஆற்றுவதற்காக ஏற்படக்கூடிய செலவை விட அதிகமாக இருக்கும் நிலையில் அந்த மாநிலத்திற்கு இந்திய அரசு ஒப்பந்தப்படி தொகை அளிக்கவோ அல்லது ஒப்பந்தம் எதுவும் இலலாவிடின் இந்தியாவின் தலைமை நீதிபதி நியமிக்கும் நடுவர், மாநிலம் அதிகப்படியாக செலவு செய்த தொகை சம்பந்த மாக தீர்மானிக்கும் தொகையை அளிக்க வேண்டும்.*

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. 134 ஆவது விதி திருத்தம் செய்யப் பட்டு அரசியல் அமைப்புச் சட்டத்துடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

## விதி 238

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, நான் முறைப்படி எண் 2807ஐ முன்மொழிகிறேன்:

*''விதி 238ன் வரம்புரையில் ஒன்றியத்துடன் அந்த மாநிலத்தின் சார்பாக செய்து கொண்டு ஏதாவது ஒப்பந்தத்தின் நிபந்தனைகளின் அடிப்படையில் என்ற சொற்களுக்குப் பதில் இந்திய அரசின் அல்லது இந்திய டொமினியன் அரசுடன் அந்த மாநிலத்தின் சார்பில் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் அல்லது ஆவணத்தில் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகளின் அடிப்படையில் அல்லது இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் விதி 2-ன்படி நாடாளுமன்றம் இயற்றும் ஏதாவது சட்டத்தின்படி என்று சொற்களை மாற்றி அமைக்க வேண்டும்.*

*மேலும் நான் முன்மொழிகிறேன்:*

*(1) திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2807 சம்பந்தமாக விதி 238ன் பிரிவு (2)ல் 'சட்டத்தினால்' என்ற சொல்லுக்கு முன் 'நாடாளுமன்றம் நிறைவேற்றிய' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.*

*(2) திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்த எண் 2807ஐப் பொறுத்தவரை யில் விதி 2308ன் வரம்புரை நீக்கம் செய்யப்படுகிறது.*

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

*(திருத்தம் செய்யப்பட்ட விதி 238, அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

---

1. *அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி* VIII, *ஜுன் 13 1949, பக். 817.*

## விதி 239

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நான் முன்மொழிகிறேன்:

விதி 239ல் மாநிலம் என்ற சொல்லுக்கு முன் 29ஆம் வரியில் இரண்டாவது தடவையாக வரும்போது 'மற்ற' என்ற சொல்லை இணைக்க வேண்டும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தம் செய்யப்பட்ட விதி 239 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 240

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ''நான் முன்மொழிகிறேன்:

240ஆம் விதி (1) ஆம் பிரிவுக்குப் பதிலாக பின்வரும் புதிய பிரிவுகள் சேர்க்கப்பட வேண்டும்:-

(1) மேற்குறிப்பிட்டது போன்ற குற்றச்சாட்டுகளைக் குடியரசுத்தலைவர் பெற்றால், நடவடிக்கை எடுக்கும் அளவுக்கு அதிலுள்ள பிரச்சினைகள் அவ்வளவு முக்கியமானது அல்ல என்று அவர் கருதாத நிலையில், அவர் கொடுக்கும் உத்தரவுகளுக்கு இணங்க விசாரணைக்குழு ஒன்றை (கமிஷனை) நியமிக்கலாம். குற்றச்சாட்டு சம்பந்தப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாகவும் அல்லது விசாரணைக்கு அனுப்பிய விஷயங்கள் குறித்தும் அவருக்கு அறிக்கை கொடுக்க வேண்டும்.

(1அ) இந்தக் குழுவில் (கமிஷனில்) விசாரணையின் நோக்கத்துக்குப் பொருத்தமானவர்கள் என்று குடியரசுத் தலைவர் தீர்மானிக்கும் நீர்ப்பாசனம், பொறியியல், நிர்வாகம், நிதி அல்லது சட்ட சம்பந்தமான விஷயங்களில் தேர்ச்சி பெற்ற நிபுணர்கள் நியமிக்கப்படுவர்.

(திருத்தம் நிறைவேற்றப்பட்டது. திருத்தம் செய்யப்பட்ட விதி 240 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது.)

## விதி 112 ஆ

[3]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 13 1949, பக். 817.
2. அதே நூல், பக். 818.
3. அதே நூல், பக். 824

குற்றவியல் வழக்குகளில் உச்சநீதிமன்றத்துக்குள்ள மேல்முறையீட்டு அதிகார வரம்பை வழங்குவது

*திருத்தம் எண் 23க்குப் பதிலாக பின்வரும் திருத்தத்தைச் சேர்க்க வேண்டும்:-*

*புதிய 112-அ விதிக்குப் பின், பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:-*

*112ஆ (1) இந்திய ஆட்சிப் பகுதியில் உள்ள உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பாணை, தீர்ப்பு அல்லது இறுதி ஆணையிலிருந்து எழும் மேன்முறையீடுகளை கேட்பதற்கும் விசாரணை செய்வதற்கும் நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம், அந்தச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிபந்தனைகளுக்கும், வரையறைகளுக்குட்பட்டு தனது குற்றவியல் வழக்கு அதிகாரத்தை உபயோகிப்பதில் உச்சநீதிமன்றத்துக்கு அதிகாரம் வழங்கலாம்.*

★ ★ ★

## *111-அ*

***[1]திரு. அவைத் தலைவர்:*** *டாக்டர் அம்பேத்கர் தற்பொழுது தம் திருத்தங்களை முன்மொழிவார்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** *(பம்பாய்: பொது): ஐயா, நான் முன்மொழிகிறேன்:*

குற்றவியல் விஷயங்கள் குறித்து உச்சநீதிமன்றத்தின் மேன்முறையீட்டு அதிகார வரம்பு.

*"புதிய விதி 111-அ-வின், பட்டியல் 1ல் 23 மற்றும் 24 திருத்தங்கள் (ஐந்தாவது வாரம்) சம்பந்தமாக பின்வருபவைச் சேர்த்துக் கொள்ளப்படும்:-*

*111 அ. (1) இந்திய ஆட்சிப் பகுதியிலுள்ள உயர்நீதி மன்றத்தின் குற்றவியல் தீர்ப்பாணை, தீர்ப்பு இறுதி ஆணை ஆகியவைகளில் உயர்நீதிமன்றம்*

*(அ) மேல் முறையீடு ஒன்றில் குற்றம் சாட்டப்பட்ட ஒருவர் விடுதலை செய்யப்பட்ட தீர்ப்பின் மேல்முறையீடு ஒன்றை மறுபரிசீலனை செய்து மரண தண்டனை விதிக்குமாயின், அல்லது*

*(ஆ) தன் அதிகாரத்தின் கீழமைந்துள்ள ஒரு நீதிமன்றத் திலிருந்து வழக்கொன்றை தானே எடுத்துக் கொண்டு குற்றம் சாட்டப்பட்டவரை குற்றவாளி என தீர்ப்பளித்து மரண தண்டனை விதிக்குமாயின், அல்லது*

*(இ) உச்சநீதிமன்றத்துக்கு மேன்முறையீடு செய்யத் தகுந்த வழக்கு என்று உயர்நீதிமன்றம் சான்றிதழ் அளிக்குமாயின், இவைகளிலிருந்து எழும் மேல்முறையீட்டை விசாரணை செய்யவும் கேட்கவும் உச்சநீதிமன்றத்துக்கு அதிகாரம் உள்ளது.*

*1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 13 1949, பக். 840.*

*இருப்பினும் இந்த விதியின் (இ) உட்பிரிவின் கீழான மேன்முறையீடு உச்சநீதிமன்றம் அவ்வப்போது இயற்றிடும் விதிகளுக்கும் மேலும் உயர்நீதி மன்றம் வகுத்திடும் விதிக்கும் நிபந்தனைக்குட்பட்டு இருக்கும்.*

*(2) குற்றவியல் நடவடிக்கையில் இந்திய ஆட்சிப் பகுதியிலுள்ள உயர்நீதி மன்றம் வழங்கும் தீர்ப்பு, தீர்ப்பாணை அல்லது இறுதி ஆணையிலிருந்து எழும் மேன்முறையீடுகளை ஏற்பதற்கும் விசாரணை செய்வதற்கும் நாடாளு மன்றம் சட்டத்தின் மூலம், அத்தகைய சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வரையறைகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்ட கூடுதல் அதிகாரங்களை உச்சநீதிமன்றத்துக்கு வழங்கலாம்."*

இந்தக் கட்டத்தில் மேலும் எதுவும் கூற விரும்பவில்லை. என்னுடைய புதிய திருத்தம் சம்பந்தமான விவாதங்களைக் கேட்ட பிறகு இறுதியில் என்னுடைய கருத்துகளைத் தெரிவிக்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, இந்தப் புதிய விதி 111அ-வைக் கொண்டு வருவதன் மூலம் என்ன செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது என்பதைப் பற்றிய ஒரு தெளிவான சித்திரத்தை அவைக்கு அளிக்க சில கருத்துகளைக் கூற விரும்புகிறேன். விதி எண் 111 அ-வின் நோக்கம் உச்சநீதிமன்றத் துக்கு ஒரு பொதுவான குற்றவியல் மேல்முறையீட்டு அதிகார வரம்பை அளிப்பதல்ல. அளிக்கப்படவுள்ள அதிகார வரம்பு மிகவும் குறைந்த அளவிலானதுதான்.

விதி 111-அ-ன் உட்பிரிவில் சுட்டிக்காட்டியபடி உச்சநீதி மன்றத்துக்கு மேல்முறையீட்டு குற்றவியல் அதிகாரவரம்பு அளிப் பதற்கான அவசியத்தை என் கருத்துப்படி கூறுவதென்றால் உட்பிரிவு (இ)லிருந்து உபவிதிகள் (அ) மற்றும் (ஆ)வைப் பிரித்துப் பார்க்க வேண்டுமென்று எடுத்துக்கூறுகிறேன். ஏனெனில் அவை வெவ்வேறு அடிப்படையில் உள்ளன. மரண தண்டனை வழங்கப்பட்டுள்ள வழக்குகளில் மட்டுமே, உச்சநீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகார வரம்பு அடங்கியிருக்கும். வேறு எந்த வழக்கிலும் குற்ற வியல் மேல்முறையீட்டு அதிகார வரம்பு உச்சநீதிமன்றத்துக்கு இருக்காது. மனதில் தெளிவாக வைத்துக் கொள்ள வேண்டிய விஷயம் இதுதான்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 13 1949, பக். 853-57.

மரண தண்டனை விதிக்கப்பட்ட, குற்றம் சாட்டப்பட்டவர் சம்பந்தப்பட்ட வழக்கில் உச்சநீதிமன்றத்துக்கு இந்த வரையறுக்கப் பட்ட மேன்முறையீட்டு அதிகார வரம்பு அளிக்கப்பட வேண்டியதன் அவசியம் ஏன் என்பதைச் சுருக்கமாகக் கூற விரும்புகிறேன். குற்ற விசாரணைத் தொகுப்புச் சட்டத்தில் உள்ளடங்கியுள்ள நமது குற்ற வியல் சட்டவியல் சம்பந்தப்பட்டவரையில் பொதுவான கோட்பாடு ஒன்று முழுமையாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அதாவது மரண தண்டனை வழங்கப்பட்ட ஒருவனுக்கு குறைந்தபட்சம் மேல்முறை யீட்டுக்கு ஒரு வாய்ப்பாவது இருக்க வேண்டும் என்பதுதான் அது.

**திரு. அவைத் தலைவர்:** நான் ஒரு விஷயத்தை சுட்டிக் காட்டலாமா? தண்டனை மரண தண்டனையாக உயர்த்தப்படும் வழக்கில் இந்த திருத்தம் உதவவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த மாதிரி ஒரு வாய்ப்பைக் கொடுக்க நாம் விரும்பவில்லை. அதுதான் விஷயம். உச்சநீதிமன்றத்துக்கு மேல்முறையீட்டு வாய்ப்புக்கான குற்றவியல் அதிகார வரம்பை, தண்டனை உயர்வு செய்யப்பட்ட வழக்குகளில் அளிக்க நாம் உத்தேசிக்கவில்லை. இதை நாம் திறந்த கண்களுடன் தான் செய்கிறோம். இதை எல்லோரும் உணர வேண்டும். அதுவல்ல நமது நோக்கம். மரண தண்டனை பெற்றவன் மேல்முறையீட்டுக்கு ஒரு சந்தர்ப்பமாவது இருக்க வேண்டும் என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இந்த அடிப்படையில் தொடங்கி, குற்றவியல் விசாரணைச் சட்டத்தின் வழிவகைகளைப் பார்த்தால் மூன்று சந்தர்ப்பங்களில் இந்தக் கோட்பாடு மறுக்கப்பட்டுள்ளது அல்லது பயனுள்ள வகையில் நடைமுறைப்படுத்தப்படவில்லை. உதாரணமாக ஒரு வழக்கில் மாவட்ட நீதிபதி குற்றவியல் அமர்வு நீதிபதி என்ற முறையில் பணியாற்றும்போது குற்றம் சாட்டப்பட்ட வரை விடுதலை செய்கிறார் என்பதுதான் முதலாவது நேர்வு. விடுதலைக்கு எதிராக மேல்வழக்காட்டுக்கு உரிமையுள்ள அரசு உயர்நீதிமன்றத்துக்கு மேல்முறையீடு செய்ய, உயர்நீதிமன்றம் தன் மேல்முறையீட்டிற்கான அதிகார வரம்பின்படி அந்த மனிதனுக்கு மரண தண்டனை அளிக்கிறது. இந்த மாதிரி வழக்கில் மேல் முறை யீட்டுக்கான வாய்ப்பில்லை. அடிப்படையின் ஒரு வரம்புரை இது.

பம்பாய், கல்கத்தா, சென்னை நகரங்களிலுள்ள உயர்நீதி மன்றத்தின் அமர்வு குற்றவியல் நீதிபதி, அமர்வு நீதிமன்ற விசாரணை யில் ஒரு குற்றவாளியை விடுதலை செய்யும் வழக்கே இரண்டாவது

நேர்வு. பிறகு அரசு உச்சநீதிமன்றத்துக்கு மேல் முறையீடு செய்ததில், மேல் முறையீட்டை விசாரித்து அவனுக்கு மரண தண்டனை விதிக்கிறது. இந்த இடத்திலும் மேல்முறையீடு கிடையாது. பிறகு மூன்றாவது நேர்வு, மகா மோசமானதுதான். அதாவது, குற்றவியல் நடைமுறை விதித் தொகுப்பு பிரிவு 526ன்படி, அந்தப் பிரிவின்படி அதிகாரம் பெற்றுள்ள ஒரு உயர்நீதிமன்றம் ஒரு வழக்கை தானே எடுத்துக் கொண்டு மரண தண்டனை விதிக்கிறது. இந்த இடத்திலும் மேல் முறையீட்டுக்கு சாத்தியமில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** இந்த வழக்குகளில் மேல்முறையீட்டுக்கான உரிமை உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இல்லை, உயர்நீதிமன்றத்திலிருந்து மேல்முறையீட்டுக்கான உரிமை இல்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** குற்ற விசாரணை முறைத் தொகுப்புச் சட்டம் 411அ பிரிவின்படி உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கல்கத்தா, பம்பாய் மற்றும் சென்னை உயர்நீதிமன்றங்களுக்கு மட்டும் பிரிவு 411-அ, பொருந்தும். இங்குங்கூட, அது எல்லா வழக்குகளிலும் பொருந்துவதில்லை அல்லது நீதிமன்றம் பிரிவு 506 ன் கீழ் வழக்குகளைப் பரிசீலிக்கும்போது அது செயல்படுவதில்லை. உயர்நீதிமன்றம் குற்றவியல் முதலேற்பு நீதிமன்றமாக செயல்படும்போது அளிக்கப்படும் தீர்ப்புகளின் மீதான மேல்முறையீடுகளில் மட்டும் பிரிவு 411 அ, பொருந்துகிறது. எனவே ஐயா....[1]

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** பிரிவு 526 பொதுவாக, மாற்றப்படும் வழக்குகள் சம்பந்தமாகவே உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஒரு வழக்கு மாற்றப்பட்டு உயர்நீதிமன்றத்தால் விசாரிக்கப்பட்டால் அப்பொழுது மேல்முறையீட்டுக்கு வாய்ப்பு இல்லை. அதற்கு விசேஷமான சட்ட அதிகார வரம்புள்ளது. எனவே மரண தண்டனை பெற்ற ஒருவன் மேல்முறையீட்டுக்கு ஒரு வாய்ப்பாவது பெற வேண்டுமென்ற

1. ... புள்ளிகள் குறுக்கீட்டைக் குறிக்கின்றன.

பொதுவான கோட்பாடு பின்படுத்தப்படாத மூன்று வெளிப்படை யாகத் தெரியும் சந்தர்ப்பங்கள் இவைதான். நவீன உலகத்தின், மற்றும் இந்திய மக்களின் அறிவொளி பெற்ற மனசாட்சியைக் கணக்கிலெடுத்துக் கொண்டு இவ்வகையிலான ஓர் ஏற்பாடு செய்யப்பட வேண்டுமென நான் நினைக்கிறேன். எனவே முதலில் விடுதலை பெற்ற ஒருவன் உயர்நீதிமன்றத்தில் மரண தண்டனை பெறும்போது அவனுக்கு ஒரு மேல்முறையீட்டு வாய்ப்பு அளிப்பதே (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகளின் நோக்கம் ஆகும். (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகளில் உள்ள வழிவகைகளுக்கு மனசாட்சி அல்லது மானுட சமுதாயத்தின் அடிப்படையில் ஆட்சேபம் தெரிவிப்பவர் யாரும் இருக்க மாட்டார்கள் என நான் கருதுகிறேன்.

இப்பொழுது உட்பிரிவு (இ) க்கு வருகிறேன். கல்கத்தா, சென்னை மற்றும் பம்பாய் உயர்நீதிமன்றங்களைப் பொறுத்தவரை யில் குற்றவிசாரணை முறைத்தொகுப்புச் சட்டம் பிரிவு 411ன்படி இன்று அது நடைமுறையில் உள்ளது என்பது அவைக்கு ஞாபகம் இருக்கும். தகுதியான வழக்கு என்று உயர்நீதிமன்றத்தின் சான்றிதழ் அடிப்படையில் பிரிவி கவுன்சிலுக்கு மேல்முறையீடு செய்யும் உரிமை சட்டமன்றத்தால் 1943 ஆம் ஆண்டு அளிக்கப்பட்டுள்ளது. அது மிகவும் தேவையானது என்ற முறையில் செய்யப்பட்ட ஒரு நடவடிக்கையாகும். குற்றவிசாரணை முறைத்தொகுப்புச் சட்டம் பிரிவு 411ல் அடங்கியுள்ள வழிவகைகள் சம்பந்தமாக நம்முன் இரு கேள்விகள் உள்ளன. இந்த அவை இருவிதங்களில் நடவடிக்கை எடுக்கமுடியும். இந்த ஏற்பாட்டை முற்றிலுமாக நீக்கிவிடுவது அல்லது எல்லா உயர்நீதிமன்றங்களுக்கும் அதை விரிவுபடுத்துவது என்பதே அந்நடவடிக்கைகள். உயர்நீதிமன்றத்தின் சான்றிதழ் அடிப் படையில் மேல்முறையீட்டுக்கான வாய்ப்பை அளிக்கும் பிரிவு 411ல் அடங்கியுள்ள வழிவகைகளை நீக்கிவிடுவதன் மூலம் மூன்று மாகாணங்களில் மக்கள் அனுபவித்துப் பயனடைந்துவரும் வழக்கத் திலுள்ள உரிமையைப் பலவந்தமாக பறிப்பதாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. எனவே எல்லா உயர்நீதிமன்றங்களுக்கும் பொருந்தும் வகையில் அந்த வழிவகைகளை விரிவுபடுத்துவதுதான் ஒரே மாற்று வழியாகும். என்னுடைய திருத்தத்தில் இரண்டாவது வழிமுறையைத் தான் அதாவது எல்லா உயர்நீதிமன்றங்களும் அதை விரிவுபடுத்து வதையே நான் பின்பற்றியுள்ளேன். உச்சநீதிமன்றத்துக்கு இதனால் குற்றவழக்கு மேல்முறையீடுகள் ஏராளமாக வந்துவிடும் என்று பதற்றம் அடையும் என் நண்பர்கள் இரண்டு விஷயங்களை மறந்து

விடுகிறார்கள். புது விதியின் பிரிவு (1) ன் உட்பிரிவுகள் (அ) மற்றும் (ஆ) வின்படி உச்சநீதிமன்றத்துக்கு அளிக்கப்பட உள்ள மேல்முறை யீடுகளைக் கேட்கும் அதிகாரம், சட்டமன்றம் மரண தண்டனையை ஒழிக்கும் எந்த நிமிடத்திலும் மறைந்துபோகும். மரண தண்டனை சம்பந்தமாக உலகின் மற்ற பகுதிகளில் வெளியிடப்படும் கருத்துகள் மற்றும் இந்தியாவின் பாரம்பரியத்தையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, மரண தண்டனையை ரத்துசெய்துவிட்டால் அப்பொழுது மேல்முறையீட்டுக்கான அவசியம் இல்லாமல் போகும். அந்த நிலை யில் (அ) மற்றும் (ஆ) உட்பிரிவுகள் தேவையற்றதாகிவிடும். குற்ற வழக்குகள் சம்பந்தமாக உச்சநீதிமன்றத்தின் பணிமுற்றிலும் நீங்கா விடினும் பெருமளவில் குறைந்துவிடும்.

(இ) உட்பிரிவைப் பொறுந்தவரையில் அதனுடன் வரும் வரம்புரையால் அது மிகவும் கட்டுப்பாடான எல்லைக்குள் வைக்கப் பட்டுள்ளதைக் கவனிக்க வேண்டும். அதாவது 'இருப்பினும் உச்சநீதி மன்றம் அவ்வப்பொழுது இயற்றும் விதிகள் மற்றும் உயர்நீதி மன்றம் நிர்ணயிக்கும் அல்லது அவசியப்படும் நிபந்தனைக்குட் பட்டு' இந்த (இ) உட்பிரிவின்படி மேல்முறையீட்டுக்கான உரிமை அளிக்கப்படுகிறது! எனவே, சான்றிதழ் என்பது கேட்டவுடன் கொடுக் கப்படும் ஒரு எளிய நடைமுறையாக அமைந்துவிடாது. உச்சநீதி மன்றம் இயற்றும் விதிகளுக்கும், உயர்நீதிமன்றம் நிர்ணயிக்கும் நிபந்தனைகளுக்கும், வரையறைகளுக்கும் உட்பட்டு அது இருக்கும். (இ) உட்பிரிவு மிகவும் உறுதியான ஒரு வழிவகை என்பது உணரப் படும். அது மக்கள் நினைப்பது போல வளைந்து கொடுக்கக்கூடிய சுலபமான வழிவகை அல்ல.

**பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:** வரம்புரையால் மாற்றம் அடைந்துள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம், வரம்புரை யால் மாற்றம் அமைந்துள்ளதுதான்.

இப்பொழுது என் திருத்தத்தின் உட்பிரிவு (2) ஐப் பார்க்கலாம். எனது திருத்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூவகை வழக்குகளுக்கு அப்பாற்பட்டு, உச்சநீதிமன்றத்தின் குற்றவழக்கு அதிகார வரம்பை விரிவுபடுத்த நாடாளுமன்றத்துக்கு அளிக்கப்பட்டுள்ள பொதுவான அதிகாரத்தை அதில் காணலாம். எனது திருத்தத்தின் (1) பிரிவில்

*குறிப்பிடப்பட்டுள்ள மூவகை வழக்குகளுக்கு மட்டுமே அதிகார வரம்பு போதுமானது என்ற கருத்துள்ளது. உச்சநீதிமன்றத்தின் குற்ற வழக்கு அதிகார வரம்பை விரிவுப்படுத்த நாடாளுமன்றத்தின் கதவு எப்பொழுதுமே திறந்து வைக்கப்பட்டிருக்கக்கூடாது என்ற கருத்து உள்ளது. மேலும் உட்பிரிவுகள் (அ) (ஆ)(இ) ஆகியவைகளே உச்ச நீதிமன்றத்தின் குற்றவழக்கு அதிகாரவம்பின் இறுதி எல்லையாக இருக்கவேண்டுமென்ற கருத்து உள்ளது. நான் கொடுக்கக்கூடிய ஒரே பதில் இதுதான்: எதிர்காலத்தில் எத்தகைய சூழ்நிலைகள் உருவாகும் என்பதைக் கற்பனை செய்வது கடினம். உச்ச நீதிமன்றத்துக்கு குற்ற வழக்கு மேல்முறையீட்டு அதிகாரவரம்பு அளிக்க நாடாளுமன்றத் துக்கு எந்த விதச் சூழ்நிலையும் உருவாகாது என்று ஒருவர் கூறினால் அதை நம்புவது சரிதான் என்று தோன்றுகிறது. ஆனால் ஒருவேளை அப்படிப்பட்ட நிலை திடீரென்று உருவானால் எனது புதிய விதி யின் (2) ஆம் பிரிவின் வழிவகைகள் இல்லையென்றால் நிலைமை என்ன ஆகும்? இந்த அரசியல் அடிப்படைச் சட்டத்தில் பின்வரும் பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள நடைமுறைகளின்படி அரசியல் அடிப்படைச் சட்டத்தைத் திருத்தும் நிலை உருவாகும். எனவே இப்பொழுது கேள்வி இதுதான்: அரசியல் அடிப்படைச் சட்டத்தை மாற்றுவதன் மூலமே நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் கிடைக்கும் என்ற கடினமான நிலையைக் கைக்கொள்ள வேண்டுமா அல்லது நிலைமையை வளைந்து கொடுக்கக்கூடியதாக அதாவது தேவைப் படும் சட்டத்தை உரிய நேரத்தில் சூழ்நிலைகளுக்கேற்ப எதிர்கால நாடாளுமன்றமே நிறைவேற்ற விட்டுவிடுவதா?*

***மாண்புமிகு திரு.கே.சந்தானம்*** *(சென்னை:பொது): விதி 114 ன் படி உச்சநீதிமன்றத்துக்கு அதிகார வரம்பளிக்க நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் உள்ளது என்பதைச் சுட்டிக்காட்டலாமா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *இந்த விஷயத்தைப் பற்றி விதி 114 கூறவில்லை என அஞ்சுகிறேன். என்னிடம் நகல் இல்லை. இருந்தால் நான் பதிலளித்திருப்பேன். அது ஒன்றியப்பட்டி யல் சம்பந்தமானது.*

***மாண்புமிகு திரு.கே.சந்தானம்:*** *ஒன்றியப் பட்டியலின் விஷ யங்கள் சம்பந்தமாக உச்சநீதிமன்றத்தின் அதிகார வரம்பை அது தீர்மானிக்கிறது.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம். ஆனால் ஒருவேளை அவர்கள் பொது அதிகாரப் பட்டியல் (கான்கரண்ட் லிஸ்ட்) பட்டியல் 111 சம்பந்தமாக அதிகார வரம்பை விரிவுபடுத்த தீர்மானித்தால் 114 விதியின்படி அது சாத்தியமில்லை.

இப்பொழுது என் நண்பர் திரு.அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் தெரிவித்த சில கருத்துகளுக்கு வருவோம். அவருடைய கருத்துகள் பெரும்பாலும் உட்பிரிவு (3) ஐ பற்றியதுதான். அவருடைய முதல் கேள்வி இதுதான்: உட்பிரிவு (3) வழிவகைகள், வரம்புரையால், அதாவது உச்சநீதிமன்றம் இயற்றும் விதிகளால் வேலி இடப் பட்டுள்ளதால் உட்பிரிவு (3) ன் பயன் என்ன என்பதாகும்.

**பண்டித லட்சுமி காந்த மைத்ரா:** அது உட்பிரிவு (இ) உட்பிரிவு (3) அல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது உட்பிரிவு (இ)தான். மன்னிக்க வேண்டுகிறேன். வரம்புரையில் அடங்கியுள்ள வழிவகைகளினால் கட்டுப்படுத்தப்பட்ட உட்பிரிவு (இ) ஆல் எந்த பயனுமில்லை என்பதுதான் அவரது கூற்று. உட்பிரிவு (இ) யுடன் இணைந்துள்ள வரம்புரை வார்த்தைக்கு வார்த்தை குற்ற விசாரணை முறைத்தொகுப்புச்சட்டம் பிரிவு 411ன் வரம்புரை போன்றதுதான்; வார்த்தைக்கு வார்த்தை உரிமையியல் சட்டத்தொகுப்பின் விதி 109 ன் வரம்புரை போன்றதுதான் என்பதை என் நண்பர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யருக்கு நினைவுப்படுத்த விரும்புகிறேன். விதி 111 அ ன் பிரிவு (1) ன் உட்பிரிவு (இ) க்கு வார்த்தைக்கு வார்த்தை இணையான ஒரு பிரிவை உச்சநீதிமன்றத்தின் மேல்முறையீட்டு உரிமை இயல் அதிகாரவரம்பில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளதை எனது நண்பர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யருக்கு ஞாபகம் இருக்கும் என்று நினைக்கிறேன். விதி 111 ன் பிரிவு (1) ன் உட்பிரிவு உச்சநீதிமன்றம் நிறைவேற்றக்கூடிய விதிகளினால் கட்டுபட்டு, வரம்புக்குட்பட்டாலும் அதில் சிறிது நன்மை எஞ்சி இருக்குமென்றால், வரம்புரையில் குறிப்பிட்டுள்ள கட்டுப்பாடுகள் இருப்பினும் (இ) உபபிரிவிலும் சிறிது நன்மை மிஞ்சி இருக்கும் என்று பொது அறிவுபெற்ற நான் நினைக்கிறேன். விசேஷ அனுமதியின் மூலம் மேல்முறையீட்டை ஏற்றுக்கொள்ளும் உரிமையை உச்சநீதிமன்றத்துக்கு அளிக்கும் விதி 112ல் ஒரு வழிவகை இருப்பதாக எனது நண்பர் மேலும் சுட்டிக்காட்டினார். அந்த விதி பொதுவானது. உரிமை

*இயல் மேல் முறையீட்டை மட்டுமன்றி எந்தக் காரணத்தையோ, விஷயத்தையோ குறிப்பிடாத பொதுவான விதி அது. அது இருக்கும் போது உட்பிரிவு (இ)யின் அவசியம் என்ன என்பதே அவர் கேள்வி. என்னுடைய பதில் மீண்டும் அதுவேதான். விதி 112 உயர் நீதிமன்றத்தின் மீதான உச்சநீதிமன்றத்தின் அதிகார வரம்பை வரையறை செய்யுமானால், உரிமை இயல் சம்பந்தமாக அது இருக்கும் போது, விதி 111 அன் பிரிவு (1) ன் உட்பிரிவு (இ) ன் அவசியம் என்ன? அவருக்கு என் பதில் இதுதான்: நம்மிடம் விதி 112 இருப்பினும் உரிமையியல் வழக்குகளுக்கு உட்பிரிவு (இ) இருக்க முடியுமானால் 112 விதி இருப்பினும் உட்பிரிவு (இ) இருப்பதற்கு என்ன ஆட்சேபணை இருக்க முடியும்? விதி 113 ஆவதைப் பொருத்தமட்டில் நினைவில் நிறுத்திக் கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால் மேல்முறையீடுகளை ஏற்றுக்கொள்வது சம்பந்தமான நிபந்தனைகளை விதிப்பதில் உச்சநீதிமன்றத்துக்கு முழு சுதந்திரம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த விஷயத்தில் அவர்கள் அதிகார வரம்புக்கு சட்டம் வேலிபோடவில்லை.*

***திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்:*** *உரிமை இயல் மேல் முறையீட்டில் நிபந்தனை உள்ளது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** *அது உண்மைதான். உச்சநீதிமன்றம் இந்த விதி 112 ஐ எப்படி விளக்கப்போகிறது என்பது எனக்குத் தெரியாது. அதை நாம் அவர்களுக்கு விட்டு விடுவோம். பிரிவி கவுன்சில் அளித்த விளக்கத்தைப் போல அவர்கள் விளக்கமளிக்கலாம், அல்லது அவர்கள் தேர்ந்தெடுக்கும் முறையில் விளக்கம் அளிக்கலாம். ஒரு வரம்புக்குட்பட்ட விளக்கமாகவோ அல்லது பரந்த விளக்கமாகவோ அது இருக்கலாம். வரம்புக்குட்பட்ட விளக்கத்தைக் கைக்கொண்டால் உட்பிரிவு (இ) சிறிது பயனுள்ளதாக இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. எதிர்பாராமல் உருவாகும் நேர்வுகளுக்கு, ஈடுகொடுக்க மேல்முறையீட்டு உரிமை இல்லாமல் மக்கள் தூக்கில் தொங்கப்படுவதை ஆட்சேபிக்கும் மனசாட்சியை திருப்திப்படுத்துகிறது எனது திருத்தம் என்று தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்கிறேன். குற்றவழக்கு மேன்முறையீட்டால் நிருவாகரீதியிலோ அல்லது வேறுவகையிலோ உச்சநீதிமன்றம் பெரும் பளுவைச் சுமக்க அவசியமில்லாத முறையில் அது சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது. எனது நண்பர்கள் தங்கள் திருத்தங்களைத் திரும்பப் பெற்றுக்கொண்டு என் திருத்தத்தை ஏற்றுக் கொள்வார்கள் என நம்புகிறேன்.*

**திரு. சி. சுப்பிரமணியம்** (சென்னை:பொது): மொழி வேறுபாடு களினால் தோன்றும் விளைவுகளைக் குறித்த விளக்கம் சம்பந்தமாக...

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஏற்கனவே காலம் கடந்துவிட்டது.

**திரு. அவைத் தலைவர்:** உயர்நீதிமன்றத்தின் மறுபரிசீலனை யில் தண்டனை அதிகரிக்கப்பட்டதால் முதல் தடவையாக மரண தண்டனை விதிக்கப்பட்ட வழக்குகளையும், விடுதலை செய்து வழங்கப்பட்ட தீர்ப்பை மாற்றியமைப்பதின் மூலம் மரண தண்டனை அளிக்கப்பட்ட வழக்குகளையும் ஏன் அவர் பிரித்துக் காட்டுகிறார் என்பதை மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தமது பதிலில் விளக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தண்டனை உயர்வை எதிர்த்து மேன்முறையீட்டுக்கான வழக்கு, விடுதலைக்கு எதிரான மேன்முறையீட்டு வழக்கிலிருந்து இரண்டு விதங்களில் மாறுபடு கிறது. உயர்நீதிமன்றம் தண்டனையை உயர்த்தும்போது அது அவனை முதல் தடவையாகத் தண்டிக்கவில்லை. குற்றவாளி ஏற் கனவே தண்டனை பெற்றவர். விடுதலை அளிக்கப்பட்ட வழக்குக்கு எதிரான மேல்முறையீட்டு வழக்கில் விசாரணை நீதிமன்றத்தின் முடிவை மாற்றி, உயர்நீதிமன்றம் குற்றவாளியைத் தண்டிக்கிறது. இரண்டாவது வேறுபாடு என்னவென்றால் தண்டனை அதிகரிக்கப் பட்ட வழக்குகளில் நடவடிக்கைகள் முழுவதும் வழக்கமான மேல் முறையீடாக மாற்றப்படுகிறது. எனவே தண்டனை அதிகரிக்கப் பட்ட நடவடிக்கையில் குற்றவாளி, மேல்முறையீட்டுக்கு குற்ற இயல் முறைத்தொகுப்பு சட்டப்படி சட்டரீதியான உரிமை பெறு கிறார். மேலும் தண்டனையின் உயர்வு சரியானதல்ல என்பதோடு மட்டுமன்றி தண்டனை அளித்ததே வழக்கின் நிலையின்படி சரியல்ல என்பதையும் நிரூபிக்கலாம். தண்டனை அதிகரிக்கப்பட்ட வழக்கு களில் ஒரு மேல்முறையீடு வாய்ப்பு ஏற்கனவே உள்ளது. அது அப்படியிருப்பதால் மேலும் மேல்முறையீடு தேவையில்லை. மூன்றாவதாக, கொண்டுவரப்பட்டுள்ள திருத்தம் தண்டனை அல்லது விடுதலையே. உச்சநீதிமன்றத்து மேல்முறையீட்டுக்கான உரிமை யின் அடிப்படையாகக் கொண்டுள்ளது. அது தண்டனை எப்படிப் பட்டது என்பதையோ தீர்ப்பின் தன்மை எவ்வாறானது என்பதையோ மேல்முறையீட்டு உரிமைக்கான அடிப்படையாக அங்கீகரிப்ப தில்லை.

**திரு. அவைத் தலைவர்:** ஒரு வழக்கில் விசாரணை நீதி மன்றம், தாக்கப்பட்டவர் மரணம் அடைந்திருப்பினும் அது படுகாயம் விளைவித்த வழக்கு என்று தீர்மானித்துக் குற்றவாளிக்குச் சிறை தண்டனை விதிக்கிறது என்று வைத்துக்கொள்வோம். மேல்முறை யீட்டில் உயர்நீதிமன்றம் மறுபரிசீலனையில் அது ஒரு கொலைக் குற்றம். வெறும் படுகாயம் விளைவித்த குற்றமன்று என்று மரண தண்டனை விதிக்கிறது என்று வைத்துக் கொள்வோம். முதல் தடவை யாக உயர்நீதிமன்றத்தால் தண்டனை, கொலைக் குற்றத்திற்காக விதிக்கப்படுகிறது. மரண தண்டனை முதல் தடவையாக அளிக்கப் படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என் திருத்தத் தில் கொடுக்கப்பட்டுள்ள வழிமுறைகளுக்கப்பால் தற்பொழுது நான் செல்ல விரும்பவில்லை. இம்மாதிரி நேர்வுகளுக்கும் ஏற்பாடு செய்யவேண்டுமென்று நாடாளுமன்றம் கருதுமானால், பிரிவு (2)ன் படி அதற்கு முழு சுதந்திரம் இருக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** அது வேறு விஷயம். அதை அவை முடிவு செய்யலாம்.

**திரு.வி.படாஸ்கர் (பம்பாய்:பொது):** மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் எண் 24க்கு நான் திருத்தம் எண் 25 முன் மொழிகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அதற்கு நேரம் இல்லை. நீங்கள் மிகவும் தாமதித்து விட்டீர்கள். இந்தக் கட்டத்தில் அதை அனுமதிக்க முடியாது.

பல்வேறு திருத்தங்களை இப்பொழுது கொண்டுவர உள் ளேன். டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் தங்கள் திருத்தங்களின் நோக் கத்தை நிறைவேற்றுகிறது என்று கருதுபவர்கள் தங்கள் திருத்தங் களை திரும்பப் பெற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. பெரும் பாலான மற்ற திருத்தங்கள் எல்லாம் திரும்பப் பெறப்பட்டன. திருத்தம் செய்யப் பட்ட விதி எண் 111-அ, அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது).

★ ★ ★

## விதி 164

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, நான் முன் மொழிகிறேன்:

> "விதி 164ன் உட்பிரிவு (1)ல் வகை செய்யப்பப்பட்டிருப்பதைத் தவிர' என்ற சொற்களுக்குப் பதிலாக 'வேறுவகையில் வகை செய்யப்பட்டிருப்பதைத் தவிர' என்ற சொற்களை மாற்றுவது."

(விவாதம் இன்றி திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தம் செய்யப் பட்ட விதி 164 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

## விதி 167- அ

*                    *                    *

[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: இந்த விவாதம் நடைபெறுகையில் பல்வேறுவகைப்பட்ட கருத்துகள் எழுப்பப் பட்டன. ஒவ்வொன்றாக அதைப் பரிசீலிக்கலாம் என நினைக் கிறேன். என் நண்பர் திரு.சித்வா சுட்டியதை நன்கு நான் செவிமடுத் திருந்தால், அவர் பதவிப் பிரமாணம் அல்லது உறுதிமொழி எடுப் பதைப் பற்றி விளக்கும் விதி 165ஐ பற்றிக் குறிப்பிட்டார்.

விதி 165ஐ பற்றி குறிப்பிடப்பட வேண்டிய விஷயம் என்ன வென்றால், விதி 165ன் வழிவகைகள் நிறைவேற்றப்படவில்லை யென்றால், அதனால் உறுப்பினர் பதவி இழப்பதில்லை. பதவி இடம் காலியாவதில்லை. விதி கூறுவதெல்லாம், உறுதிமொழி எடுக்க வில்லையென்றால் அவர் வாக்களிப்பிலோ, அவையின் நடவடிக்கை களிலோ பங்கெடுக்க முடியாது. அவ்வளவுதான். எனவே அதைக் குறித்து எந்தச் சிக்கலும் இருப்பதாகத் தெரியவில்லை.

திரு. ஆர்.கே. சித்வா: அது ஏன் தேர்தல் ஆணையத்துக்குச் செல்ல வேண்டும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: நான் அந்த விஷயத்திற்கு வருகிறேன். விதி 165ஐப் பொறுத்தவரை விதி 165க்கும் விதி 167க்கும் இடையேயான அடிப்படையான வேறுபாட்டை அவர் புரிந்திருப்பார் என நினைக்கிறேன். விதி 165ஐ பொறுத்தவரை உறுப் பினரின் பதவியிடம் காலியாவதில்லை. அவையின் நடவடிக்கை களில் பங்கெடுக்க முடியாத குறைபாடு மட்டுந்தான்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 14 1949, பக். 860.
2. அதே நூல், பக். 865-67.

இப்பொழுது என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்துள்ள முக்கியமான திருத்தத்திற்கு வருகிறேன். அது 167-அ விதியை பற்றியது. ஒரேயொரு விஷயத்தைத் தவிர, அந்தத் திருத்தம் சரியான அடிப்படையில் அமைந்துள்ளது. அந்த ஒரு விஷயத்தை இப்பொழுது விளக்குகிறேன். தகுதிக் குறைவைத் தீர்மானிக்கும் அதிகாரம் ஆளுநரிடம் விடப்பட்டதன் காரணம் என்னவென்றால் ஒரு காலியான இடத்துக்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கத் தொகுதியை அழைக்கும் அதிகாரம் யாருக்கு உள்ளதோ அவரே தொகுதியில் பதவி காலியாகக் காரணமாகும் தகுதிக் குறைபாட்டை தீர்மானிக்கும் அதிகாரம் உடையவர் என்ற பொதுவான விதியின், அடிப்படையில்தான். வெளிப்படையாகக் கூறப்படாவிட்டாலும், விதி 167ல் குறிப்பிடப்பட்டுள்ள தகுதிக் குறை பாடுகளின் காரணத்தினால் ஒரு தொகுதி காலியாக உள்ளதா, இல்லையா என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரம் அந்தத் தொகுதிக்கு வேட்பாளரைத் தேர்ந்தெடுக்கத் தொகுதியை அழைக்கும் அதிகாரம் யாருக்கு உள்ளதோ அவருக்கே இருக்கும் என்பது நன்கு புரிந்துள்ள விஷயமே, ஒரு தொகுதியில் வேட்பாளரைத் தேர்ந்தெடுக்க அழைக் கும் பொறுப்பு புதிய அரசியல் அமைப்பு சட்டத்தின்படி ஆளுநருக்கு உள்ளது என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. இந்த நிலையில் தகுதிக் குறைபாட்டால் ஒரு தொகுதியின் உறுப்பினர் பதவி இழக் கிறார் என்று அறிவிக்கும் அதிகாரம் ஆளுநரிடம் உள்ளது. இந்தக் காரணத்தினால், விதி 167-அ-ன் பிரிவைப் பொறுத்தவரையில் அதை ஏற்றுக்கொள்வதில் எந்தச் சிக்கலும் இருப்பதாகத் தெரியவில்லை.

இப்பொழுது பிரிவு (2) ஐ பார்க்கலாம். இது பரந்த அளவில் சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ளது. தகுதிக்குறைபாடு பிரச்சினை எதையும் ஆளுநரே தீர்மானம் செய்வார். இருப்பினும் தேர்தல் ஆணையத்தின் கருத்தைப் பெற்றுக்கொண்டு அந்தக் கருத்தின்படி அவர் நடவடிக்கை எடுக்க கடமைப்பட்டுள்ளார். விதி 167 ஐ கவனித்துப் பார்த்தால் (அ) விலிருந்து (ஈ) வரை குறிப்பிட்டுள்ள தகுதிக்குறைபாடுகள் தேர்தல் ஆணையத்தின் வரம்பெல்லைக்கு அப்பாற்பட்ட விஷயங்கள் என்பதை உறுப்பினர்கள் புரிந்து கொள் வார்கள். ஆகையால் இவை குறித்து ஆணையம் எந்த ஆலோசனை யும் ஆளுநருக்கு வழங்க முடியாது. உதாரணமாக ஒரு குறிப்பிட்ட நபர் ஊதியப்பதவியை வகிக்கிறாரா இல்லையா, அல்லது பித்துப் பிடித்தவர் என்று தகுதிவாய்ந்த நீதிமன்றத்தால் அறிவிக்கப்பட் டவரா, விடுவிப்புப் பெறாத நொடித்துப் போனாவரா, அல்லது ஓர் அயல்நாட்டிடம் பற்றுறவோ சார்புறவோ உடையவரா என்ற விஷயங்கள் தேர்தல் ஆணையத்தின் அதிகாரவரம்புக்கு அப்பாற்

பட்டது. ஆளுநருக்கு ஆலோசனை கூற அது சரியான அமைப்பு என்று கூறமுடியாது. ஆனால் உட்பிரிவு (உ) வைப் பொறுத்தவரை யில் தேர்தல் ஆணையத்தின் அதிகார வரம்புக்குட்பட்ட விஷயம் அது. ஏனெனில் (உ) உட்பிரிவியின்படி ஒரு வேட்பாளர் தேர்தல் சட்டத்தால் தகுதி இழக்கக்கூடிய செயல்கள் என்று குறிப்பிடப்பட் டுள்ள கையூட்டு அல்லது வேறு ஏதாவது சட்டத்துக்குப் புறம்பான நடவடிக்கைகளில் ஈடுபடுவதால் தகுதி இழக்கக்கூடும்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** தேர்தல் ஆணையம் தேவைப் படும் விசாரணையைச் செய்ய முடியாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இங்கு எந்தவித விசாரணையும் தேவையில்லை. ஒருவன் விடுவிக்கப்படாத நொடித்துப் போனவரா என்பதைத் தெரிந்துகொள்ள ஒரு விசாரணை தேவையில்லை. 167 அ விதியின் உட்பிரிவு சரியானதுதான் என்றா லும் அது விதி 167 ன் உட்பிரிவு (உ) ன் வழிவகைகளுக்குட்பட்டு இருக்கவேண்டும் என்று தாழ்மையாகத் தெரிவித்துக்கொள்கிறேன். உங்களுடைய அனுமதியுடன் (2) ஆம் பிரிவை திருத்தம் செய்ய முன்மொழிகிறேன். முந்தைய கடைசி விதியின் உட்பிரிவு (1) ன் உட்பிரிவு (உ) சம்பந்தமான தகுதிஇழப்பைப் பற்றிய பிரச்சினை யில் முடிவு எதையும் எடுக்கும் முன் ஆளுநர் தேர்தல் ஆணையத்தின் ஆலோசனையைப்பெற்று அந்த ஆலோசனையின்படி நடவடிக்கை எடுப்பார்.

**திரு. அவைத் தலைவர்:** திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி கொண்டு வந்த திருத்தத்தைப் படித்தபோது தேர்தல் நடப்பதற்கு முன் அல்லது தேர்தல் நடக்கும்போது நடைபெற்ற ஒரு வழக்கைப் பற்றிய தாக இருக்கவில்லை. தேர்தல் நடந்து முடிந்த பிறகு, சட்டமன்றத் தின் உறுப்பினரான பிறகு சில தகுதி இழப்புகளுக்கு ஆளாகும் நேர்வு களைப் பற்றியதாக உள்ளது. இவை தேர்தல் கமிஷனால் பரிசீலித்து முடிவெடுக்கப்படும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** உண்மையில் நடைபெறுவது என்னவென்றால், ஆட்சேபனை மனு தாக்கல் செய்த பிறகு, தேர்தல் நடைபெற்றபோது, தேர்தல் நடைபெற்ற பிறகு, உறுப்பினர் பதவியில் அமர்ந்தபிறகு, வேட்பாளர் ஏதாவது குற்றங் களை இழைந்துள்ளார் என்பதைத் தேர்தல் ஆணையம் கண்டுபிடிக் கலாம்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த மாதிரியான வழக்குகளைத் தேர்தல் ஆணையம் தீர்மானிக்க முடியாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். ஆனால் என்ன நடக்கிறதென்றால் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் உறுதி மொழி எடுத்துக் கொண்டவுடன், அவர் பதவியில் அமர உரிமை பெறுகிறார். அவர் அப்படித்தான் செய்கிறார், ஆனால் பிறகு அவரது எதிரி, தேர்தல் வழக்குத் தொடுக்க, தேர்தல் சட்டத்தின்படி நீதிமன்றம் அவர் குற்றம் இழைத்துள்ளார் என்று தீர்மானித்து அவரைப் பதவி இழக்கச் செய்கிறது. இதுவும் (உ) உட்பிரிவுயின் கீழ்வரும். ஒருவர் பதவி ஏற்ற பிறகு ....

**திரு. அவைத் தலைவர்:** இருவகையான தகுதி இழப்புகள் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. ஒருவர் உறுப்பினர் ஆவதற்கு முன்பு அல்லது தேர்தலின்போது சில தகுதி இழப்புக்கான செயல் களைப் புரிந்திருக்கலாம். இந்த மாதிரி வழக்குகளைத் தேர்தல் ஆணையம் முடிவு செய்ய முடியும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நாம் பிந்தையக் கட்டத்தில் எம்மாதிரி ஏற்பாடுகளைச் செய்கிறோம் என்பதைப் பொறுத்துள்ளது அது.

**திரு. அவைத் தலைவர்:** அவையில் பதவி ஏற்றபிறகு ஒருவர் தகுதி இழப்புக்கு உள்ளாகலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்குத்தான் (உ) உட்பிரிவு வழிசெய்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** பிறகு வேறு தகுதிக் குறைபாடு களும் நேரக்கூடும். அவர் மனநிலைபாதிக்கப்பட்ட பித்துப் பிடித் தவர் என்று அறிவிக்கப்படலாம் அல்லது விடுவிக்கப்படாத நொடிப்பு நிலையை அடையலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இங்கே அவை யெல்லாம் எடுத்தாளப்பட்டுள்ளன. அவையெல்லாம் உறுப்பினர் பதவியில் இருக்கும் உறுப்பினர்களைப் பற்றியதுதான்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** திருத்தத்தைப் படியுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இரண்டு வகைப் பட்ட தகுதிக் குறைபாடுகள் உள்ளன. வேட்பாளர் சம்பந்தப்பட்ட தகுதிக் குறைபாடுகள் அதாவது இப்படிப்பட்ட தகுதிக் குறைபாடுகள் உள்ளவர்கள் தேர்தலில் நிற்கக்கூடாது என்பது ஒன்று. பிறகு, அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு 167 பிரிவில் குறிப்பிட்ட

தகுதிக் குறைபாடுகளினால் அவையில் அமர முடியாத நிலை. இந்த இரண்டு விஷயங்களையும் நாம் குழப்பிக் கொள்ளக்கூடாது.

**மாண்புமிகு திரு.கே.சந்தானம்:** விதி 167 அ இரண்டையும் தீர்மானிக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது அப்படி இருக்கலாம். உங்களுக்கு விளக்குகிறேன். நாம் எந்த நடைமுறை களை கையாளப் போகிறோம் என்பதைப் பொறுத்துள்ளது அது. ஒரு வேட்பாளர் தேர்தலில் நிற்க தகுதி பெற்றவரா இல்லையா என்பது ஒரு பூர்வாங்கப் பிரச்சினையாகக் கருதப்படும் என்ற நடை முறையை பின்பற்றினால் விதி 167ன் படி அது ஒரு தகுதி இழப்பாக இருக்காது. அப்படியில்லாமல் இப்பொழுதுள்ள நடைமுறையைக் கையாண்டால் தேர்தல் சம்பந்தமான ஒரு வேட்பாளர் தேர்தலில் நிற்கத் தகுதிபெற்றவரா என்ற கேள்வி உட்பட எல்லாப் பிரச்சினைகளையும் எடுத்துக்கொள்ளப்படுமானால் விதி எண் 167 செயல்படுத்தப்படும். சில பூர்வாங்க பிரச்சினைகளை தேர்தல் ஆணையமே முடிவுசெய்ய அனுமதிக்கும் சில வழிவகைகளைச் செய்யவேண்டுமென்பதே வரைவுக்குழுவின் எண்ணமும் என் எண்ணமுமாக உள்ளது. தேர்தல் சரியான முறையில் நடத்தப்பட்டதா, இல்லையா என்பது மட்டுமே தேர்தல் பிரச்சினையாக இருக்கும். இன்றைக்கு எல்லாமே ஒரே கூட்டாக உள்ளன.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** பிறகு, திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி யின் திருத்தம்.

*திருத்தப் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2441க்கு பதிலாக பின்வரு பவற்றைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:*

*விதி 167க்கு பின், பின்வரும் புதிய விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:-*

*உறுப்பினர்களின் தகுதிக் குறைபாடு பற்றிய முடிவு*

*167 - அ ஒரு மாநில சட்டமன்ற அவை ஒன்றின் உறுப்பினர் கடைசி முந்தைய விதியின் பிரிவு (1) ல் குறிப்பிடப்பட்டுள்ள தகுதிக் குறைவுக்கு உள்ளாகி விட்டாரா என்ற கேள்வி எழுமானால் அந்தப் பிரச்சினை ஆளுநரின் கவனத்திற்கும் முடிவுக்கும் அனுப்பப்பட வேண்டும். அவருடைய முடிவே இறுதியானது.*

(2) இத்தகைய பிரச்சினைமீது ஏதாவது முடிவு எடுக்கும்முன் ஆளுநர் தேர்தல் ஆணையத்தின் கருத்தைப் பெற்றுக்கொண்டு அந்தக் கருத்திற்கிணங்க செயல்படுவார்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

புதிய விதி 167 அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தம் செய்யப்பட்ட விதி 167-அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).

★ ★ ★

## விதி 203

[1]**திரு. அவைத் தலைவர்:** நாம் விதி 203ஐ எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது ஒத்தி வைக்கப்பட வேண்டும்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** (203) (2) (ஆ) இந்தக் குறிப்பிட்ட உட்பிரிவு வைத்துக் கொள்ளப்பட வேண்டுமா அல்லது மாற்றப்பட வேண்டுமா என்ற கேள்வி உள்ளது. நமக்கு அதற்கு சிறிது நேரம் தேவைப்படுகிறது. நாளைக்கு அது தயாராகிவிடும்.

★ ★ ★

## புதிய விதி-209-அ

[2]**திரு. அவைத் தலைவர்:** சில புதிய விதிகள் கொண்டு வரப்பட்டுள்ளன. எண் 209 அ.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 209-அ ஒத்தி வைக்கப்பட வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** திரு. சிபன்லால் சாக்சேனா ஒரு விதியை கொண்டுவர முன்னறிவிப்புக் கொடுத்துள்ளார்.

**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** அதையும் நாம் ஒத்தி வைக்கலாம்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 15 1949, பக். 873.
2. அதே நூல், பக். 873.

## விதி 203

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது) திரு. அவைத் தலைவர் அவர்களே, நான் முன்மொழிகிறேன்:

''விதி 203ல் பக்க ஓரத் தலைப்பில் உள்ளதற்குப் பதிலாக பின்வருவதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

''எல்லா நீதிமன்றங்களையும் கண்காணிப்பதற்கான உயர்நீதிமன்றத்தின் அதிகாரம்.''

மேலும் இதையும் முன்மொழிகிறேன்:

''விதி 203 ன் பிரிவு (2) ல் உள்ள 'உயர் நீதிமன்றம்' என்ற சொற்களுக்கு முன்பு 'மேலேகண்ட வழிவகைகளின் பொதுத்தன்மைக்கு பாதகமின்றி', என்ற சொற்களைச் சேர்க்கவேண்டும். மேலும் நான் முன்மொழிகிறேன்:-

''திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் எண் 2664 சம்பந்தமாக (1) விதி 203 ன் பிரிவு (1) ல் ''அனைத்து நீதிமன்றங்களும்' என்ற சொற்களுக்குப் பிறகு 'மேலும் தீர்ப்பாயங்கள்' என்ற சொற்களைச் சேர்க்கவேண்டும்.

(11) விதி 203 ன் பிரிவு (2) ன் உட்பிரிவு (ஆ) நீக்கப்படுகிறது.''

★ ★ ★

திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன.

★ ★ ★

(மேற்கூறிய திருத்தங்களால் திருத்தப்பட்ட விதி 203 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

## விதி 270

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா நான் முன்மொழிகிறேன்:

திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தங்கள் எண் 2975 மற்றும் எண் 2976 சம்பந்தமாக விதி 270 ல் 'சொத்துக்களும், பொறுப்புகளும்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'சொத்துக்களும்,. பொறுப்புகளும் மற்றும் கடப்பாடுகளும்' என்ற சொற்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 15 ஜுன் 1949, பக்கம் 875.
2. அதே நூல் பக். 877.

இப்பொழுது திரு நஜிருத்தீன் அகமத் கொண்டுவந்த திருத் தத்தைப் பொறுத்தவரையில் புதிய அரசியல் அமைப்புச் சட்டத் தின்படி உருவாகப்போகும் அரசைக் குறிக்கவே இந்திய அரசு என்ற சொற்களை நாம் உபயோகிக்கிறோம் என்பதை அவர் மறந்து விட்டதாகத் தெரிகிறது என்று கூறலாம் என நான் நினைக்கிறேன். அதேநேரத்தில் டொமினியன் இந்திய அரசு என்பது தற்பொழுதுள்ள அரசை குறிப்பிட உபயோகிக்கப்படும் சொற்றொடராக உள்ளது. அவருடைய திருத்தத்தை ஏற்றுக்கொண்டால், இந்திய அரசு இந்திய அரசின் சொத்துக்கள், பொறுப்புகள், கடப்பாடுகள் ஆகியவற்றை எடுத்துக்கொள்கிறது என்று ஆகும். இப்படிச் சொல்வது அபத்த மாகத் தெரியும். எனவேதான் இப்பொழுது உள்ள சொற்களையே தொடர்ந்து வைத்துக்கொள்வதே பொருத்தமாக இருக்கும்.

**மாண்புமிகு திரு.கே.சந்தானம்** (சென்னை: பொது): இந்த விதியை அவசர கோலத்தில் நிறைவேற்றுகிறோம் என்று நான் அஞ்சுகிறேன். இந்திய சமஸ்தானங்களை இந்திய மாகாணங்களுக்கு இணையாக கொண்டுவர நாம் முயற்சிக்கும் அதே நேரத்தில் பழைய மாகாணங்கள் தொடரும் என்ற நிலையில் நாம் வழிவகைகள் செய்து வரும் அதேவேளையில் சமஸ்தானங்களுக்கு எந்த ஏற்பாடுகளும் எடுக்கப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** உங்களுடைய திருத்தம் என்ன?

**மாண்புமிகு திரு. கே.சந்தானம்:** நான் எந்தத் திருத்தமும் கொண்டுவரவில்லை.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, இந்த விதி இத்தகைய பெரும் விவாதத்தை ஏற்படுத்தும் என்று நான் நினைக்கவில்லை. தவறான கருத்துகளை, ஐயப்பாடுகளை இடர்ப்பாடுகளை நீக்க சில கருத்துகளை எடுத்துரைப்பது அவசியம் என்று நான் உணர்கிறேன்.

அரசியல் அமைப்பு சட்டத்தில் 270 ஆம் விதியின் அவசியந் தான் என்ன என்பதே முதலில் கேட்கப்படும் கேள்வியாக உள்ளது.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 15 ஜூன் 1949, பக்கம் 883 - 85.

அதற்கான பதில் மிகவும் எளிமையானதுதான். 1935 ஆம் ஆண்டு சட்டத்திற்கு முன்பு இந்திய அரசாங்கத்துக்குச் சொந்தமான உடைமைகளும், கடப்பாடுகளும், சொத்துக்களும், மன்றத்தில் உள்ள அரசுச் செயலர் என்ற கூட்டு நிறுவனத்தின் பராமரிப்பில் வைக்கப்பட்டிருந்தது. இந்தியாவின் சொத்துக்களையும் வருவாய் ஆதாரங்களையும் மன்றத்தில் உள்ள அரசுச் செயலர் பராமரித்து வந்தது. இந்திய அரசாங்கத்தின் சார்பாக ஒப்பந்தம் செய்து கொள்ளப்பட்ட எல்லா கடப்பாடுகளுக்கும் அதுவே பொறுப்பாக இருந்தது. 1935 ஆம் ஆண்டுக்கு முன்பு இந்திய அரசாங்கம் ஒரு ஒற்றை அரசாக இருந்தது. இந்திய அரசாங்கத்துக்குச் சொந்தமான சொத்துகள் மற்றும் மாகாணங்களுக்குச் சொந்தமான சொத்துகள் என்ற வேறுபாடு இல்லாமல் இருந்தது. சொத்துக்கள் அனைத்தும் செக்ரடரி ஆப் ஸ்டேட் இன் கவுன்சில் என்று அழைக்கப் பட்ட ஒரு தனித்த கூட்டு நிறுவனத்தின் பொறுப்பில் இருந்தது. அதன் மீது வழக்குத் தொடுக்க முடியும் என்பதுடன் அதுவும் வழக்குத் தொடுக்கும் உரிமை பெற்றிருந்தது. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசுச் சட்டம் மிகவும் குறிப்பிடத்தக்க மாற்றத்தைக் கொண்டு வந்தது. இந்திய அரசாங்கத்தின் சார்பாக மன்றத்தில் உள்ள அரசுச் செயலர் பராமரித்து வந்த உடைமைகளும் கடப்பாடுகளையும் அது இரண்டாகப் பிரித்தது. இந்திய அரசாங்கத்துக்குப் பிரித்தளிக்கப்பட்ட உடைமைகளும், கட்டுப்பாடுகளும் மற்றும் மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்ட உடைமைகளும், கடப்பாடுகளும், சொத்துக்களும் என்று இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. இந்திய அரசாங்கத்தின் மீதான தமது அதிகாரத்தை, அரசாங்கச் செயலர் முற்றிலும் துறக்காத நிலையில், இந்திய அரசாங்கத்துக்கும் மற்றும் பல மாகாணங்களுக்கும் இடையே பிரிக்கப்பட்ட சொத்துக்கள் இந்திய அரசாங்கத்தின் சார்பில் மேன்மை தங்கிய மன்னர் பொறுப்பில் இருக்கும் என்பதுடன் மாகாணங்களின் சார்பாகவும் மன்னர் பொறுப்பிலேயே இருக்கும் என்று இந்திய அரசுச் சட்டத்தின் பிரிவு 172 எடுத்துரைக்கிறது. இது இவ்விதம் இருக்கையில், உடைமைகளும், கடப்பாடகளும், சொத்துக்களும் பிரிக்கப்பட்டு வெவ்வேறு அமைப்புகளுக்கும் இந்திய அரசாங்கத்துக்கும் ஒதுக்கப்பட்டன. இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம் நாம் என்ன செய்கிறோம் என்பதைப் புரிந்து கொள்வோம். இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை நிறைவேற்றுவதன் மூலம், 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை ரத்து செய்கிறோம். ரத்து செய்யப்பட்ட சட்டங்களின் பட்டியலைப் பார்த்தால் 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டமும் குறிப்

பிட்டிப்பதைக் காணமுடியும். உடைமைகள், கடப்பாடுகள் மற்றும் சொத்துக்கள் சம்பந்தமாக வழிவகை செய்துள்ள இந்திய அரசாங்கச் சட்டத்தை ரத்து செய்யும்போது, இந்திய அரசாங்கச் சட்டம் ரத்து செய்யப்பட்டாலும் பல மாகாணங்களுக்குச் சொந்தமாக உள்ள சொத்துக்கள் தொடர்ந்து அவைகளுக்கே உரித்தாக இருக்கும் என்பதை அரசியல் அமைப்புச் சட்டத்தில் எங்கேயாவது குறிப்பிட வேண்டும் என்பது தெளிவானதே. இல்லையென்றால் நடப்பது இதுதான். 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் ரத்து செய்யப்பட்டபின், உடைமைகள் மற்றும் கடப்பாடுகள் சம்பந்த மாக எந்தவித வழிவகைகளும் இருக்காது. ஒரு சட்டத்தை ரத்து செய்யும்போது சாதாரணமாக நாம் எடுக்கும் நடவடிக்கையைத் தான் இப்பொழுது நாம் எடுத்துள்ளோம். சில சட்டங்கள் ரத்து செய்யப்பட்டாலும் அதனால் எடுக்கப்பட்ட செயல்பாடுகளில் மாற்றம் இருக்காது. அதே நிலைதான் இப்பொழுதும். இந்த 270 ஆவது விதி நடைமுறையில் கூறுவது என்னவென்றால் 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் ரத்து செய்யப்பட்டாலும் பல்வேறு அமைப்புகளின், மற்றும் மத்திய அரசின் உடைமைகளும் கடப்பாடுகளும், தொடர்ந்து முன்போலவே தொடர்ந்து நீடிக்கும். வேறு சொற்களில் அதைக் கூறுவ தென்றால், அவைகள், 1935 ஆம் ஆண்டு சட்டத்தால் உருவான இந்திய அரசு மற்றும் முந்தைய மாகாணங்களின் இருந்த நிலைமையின் தொடர்ச்சியே. இந்தப் பிரிவு ஏன் அவசியம் என்பதை அவை புரிந்து கொண்டிருக்கும் என நம்புகிறேன்.

இந்திய சமஸ்தானங்களின் உடைமைகள், கடப்பாடுகள் மற்றும் சொத்துக்கள் பற்றி 270 ஆம் விதி ஒன்றும் கூறவில்லையே என்ற கேள்வி எழுப்பப்பட்டுள்ளதைப் பார்க்கலாம். இரண்டு விஷ யங்களைத் தனித்தனியாகப் பார்க்க வேண்டும். நிலப்பகுதி மற்றும் வேறு எந்த விஷயத்திலும் மாற்றம் செய்யப்படாத ஒருங்கிணைந்த பகுதியாக அரசியல் அமைப்புச் சட்டத்தில் இணைக்கப்படவுள்ள இந்திய சமஸ்தானங்களைத் தனியாகப் பார்க்கவேண்டும். உதாரண மாக மைசூரை எடுத்துக் கொள்ளுங்கள். இன்றைக்கு சுதந்திர சமஸ் தானமாக உள்ள அது ஒருங்கிணைந்த சமஸ்தானமாக ஒருவேளை எந்த வித மாற்றமுமின்றி அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப் படும். இந்திய மாகாணங்களுடன் சமஸ்தானங்கள் ஒன்றிணைவது இரண்டாவது எடுத்துக்காட்டாகும். இந்திய மாகாணங்களுடன் இணையாது பல சமஸ்தானங்கள் ஒன்றிணைந்து ஒரு பெரிய மாநில மாவது மூன்றாவது எடுத்துக்காட்டு ஆகும். மைசூரைப் போன்ற ஒரு

சமஸ்தானத்தைப் பொறுத்தவரையில், தற்போதைய மைசூர் அரசின் உடமைகள், கடப்பாடுகள் மற்றும் சொத்துக்கள் தொடர்ந்து இருக்கும் என்று 270 ஆம் விதியைப் போன்ற விதி ஒன்று மைசூர் அரசின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. எனவே 270 ஆம் விதியில் இம்மாதிரியான சமஸ்தானங்கள் சம்பந்த மான எடுத்துக்காட்டுகளுக்கு வழிவகை செய்ய வேண்டிய அவசிய மில்லை. அதே போன்று ஒன்றாக இணையும் சமஸ்தானங்கள், 270 ஆம் விதியில் வகைசெய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளைச் சந்தேகத் துக்கு இடமின்றி தங்கள் ஒப்பந்த பத்திரத்தில் இடம்பெறச் செய் வார்கள். பல்வேறு சமஸ்தானங்களின் உடைமைகளும் கடப்பாடு களும் அந்த சமஸ்தானங்கள் புதிதாக ஒன்றிணைந்து உருவாகும் மாநிலத்தின் (சமஸ்தானத்தின்) உடைமைகளாகவும், கடப்பாடுகளாக வும் தொடர்ந்து இருந்துவரும் என்று அவைகளுக்கிடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தம் நிச்சயமாக உறுதிப்படுத்தும்.

இறுதியாக மாகாணங்களுடன் இணைந்துள்ள சமஸ்தானங் களின் நிலையைப் பார்ப்போம். அதைப் பொறுந்தவரையில் 270 ஆம் விதியால் எந்தச் சிக்கலும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஒரு யதார்த்த நிலையைப் பார்ப்போம். ஒரு சமஸ்தானம் இந்திய மாகாணம் ஒன்றுடன் சேரும் நிலையில் நிச்சயமாக அடுத்து மாகா ணத்துடன் இணைந்துள்ள சமஸ்தானத்துக்கும் அந்த மாகாணத்துக் கும் இடையே, இணைந்துள்ள சமஸ்தானத்தின் உடைமைகளும், கடப்பாடுகளும் எப்படி கையாளப்பட வேண்டும் என்று ஏதாவது உடன்பாடு இருக்கும். அவைகளை கணக்கில் எடுத்துக் கொள்ளா மல் விட்டுவிடுவதா, அல்லது இணைந்த சமஸ்தானம் கடப்பாடுகளை தானே எடுத்துக்கொள்ளுமா அல்லது அந்த சமஸ்தானம் இணைந்த இந்திய மாகாணம் அந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்ளுமா என்பதைக் குறித்து அந்த ஒப்பந்தம் குறிப்பிடும். எப்படி இருப்பினும் இந்த விதி கூறுவது என்னவென்றால் இந்த அரசியல் அமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வரும் தேதியிலிருந்து இந்தச் சொற்கள் முக்கியமானது, ஜனவரி 26ல் அமலுக்கு வரக்கூடும் என்று தற்பொழுது நான் எடுத்துக் கொள்கிறேன். அதற்கு முந்திய தேதியில் இந்திய மாகாணத்துக்கும் அதனுடன் இணைந்த சமஸ்தானத்துக்கும் இடையே ஒப்பந்தம் ஏற்பட்டால், அரசியல் அமைப்புச் சட்டத் தின் ஆரம்பத்திலிருந்து பொறுப்பு மாகாணத்தையே சாரும். ஆனால் எடுத்துக்காட்டாக, அரசியல் அமைப்புச் சட்டம் அமலுக்கு வருவ தற்கு முன்பு எந்த ஒப்பந்தமும் ஏற்படவில்லை என்றால், மத்திய அரசும் மாகாண அரசுகளும் தங்களுக்கிடையயேயும் அல்லது

இதர அமைப்புகளுக்கிடையேயும் அல்லது சமஸ்தானம் அல்லது எந்த அமைப்புகளுடனும் புதிய கடப்பாடுகளை உருவாக்க பூரண உரிமை பெற்றுள்ளன. எனவே அரசியல் அமைப்புச் சட்டம் அமலுக்கு வந்தபிறகு நடைபெறும் எந்த நடவடிக்கையும் அரசியல் அமைப்புச் சட்டப்படி மாகாணங்கள் செய்துகொள்ளும் ஒப்பந்தத் தின்படி ஒழுங்குப்படுத்தப்படும். இந்த ஒப்பந்தத்தை அவர்கள் செய்து கொள்வதில் எந்தக் கட்டுப்பாடும் இல்லை. எனவே அதற்காக நாம் எந்த வழிவகைகளையும் செய்ய வேண்டிய அவசிய மில்லை. வேறுவகைப்பட்ட சமஸ்தானங்களைப் பொறுத்தவரை யில் நான் ஏற்கனவே கூறியபடி மைசூர் போன்ற சமஸ்தானங்கள் சம்பந்தமாக அது தன் சொந்த ஏற்பாட்டை செய்து கொள்ள உரிமை பெற்றுள்ளது. அந்த ஏற்பாடுகள் செய்யப்பட்ட பிறகு அதை நாம் பகுதி 111ல் உள்ள சமஸ்தானங்கள் சம்பந்தமான சிறப்புப் பகுதியில் இணைத்துக் கொள்வோம். எனவே 270 ஆம் விதியைப் பொறுத்த வரையில் எந்தவிதச் சிக்கலும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. தற்பொழுது உள்ளபடியே அதை நிறைவேற்றலாம் என நினைக் கிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** இங்கு குறிப்பிடப்பட்டுள்ள ஒப்பந்தம் நிதி சம்பந்தமானது மட்டுந்தானா அல்லது நிலப்பரப்பு சம்பந்த மானதும் கூடவா என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது உடைமை கள், கடப்பாடுகள், சொத்துகள் ஆகியவை பற்றிக் கூறுகிறது. எடுத்துக்காட்டாக ஒரு மாகாணம் ஏதாவது சமஸ்தானத்தை இணைத்துக் கொண்டு, மன்னருக்கு ஒரு குறிப்பிட்ட தொகை ஓய் வூதியம் கொடுப்பதாகப் பொறுப்பேற்றுக் கொண்டால், விதி 270ன் படி அது கடப்பாடாகும். நிலப்பரப்பு மாற்றங்கள் சம்பந்தமான விஷயங்கள், மற்ற வழிவகைககளால் தீர்மானிக்கப்படும்.

**திரு. எச்.வி. காமத்:** உரிமைகள் என்ற சொ‍, பக்க ஓரத் துணைத் தலைப்பாகக் குறிக்கப்பட்டுள்ளது, விதியில் அது சேர்க்கப் படாதது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** வரைவுக்குழு இதைக் கவனத்தில் எடுத்துக்கொள்ளும்.

**திரு.பி.தாஸ்:** வெளிநாடுகளில் இந்தியாவின் உடைமைகள் சம்பந்தமாக குறிப்பாக இங்கிலாந்தில் உள்ள சொத்துக்கள், விதி 270 ல் குறிப்பிடப்பட்டுள்ள சொத்துக்கள் விவரத்தில் ஏன் சேர்க்கப்படவில்லை என்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அந்தச் சொத்துக்கள் இந்தியா பாகிஸ்தான் பிரிவினையைப் பொறுத்துள்ளன. உதாரணமாக இந்திய ஆபிஸ் நூலகம் முதலியவைகள் குறித்து விவாதம் நடைபெற்று வருவதாகத் தெரிகிறது.

**திரு.பி.தாஸ்:** பிரிட்டிஷ் ஸ்டெர்லிங் இருப்பைப் பற்றி முடிவு என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** எனது மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு என்னை விட இதைப் பற்றி நன்கு தெரியும்.

*(டாக்டர் அம்பேத்கரின் ஒரே ஒரு திருத்தத்தால் திருத்தம் செய்யப்பட்ட விதி 270 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).*

## விதி 271

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

"விதி 271ல்

(i) 'அந்த மாநில அரசின் நோக்கத்திற்காக' என்ற சொற்கள் இரண்டு தடவை வரும் இடங்களிலிருந்து அவற்றை நீக்க வேண்டும்;

(ii) 'இந்திய அரசின் நோக்கத்திற்காக' என்ற சொற்கள் இரண்டு தடவை வரும் இடங்களிலிருந்து அவற்றை நீக்க வேண்டும்."

*(திருத்தம் நிறைவேற்றப்பட்டது. திருத்தப்பட்ட விதி 271 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

## புதிய விதி 271 அ

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 15 1949, பக். 887.
2. அதே நூல், பக். 887.

ஒன்றியப்பகுதியினைச் சார்ந்த கடலினுள் அடங்கிய நிலப்பரப்பு, உலோகப் பொருள்கள் மற்றும் விலைமதிப்புள்ள பொருள்கள் எல்லாம் ஒன்றியத் திடம் இருக்கும்.

*விதி 271க்குப் பிறகு, பின்வரும் விதியை சேர்த்துக் கொள்வது 271 அ இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடலினுள் அடங்கிய நிலப்பரப்பு, உலோகப்பொருள்கள் மற்றும் விலைமதிப்புள்ள பொருள்கள் ஒன்றியத்திடம் இருக்கும், மற்றும் அதன் தேவைகளுக்குப் பயன்படுத்தப்படும்.*

இது ஒரு முக்கியமான விதி. தற்சமயத்தில் கடல் ஆதிக்கம் பெற்றுள்ள பல சமஸ்தானங்களையெல்லாம் நாம் இந்திய ஆட்சிப் பகுதியில் இணைக்கப்போகிறோம். இந்த சமஸ்தானங்கள் தங்கள் ஆட்சிப் பகுதியைச் சேர்ந்த கடல் பகுதியிலுள்ள எந்தப் பொருளையும் தங்களுக்குச் சேர்ந்ததென்று பிரச்சினையை எழுப்பலாம். இந்த மாதிரியான வாதம் எதிர்காலத்தில் எழுப்பப்படுவதைத் தடுக்கவே இந்த விதியை இணைக்க வேண்டியது அவசியமாகிறது.

★ ★ ★

[1]**திரு.எச்.வி.காமத்:** மீண்டும், 'இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடல் பகுதிகளுக்குட்பட்ட கடலடிநிலங்கள் அனைத்தும், உலோகப் பொருள்களும், மதிப்புமிக்க பொருள்களும் யாவையும்' என்று அந்த விதி கூறுகிறது.

பட்டியல் 1 ல் நாம் மாநிலங்களை மற்றும் இந்திய ஆட்சிப் பகுதியை வரையறுத்துக் கூறியுள்ளோம். ஆனால் அரசியல் அமைப்பு சட்டத்தில் எந்த இடத்திலும் இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடல்பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இதைப் பொறுத்த வரை அரசியல் அமைப்புச் சட்டம் மௌனம் சாதிக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** சர்வதேசச் சட்டத்தில் அது நன்கு அறிமுகமான சொற்றொடராகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தனியாக அதை வரையறுத்துக் கூற வேண்டிய அவசியமில்லை.

★ ★ ★

[2]**திரு.எச்.வி.காமத்:** இந்த விதி சம்பந்தமாக அவை வாக்களிக்கும் முன்பு டாக்டர் அம்பேத்கர் நிலையை தெளிவாக்குவார் என்று நம்புகிறேன்.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 15 1949, பக். 887.
2. அதே நூல், பக். 888.

**திரு. ஏ. தாணுபிள்ளை (திருவிதாங்கூர் சமஸ்தானம்):** தலைவர் அவர்களே, இப்பொழுது சொல்லாக்கம் செய்யப்பட்டுள்ள வடிவத்தில் இந்த வழிவகைக்கு அவசியம் ஏன் என்பதை டாக்டர் அம்பேத்கர் அவைக்கு விளக்குவார் என்று நம்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் குறிப்பிட்டு, எதை விளக்க வேண்டுமென்பதைத் தெரிந்து கொள்ளலாமா?

★ ★ ★

[1]**திரு.எம். அனந்தசயனம் அய்யங்கார்:** நான் கூறுகிறேன். இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடற்பகுதியுள் அடங்கிய நிலப் பரப்பு, உலோகப் பொருள்கள் மற்றும் விலைமதிப்புள்ள பொருள்கள் யாவும் ஒன்றியத்திடம் இருக்கும் மற்றும் அதன் நோக்கத்துக்காக பயன்படுத்தப்படும்.

**ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர்:** காற்றைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

**மற்றொரு மதிப்பிற்குரிய உறுப்பினர்:** விண்ணுலகைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, இந்த விதியை நான் முன்மொழிந்தபோது ஏன் இந்த விதி அவசியம் என்று நாங்கள் கருதுகிறோம் என்பதற்கான காரணத்தை என் உரையில் குறிப்பிட்டேன். மீன் பிடிக்கும் உரிமையை இது உள்ளடக்கியிருக்குமோ என்ற ஐயப்பாட்டை என் மதிப்பிற்குரிய நண்பர் திரு. தாணுப் பிள்ளை எழுப்பியுள்ளார். மீன்பிடித்தல், மீன்துறை, பட்டியல் 11 ல் பதிவு 29ல் சேர்க்கப்பட்டுள்ளது என்ற விஷயத்தை அவருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை:** மற்ற விஷயங்களைப் பற்றியும் எனக்குக் கருத்து வேறுபாடு இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதற்கு இப்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 15 1949, பக். 891-93.

பொழுது வருகிறேன். இப்பொழுது விளக்கம் அளிக்கிறேன். பட்டியல் எண் 11 ல் மீன் துறையை பதிவு செய்திருப்பதன் பொருளே, மத்திய அரசு, ஆட்சிப் பகுதியின் கடல் சார்ந்த பகுதியில் அதிகார வரம்பு பெற்றிருந்தாலும், அது பட்டியல் 11 பதிவு 29க்கு உட்பட்டிருக் கும். எனவே மீன்துறை, மாநில விஷயமாகவே, இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடல்பகுதியிலும் இருக்கும். இப்பொழுது எனது மதிப்பிற்குரிய நண்பருக்கு மிகவும் தெளிவாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

முதல் கேள்வியைப் பொறுத்தவரையில் நிலைமை இது தான். எனது மதிப்பிற்குரிய நண்பர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் தெரிவித்தபடி ஆட்சிப்பகுதியைச் சார்ந்த கடல் பகுதி அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்குச் சொந்தமா அல்லது அதன் பல்வேறு உறுப்பு மாகாணங்களுக்குச் சொந்தமா என்ற கேள்வி உள்ளது. ஏனெனில் அமெரிக்க அரசியல் அமைப்புச் சட்டப்படி வெளிப்படையாகக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களையே அது கொண்டுள்ளது. இன்னும் ஐக்கிய நாடுகளில் ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடல் பகுதிகள் மத்திய அரசுக்கு சொந்தமானதா அல்லது மாகாணங் களுக்கா என்பது ஒரு விவாதத்திற்குரிய கேள்விதான். இது ஒரு முக்கியமான கேள்வி என்று நாங்கள் கருதியதால், அதை பரந்த கற்பனைக்கோ அல்லது எதிர்கால வழக்காடும் பொருளாகவோ விட்டுவிட விரும்ப வில்லை. இப்பொழுதே அந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவெடுக்க தீர்மானித்து இந்த விதி அறிமுகப்படுத்தப்பட் டுள்ளது. ஒரு நாட்டின் ஆட்சி எல்லை என்பது அதன் யதார்த்த மான நிலப்பரப்பின் எல்லையில் முடிந்து விடுவதில்லை, அதற் கப்பால் கடலில் மூன்று மைல் வரை உள்ளது என்பதே சர்வதேசச் சட்டத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட கோட்பாடாகும். நமக்குள்ள அச்சமெல்லாம் அந்த உண்மையை, நான் மறைக்க விரும்ப வில்லை. கடலாதிக்கம் பெற்ற கொச்சி, திருவிதாங்கூர் அல்லது கச்சு போன்ற சில சமஸ்தானங்கள், அரசியல் அமைப்பு சட்டத்தில் நாம் கொண்டுவர உத்தேசித்துள்ள குறிப்பிட்ட வழிவகை இல்லை யென்றால் இவ்வாறு அறிவிக்கக்கூடும்: நாங்கள் மத்திய அரசுடன் இணைந்ததின் மூலம் மத்திய அரசுக்கு எங்கள் நிலப்பகுதியில் அதிகார வரம்பு உள்ளது. ஆனால் எங்கள் ஆட்சிப் பகுதியின் கடல் சார்ந்த நிலப்பரப்பு மத்திய அரசின் அதிகார வரம்பிற்குட்பட்ட தல்ல. அந்த நிலப்பரப்பு மற்றும் தண்ணீர் எல்லாம் எங்களுடைய

அதிகாரத்திலேயே இருக்கும். அதாவது மத்திய அரசில் நாங்கள் இணைந்து கொள்வதற்கு முன்பு இருந்த நிலையே தொடரும். எனவேதான் நாங்கள் அரசியல் அமைப்பு சட்டத்தில் தெளிவாகக் கூறவிரும்புகிறோம்; கடல் ஆதிக்கம் பெற்ற சமஸ்தானம் ஏதாவது இந்திய ஒன்றியத்தில் சேரும்போது அந்த சமஸ்தானத்தின் கடல் பகுதி மத்திய அரசின் கட்டுப்பாடுகளுக்குள்ளாகும். இந்த மாதிரி யான கேள்வி எந்தவித விவாத்திற்கும், நீதிவிசாரணைக்கும் உள்ளாக முடியாது. எனவேதான் இந்த ஏற்பாட்டை நாம் விதி 271-அ-ல் கொடுக்க விரும்பினோம்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** தண்ணீரின் உடைமையைப் பற்றி என்ன கூறுகிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எதற்காகத் தண்ணீரை சொந்தம் கொண்டாடுகிறீர்கள்? மேலேயுள்ள ஆகாயத்தையும் சொந்தம் கொண்டாட விரும்புவீர்கள்?

**திரு.எம்.அனந்தசயனம் அய்யங்கார்:** உப்பு முதலியவை தயாரிப்பதற்கு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அந்தப் பிரதேசத்தில் உங்கள் சட்டம் அமலிலிருக்கும். நிலப்பகுதியிலிருந்து மூன்று மைல் பகுதிவரை நீங்கள் இயற்றும் சட்டம் செயல்படும். இதனால் கிடைப்பது அதுவே; அதைத்தான் விரும்பினோம்.

**திரு. மகாவீர் தியாகி:** தண்ணீர் சேர்க்கப்படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சர்வதேசச் சட்டத்தின்படி ஒரு நாட்டின் ஆட்சிப்பகுதி அதனுடைய நிலப்பரப்பு மட்டுமன்றி அதற்கு அப்பால் மூன்று மைல்களும் உள்ளடங்கியது. நீங்கள் நிறைவேற்றும் எந்தச் சட்டமும் அந்தப் பகுதியிலும் செயல்படும்.

**திரு. மகாவீர் தியாகி:** தண்ணீரைப் பற்றி என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** காற்றுக்கு கீழுள்ள அனைத்தும் நீங்கள் பெறுவீர்கள்.

**திரு.மகாவீர் தியாகி:** மூன்று மைல்களுக்கு அப்பாலுள்ள தண்ணீரைப் பற்றிய முடிவு என்ன?

**திரு.எம்.அனந்தசயனம் அய்யங்கார்:** மற்றதைப் போன்றே தண்ணீரும் ஒரு சொத்தாக மதிக்கப்படுகிறது என்பதையும் அதனால் பல தகராறுகள் தோன்றியுள்ளதையும் டாக்டர் அம்பேத்கர் அறிய மாட்டாரா? மாகாணத்திற்கும், ஒன்றியத்துக்கும் தகராறு ஏற்படு வதைத் தவிர்க்க இந்திய யூனியனின் உடைமையுடன் தண்ணீரை யும் உட்படுத்துவது விரும்பத்தக்கதல்லவா?

**திரு. அவைத் தலைவர்:** அதற்கு அவர் பதிலளித்துவிட்டார். அவர் அதைச் சொல்வது அவசியம் என்று கருதவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிலத்திற்கு மேலுள்ள எதுவும் நிலத்தினுடையதாகிறது. நிலத்தின் மேல் ஒரு மரம் இருந்தால் அது நிலத்தைச் சார்ந்ததாகிறிது. தண்ணீர் நிலத்துக்கு மேல் உள்ளது. அது நிலத்தினுடையதாகிறது.

**ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினர்:** ஐயா....

**திரு. அவைத் தலைவர்:** நாம் போதுமான அளவு விவாதித்து விட்டோம் என்று நினைக்கிறேன். டாக்டர் அம்பேத்கர் விவாதத் திற்குப் பதிலளித்துவிட்டார். மேலும் நமக்கு எந்த விவாதமும் வேண்டாம். நான் அந்த விதியை வாக்களிப்புக்கு விடுகிறேன்.

**திரு. கே. ஹனுமந்தையா** (மைசூர் சமஸ்தானம்): ஐயா எனக்கு ஒரு விளக்கம் தேவைப்படுகிறது. ஆட்சிப் பகுதி சார்ந்த கடல் பகுதிகள், அதாவது கடல்கரையிலிருந்து மூன்று மைல் நிலப் பகுதி மத்திய அரசுக்குச் சொந்தமென்றால் இந்தப்பிரிவின் அவசியந் தான் என்ன?

**திரு. அவைத் தலைவர்:** அந்தக் கேள்விக்குத்தான் அவர் பதிலளித்தார்.

**திரு. கே. ஹனுமந்தய்யா:** டாக்டர் அம்பேத்கரின் விளக்கம் முறையானது என்றால் சரிதான்.

**திரு. அவைத் தலைவர்:** அதைப்பற்றி மேலும் விவாதம் இல்லை. டாக்டர் அம்பேத்கர் கூற வேண்டியதைக் கூறிவிட்டார். உறுப்பினர்கள் அதைத்தான் எடுத்தக் கொள்ள வேண்டும்.

நான் இப்பொழுது அந்த விதியை வாக்கெடுப்புக்கு விடு கிறேன்.

விதி 271க்குப் பிறகு பின்வரும் புதிய விதியைச் சேர்ந்துக் கொள்ள வேண்டும்.

ஆட்சிப்பரப்பைச்சார்ந்த கடலில் அடங்கியுள்ள நிலப்பரப்பு, உலோகப் பொருள்கள், மற்றும் விலைமதிப்புள்ள பொருள்கள் ஒன்றியத் திடம் இருக்கும்.

271-அ. இந்திய ஆட்சிப் பகுதியைச் சார்ந்த கடலி னுள் அடங்கிய நிலப்பரப்பு, உலோகப் பொருள்கள் மற்றும் விலைமதிப்புள்ள பொருள்கள் ஒன்றியத்திடம் இருக்கும். அதன் நோக்கத்துக்காக பயன்படுத்தப்படும்.

அந்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப் பட்டது.

விதி 271-அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

## விதி 272

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

> ''விதி 272 ல் 'பகுதி 1' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு அது வரும் இரண்டு இடங்களிலும் 'அல்லது பகுதி 111' என்ற சொல்லையும் எண்ணை யும் இணைத்துக் கொள்ள வேண்டும்.''

[2]**திரு. அவைத்தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு. முன்ஷி சிறப்பாக விளக்கிவிட்டார்கள். நான் அதற்கு மேல் எதுவும் கூற விரும்பவில்லை.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜூன் 15 1949, பக். 893.
2. அதே நூல், பக். 895.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

திருத்தம் செய்யப்பட்ட விதி 272 அரசியல் அமைப்பு சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

## விதி 273

[1]திரு. அவைத் தலைவர்: நாம் விதி 273 ஐ எடுத்துக்கொள்வோம். டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் தாழ்மையுடன் முன்மொழிய விரும்புகிறேன்:

> ''விதி 273 ல் துணைவிதி (1) ல் ''பகுதி-1'' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு 'பகுதி 111' ஐ சேர்க்கவேண்டும்.
>
> எண் 201 திருத்தத்தைப் பொறுத்தவரையில் விதி 273ன் பிரிவு (1) ல் 'ஆளுநர்' என்ற சொல்லுக்குப் பதிலாக அது இரண்டு தடவை வரும் இடங்களில், 'ஆளுநர் அல்லது மன்னர்' என்று சேர்க்கப்பட வேண்டும்.
>
> எண் 201 திருத்தத்தைப் பொறுத்தவரையில் விதி 273 ன் பிரிவு (2) ல், 'மாநிலத்தில் ஆளுநர்' என்ற சொல்லுக்குப் பதிலாக, ''ஆளுநர் அல்லது மன்னர்' என்று சேர்க்கப்பட வேண்டும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. காமத் உரிமை மாற்றம் என்ற சொல்லின் உபயோகத்தைப் பற்றி ஏதோ சொல்ல விரும்புகிறார். அவருடைய வாதம் என்னவென்றால் நாம் ஓர் இடத்தில் ஒப்பந்தம் என்றும் மற்ற இடத்தில் (அஷுரன்ஸ்) உரிமை மாற்றம் என்றும் உபயோகிக்கிறோம். அஷுரன்ஸ் (உரிமை மாற்றம்) என்பது மிகப் பழைய ஆங்கிலச் சொல், உரிமை மாற்றத்தைக் குறிக்கிறது. எல்லாவித மாற்றங்களையும், குறிக்க அது உபயோகப்படுத்தப்பட்டது; இன்றும் உபயோகப்படுத்தப்படுகிறது. அஷுரன்ஸ் (உரிமை மாற்றம்) என்ற சொல்லில் (காண்ட்ராக்ட்) ஒப்பந்தம் என்ற சொல்லும் அடங்கியுள்ளது. எனவேதான் இந்த இரு சொற்களையும் பயன்படுத்துவதால் எந்தவிதச் சிக்கலும் இல்லை. ஏனெனில் உடைமை மாற்றம் என்ற பொருளில் ஒப்பந்தம் என்ற சொல்லின் கருத்தும் உள்ளது.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், தொகுதி VIII, ஜுன் 15 1949, பக். 895.
2. அதே நூல், பக். 898-99.

**திரு.எச்.வி.காமத்:** மொழியைப் பற்றித்தான் என் சிக்கலெல்லாம். அந்த விதி எல்லா ஒப்பந்தங்களும் என்று ஆரம்பிக்கிறது. பிறகு இந்த ஒப்பந்தங்கள் அனைத்தும் எல்லா சொத்து அஷ்ூரன்சுகளும் (உரிமை மாற்றங்களும்) என்று வருகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மொழிச் சிக்கல் ஏதாவது இருந்தால் அதை வரைவுக்குழு கவனித்துக் கொள்ளும். அஷ்ூரன்ஸ் மற்றும் கான்டிராக்ட் என்ற சொற்களுக்கிடையேயான நுணுக்கமான வேறுபாட்டை விளக்கினேன்.

ஒருவர் ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டால் அதற்கான பொறுப்பிலிருந்து அவரை ஏன் விடுவிக்க வேண்டும் என்று திரு. தியாகி கேட்டார். அவரை அமைச்சரவையில் உறுப்பினராக்கினால், அவர் எழுப்பும் ஆட்சேபங்களின் பெரும்பகுதியும் மறைந்துவிடும். இந்திய அரசின் சார்பாக அவர் செய்த ஒப்பந்தம் எதற்காவது தனிப்பட்ட முறையில் அவர் பொறுப்பாவாரா என்பதற்கு அவரைப் பதில் அளிக்கக் கேட்டுக்கொள்கிறேன். சாதாரண வர்த்தக நடவடிக்கைகள் குறித்து அவர் அறிவார் என்பதில் எனக்கு ஐயம் இல்லை. ஒரு முதலாளி தன் சார்பாக, சில பணிகளைச் செய்ய ஒரு முகவரை நியமிக்கிறார். அந்த முகவர் எஜமானன் அவருக்கு அளித்துள்ள அதிகார வரம்புக்குள் தனது எஜமானனின் நலனுக்காக செய்யும் ஒப்பந்தங்களுக்கு அவர் தனிப்பட்ட முறையில் பொறுப்பாக மாட்டார். அதே கோட்பாடுதான் இங்கேயும். இந்திய அரசாங்கம் ஒரு சிறந்த முறையைப் பின்பற்றுவது எனது அருமை நண்பர் திரு. தியாகிக்குத் தெரியாது என நினைக்கிறேன். ஒரு குறிப்பிட்ட பதவி நிலையிலுள்ள அதிகாரி அளிக்கும் கடிதமோ அல்லது ஆவணமோ மட்டுமே இந்திய அரசைக் கட்டுப்படுத்தும் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது. மற்ற அலுவலர் எவரும் அளிக்கும் கடிதமோ, ஆவணமோ அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தாது. உதவிச் செயலர், கூட்டுச் செயலர், இணைச் செயலர் அல்லது செயலர் ஆகியவர்களில், யாருடைய அதிகார நடவடிக்கை இந்திய அரசாங்கத்தை கட்டுப்படுத்தும் அதிகாரம் உள்ளது என்பதை சட்டத்தின் மூலம் குறிப்பிட்டுக் காட்ட வேண்டும். எனவே இந்திய அரசாங்கத்தின் சார்பாக மட்டும் கையெழுத்திடும் பிரதிநிதிக்குத் தனிப்பட்ட முறையில் பொறுப்பை ஏன் சுமத்த வேண்டும்? அவர் இந்திய அரசாங்க அதிகாரத்தின் அடிப்படையில் அல்லது அதிகாரத்துக்குட்பட்டு நடந்துகொள்கிறார் என்பதற்காகவா?

ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையை இந்திய அரசு அங்கீகரித்து அது அவசியமில்லை, லாபகரமானதல்ல அல்லது அரசின் நிர்வாகத் துறைக்கு நாடாளுமன்றம் அளித்துள்ள அதிகார வரம்பை மீறிய செயல் என்று சட்டமன்றம் ஆட்சேபனை எழுப்புமானால் அது நாடாளுமன்றத்துக்கும் அரசாங்கத்துக்கும் இடையேயான பிரச்சினை. நாடாளுமன்றம் அரசாங்கத்தை பதவிநீக்கம் செய்யலாம் அல்லது ஒப்பந்தத்தை மறுக்கலாம் அல்லது அதன் விருப்பப்படி எதையும் செய்யலாம். இந்திய அரசின் சார்பாக கையெழுத்திடும் ஒருவர் மீது எப்படி தனிப்பட்ட பொறுப்பை சுமத்துவது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. என் நண்பர் திரு.தியாகி எழுப்பிய ஆட்சேபனையில் எந்தவித அடிப்படையும் உள்ளதாகத் தெரியவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** பல்வேறு திருத்தங்களை நான் இப்பொழுது வாக்களிப்புக்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் மூன்று திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தம் செய்யப்பட்ட விதி 273 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது)*

## விதி 274

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது விதி 274 ஐ விவாதத்துக்கு எடுத்துக் கொள்வோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''விதி 274ல் துணைவிதி (1) ல் 'இந்திய அரசாங்கம்' என்ற சொற்கள் வரும் இரண்டாம் இடத்தில் 'இந்திய ஒன்றியம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.

ஐயா, உங்களுடைய அனுமதியின் பேரில் இந்த விதிக்கான மற்ற திருத்தங்களையும் முன்மொழிகிறேன்.

நான் முன்மொழிகிறேன்:-

> ''விதி 274 ன் பிரிவு (2) ன் உட்பிரிவு (அ) வில் 'இந்திய அரசாங்கம்', என்ற சொற்களுக்குப் பதிலாக 'இந்திய ஒன்றியம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.''

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 15 ஜூன் 1949, பக். 900.

நான் முன்மொழிகிறேன்:

''திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்த எண் 2980 திருத்தம் சம்பந்தமாக ''விதி 274 ன் பிரிவு (1) ல் 'பகுதி1' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு அல்லது 'பகுதி 111' என்ற சொற்களையும் எண்ணையும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.''

நான் முன்மொழிகிறேன்:

''திருத்தங்கள் பட்டியலிலுள்ள திருத்த எண்கள் 2980, 2981 சம்பந்தமாக விதி 274ன் பிரிவு (1) ல் 'சட்டமன்றத்தால்' என்ற சொல்லுக்குப் பதில் 'சட்டமன்றத்தின்' என்ற சொல்லைச் சேர்க்கவும்.''

நான் முன்மொழிகிறேன்:

விதி 274, பிரிவு 1ல் 'இணையான மாகாணங்கள்' என்பதற்குப் பதிலாக அல்லது 'இணையான இந்திய சமஸ்தானங்கள்' என்ற சொற்களைச் சேர்க்கவும்.

நான் முன்மொழிகிறேன் :

''மேலே குறிக்கப்பட்டுள்ள திருத்த எண் 206 சம்பந்தமாக விதி 274 ன் பிரிவு (2) ல்

(1) 'ஒரு மாகாணம்' என்ற சொற்களுக்குப் பிறகு 'அல்லது ஒரு இந்திய சமஸ்தானம்', என்ற சொற்களைச் சேர்க்கவேண்டும். மேலும்

(11) 'அந்த மாகாணம்' என்ற சொற்களுக்குப் பிறகு 'அல்லது அந்த இந்திய சமஸ்தானம்' என்ற சொற்களைச் சேர்க்கவேண்டும். ''

**திரு. ஜஸ்பத் ராய் கபூர் (ஐக்கிய மாகாணங்கள்-பொது):** என்னுடைய திருத்தங்கள் எண் 2981 மற்றும் 2984 முன்மொழியப் போவதில்லை. அதை வரைவுக்குழுவின் பார்வைக்கு அனுப்புவதே நல்லது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் கொண்டுவந்த பல்வேறு திருத்தங்களை சேர்த்துக் கொண்ட பிறகு, இந்த விதி எப்படி இருக்கும் என்பதை அவை முன் படித்துக் காட்டுவது ஒருவேளை விரும்பத்தக்கது என நினைக்கிறேன். விதியின் வடிவம் இப்படித்தான் இருக்கும்:

"இந்திய ஒன்றியத்தின் பெயரால் இந்திய அரசாங்கம் வழக்குத் தொடுக்கலாம் அல்லது அதன் மீது வழக்குத் தொடுக்கப்படலாம். முதல் அட்டவணையில் பகுதி 1 மற்றம் 111ல் தற்காலிகமாக குறிக்கப்பட்டுள்ள மாநிலங்கள்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 15 ஜூன் 1949, பக்கம் 901-902.

*அந்த மாநிலத்தின் பெயரில் வழக்குத் தொடரலாம் அல்லது அதன்மீது வழக்குத் தொடுக்கப்படலாம், இந்த அரசியல் அமைப்புச் சட்டம் நிறைவேற்றப்படாதிருந்து, ஏதாவது சந்தர்ப்பத்தில் இந்திய டொமினியனும் சம்பந்தப்பட்ட மாகாணங்களும் அல்லது சம்பந்தப்பட்ட இந்திய சமஸ்தானங்களும் தங்கள் செயல்பாடுகள் தொடர்பாக வழக்குத் தொடுத் திருக்கலாம் அல்லது அல்லது அவை மீது வழக்குத் தொடரப்பட்டிருக்கலாம் என்று கருதப்படும் சந்தர்ப்பங்களில் நாடாளுமன்றம் அல்லது இந்த அரசியல் அமைப்புச் சட்டம் அளித்துள்ள அதிகாரத்தின்படி அந்த மாநிலத்தின் சட்ட மன்றம் இயற்றும் சட்டத்தின் வழிவகைகளுக்கு உட்பட்டு வழக்குத் தொடர லாம் அல்லது அதன் மீது வழக்குத் தொடுக்கப்படலாம்.*

*(2) இந்த அரசியல் அமைப்புச்சட்டம் செயலுக்குவரும் நாளன்று*

*(அ) இந்திய டொமினியன் ஒரு தரப்பாக உள்ள வழக்கு முடிவுறாத நிலை யில், இந்திய ஒன்றியம் என்பது..."*

*அதுதான் புதிய விஷயம்.*

*"டொமினியன் என்று அந்த நடவடிக்கைகளில் கருதப்படும், மற்றும்*

*(ஆ) ஒரு மாகாணம் அல்லது இந்திய சமஸ்தானம் வழக்கின் ஒரு தரப்பாக உள்ள சட்ட நடவடிக்கைகள் ஏதாவது முடிவுறா நிலையில் இருந்தால், அந்த நடவடிக்கைகளில் அந்த மாகாணத்தின் அல்லது இந்திய சமஸ்தானத் தின் இணையான மாநிலத்தை அவற்றுக்குப் பதிலாக எடுத்துக் கொள்ள வேண்டும்.*

*இப்பொழுது இந்த விதி வழக்குகளும், நடவடிக்கைகளும் எந்த முறையில் அமைய வேண்டும் என்பதை மட்டுமே எடுத்துக் கூறுகிறது. இதைத் தவிர வேறு எந்த முக்கியத்துவமும் இதற்கு இல்லை. ஆரம்பத்தில் உள்ள சொல்லாக்கம் இந்திய அரசின் பெயரில் அதன் மீது வழக்குத் தொடரப்படலாம் என்று இருந்தது. இந்திய அரசாங்கம் அதாவது நிருவாக அரசு மாறிக் கொண்டிருக்கும் ஓர் அமைப்பு ஒரு சமயத்தில் குறிப்பிட்ட சில நபர்கள் நிருவாகத்தில் இருக்கிறார்கள்; பிறகு அவர்கள் போய்விடுகிறார்கள்; வேறுசிலர் நிருவாகத்தை ஏற்க வருகிறார்கள்.*

***திரு. எச்.வி. காமத்:*** *அரசு நிரந்தரமாகவே இருக்கிறது. அரசு நிர்வாகிகள்தான் மாறிக் கொண்டிருக்கிறார்கள்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *இந்திய அர சாங்கம் என்பதற்கும் இந்திய ஒன்றியம் என்பதற்கும் வித்தியாசம் உள்ளது. இந்திய அரசாங்கம் சட்ட ரீதியான ஒரு பொருண்மை அல்ல; ஆனால் இந்திய ஒன்றியம் சட்டப்படியான பொருண்மையாகக் கருதப்படுகிறது. அது உரிமைகளையும் கடமைகளையும் பெற்றுள்ள ஓர் இறையாண்மை பெற்ற அமைப்பு. எனவே மத்திய அரசுக்கு*

எதிரான எந்த வழக்கும் அல்லது மத்திய அரசால் தொடுக்கப்படும் எந்த வழக்கும் ஒன்றியத்தின் பெயரிலோ அல்லது ஒன்றியத்துக்கு எதிராகவோ இருக்க வேண்டும்.

இப்பொழுது நேரிணையான மாநிலங்கள் என்ற சொற்றொடரைக் குறித்து சில ஐயப்பாடுகள் எழுப்பப்பட்டுள்ளன. பழைய மாகாணங்கள், சமஸ்தானங்களுக்கு இணையான புதிய மாநிலங்கள் எவை என்பதைக்கூறுவது கஷ்டமாக உள்ளது என்பதில் சந்தேகமில்லை. இந்தச் சிக்கலைத் தீர்க்க வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்தின் பக்கம் 145 ல் விதி 303 (1) (எ) ல் வழிவகை செய்யப்பட்டுள்ளது. ஐயப்பாடு வரும்போது குடியரசுத் தலைவரால், குறிப்பிட்ட பிரச்சினையைப் பொறுத்தவரையில், எந்த மாகாணம் அல்லது நிலைமையைப் பொறுத்து எந்த சமஸ்தானம் இணையானது என்று தீர்மானிக்கப்படுகிறோதோ அதுவே இணையான மாகாணம் அல்லது சமஸ்தானம் என்று வகைசெய்யப்பட்டிருக்கிறது. எனவே ஆட்சிப்பகுதி மற்றும் இதர விஷயங்களில் நிச்சயமாக மாற்றங்கள் தோன்றுமாகையால் பழைய மாகாணத்துக்கு அல்லது சமஸ்தானத்துக்கு முற்றிலும் இணையான புதிய மாநிலத்தை தீர்மானிப்பது கஷ்டமாகையால், எந்தக் குறிப்பிட்ட புதிய மாநிலம் எந்தப் பழைய மாகாணத்துக்கு இணையானது என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரத்தை குடியரசுத் தலைவருக்குக் கொடுப்பதன் மூலமே இந்தப் பிரச்சினையைத் தீர்க்க முடியும். எனவே அதற்கான வழிமுறைகள் செய்யப்பட்டுள்ளன.

பிரிவு (2) முடிவுபெறாத சட்ட நடவடிக்கைகளைப் பற்றி கூறுகிறது. மேலும் அந்தப்பிரிவு (2) எடுத்துக் கூறுவதெல்லாம் ஏதாவது சட்டநடவடிக்கைகள் முடிவு பெறாமல் இருக்குமானால் பிரிவு (1) ல் வகை செய்யப்பட்டுள்ளவைகளுக்கு மாறாக வழக்குத் தொடுப்பவரும் அல்லது வழக்குத் தொடுக்கப்பட்டவரும் இருந்தால் இந்திய ஒன்றியம் அல்லது குறிப்பிட்ட மாநிலம் பழைய சட்ட நடவடிக்கைகளில் புகுத்தப்படவேண்டும். அப்பொழுதுதான் விதி 274 (1)ன்படி வழக்குத் தொடுக்க முடியும். இந்த அரசியல் அமைப்பு சட்டத்தினால் வழங்கப்பட்ட அதிகாரங்களின் அடிப்படையில் இயற்றப்பட்ட என்ற சொற்றொடரை தேவையற்றது என்று எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு.சந்தானம் தெரிவிக்கும் ஆட்சேபத்தை நான் ஒத்துக்கொள்ளவில்லை என்பதைச் சொல்லிக் கொள்வதுடன் அவை மிகவும் அவசியமானது என்று நான் எண்ணுகிறேன்.

**(டாக்டர் அம்பேத்கரின் எல்லாத் திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டதுடன் விதி 274 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)**

## விதி 274 - அ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா இந்த விதியை ஒத்திப் போடலாம் என்று நான் நினைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அவ்வாறென்றால் ஒரு நீண்ட திருத்தம் உள்ளது, திரு. சித்வாவால் சேர்க்கப்பட வேண்டிய ஒரு புதிய பகுதி.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** வரிசைப் பட்டியலில் குறிப் பிட்டுள்ளபடி பாகம் XIII தேர்தல் அத்தியாயத்தில் விதி 289 லிருந்து எடுத்துக் கொள்ளலாம் என்று யோசனை கூறலாமா?

**திரு.கே.சித்வா:** ஐயா, நான் கொண்டுவர தீர்மானித்துள்ள இந்தப் புதிய விதி இந்திய ஆட்சிப்பகுதி முழுமையிலுமுள்ள நகர, கிராம மற்றும் உள்ளூர் பகுதிகளின் எல்லைகள் நிர்ணயிப்பது சம்பந்த மானது,

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதைத் தள்ளிப் போடலாம்.

★ ★ ★

## விதி 289

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, நான் முன்மொழிகிறேன்:

> விதி 289க்குப் பதிலாக பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்வது:-
>
> 289 (1) நாடாளுமன்றம், ஒவ்வொரு மாநில சட்டமன்றம் ஆகியவைகளுக் கான தேர்தல்களை நடந்த வாக்காளர் பட்டியல்களைத் தயாரிப்பது தேர்தல் களை நடத்துவது, இந்த அரசியல் அமைப்பு சட்டப்படி குடியரசுத் தலைவர், துணைத்தலைவர் ஆகிய பதவிகளுக்கான தேர்தல்களை நடத்துவது, நாடாளு மன்ற மற்றும் மாநில சட்டமன்றங்களின் தேர்தல்கள் சம்பந்தமாக எழும்

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 15 ஜூன் 1949, பக்கம் 903.
2. அதே நூல், பக். 904-07.

*தகராறுகளையும் ஐயப்பாடுகளையும் முடிவுசெய்ய தேர்தல் தீர்ப்பாயத்தை நியமிப்பது, இவற்றை கண்காணிப்பது, ஒழுங்குபடுத்துவது, உத்தரவுகள் அளிப்பது ஆகியவை குடியரசுத்தலைவர் நியமிக்கும் ஓர் ஆணையத்திடம் ((இந்த அரசியல் அமைப்பு சட்டத்தில் தேர்தல் ஆணையம் என்று குறிப் பிடப்பட்டுள்ளது)) இருக்கும்.*

*(2) தலைமைத் தேர்தல் ஆணையர், குடியரசுத்தலைவர் அவ்வப்போது குறித்திடும் எண்ணிக்கையிலான பிற தேர்தல் ஆணையர்கள் ஆகியவர்களைக் கொண்டிருக்கும் தேர்தல் ஆணையம்; அவ்வாறு பிற தேர்தல் ஆணையர்கள் நியமிக்கப்படும்போது ஆணையத்தின் தலைவராக தலைமைத் தேர்தல் ஆணையர் செயல்படுவார்.*

*(3) மக்களவை மற்றும் ஒவ்வொரு மாநிலச் சட்டமன்ற பேரவைக்கான பொதுத் தேர்தல்களுக்கு முன்பும், சட்டமன்ற மாநில மேலவை உள்ள மாநிலங்களில் முதல் பொதுத்தேர்தலுக்கு முன்பும் மற்றும் அதற்குப் பிறகு ஈராண்டுக்கு ஒருமுறை நடைபெறும் தேர்தல் ஒவ்வொன்றுக்கும் முன்பும் தேர்தல் ஆணையத்தை கலந்தாலோசித்து இந்தவிதியின் (1) பிரிவின்படி அந்த ஆணையத்திற்கு வழங்கப்பட்டுள்ள பணிகளை நிறைவேற்ற தேர்தல் ஆணையத்திற்கு உதவிட தேவையென தாம் கருதும் மண்டல ஆணை யர்களை குடியரசுத்தலைவர் நியமிக்கலாம்.*

*தேர்தல் ஆணையர்கள், மண்டல ஆணையர்கள் ஆகியோரின் பணிக்காலம் மற்றும் பணிநிலைமைகள் குடியரசுத் தலைவர் வகுக்கும் வழிப்படி இருக்கும்.*

*இருப்பினும் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரை நீக்கம் செய்வது போன்ற அதே முறையிலும் அதே காரணங்களுக்காக மட்டுமன்றி வேறு எந்த முறையிலும் தேர்தல் ஆணையரை பதவி நீக்கம் செய்ய முடியாது என்ப துடன் அவரது நியமனத்திற்குப் பிறகு அவரது பணிநிலையில் அவருக்குப் பாதகமான மாற்றங்கள் கொண்டுவர முடியாது.*

*இருப்பினும், தேர்தல் ஆணையர் மற்றும் மண்டல ஆணையர் எவரையும் தலைமைத் தேர்தல் ஆணையரின் பரிந்துரையின்றி பதவி நீக்கம் செய்ய முடியாது.*

*(5) இந்த விதியின் (1) ஆவது உட்பிரிவின்படி தேர்தல் ஆணையத்திற்கு பணிக்கப்பட்டுள்ள கடமைகளை ஆற்ற தேவைப்படும் ஊழியர்களை தேர்தல் ஆணையம் தேவைப்படும்போது தேர்தல் ஆணையத்திற்கோ, மண்டல தேர்தல் ஆணையருக்கோ குடியரசுத்தலைவர், ஆளுநர் அல்லது சமஸ்தான மன்னர் அளித்திட வழிசெய்ய வேண்டும்.*

**திரு. அவைத் தலைவர்:** *விதிகள் 289, 290 மற்றும் 291 ஐ மாற்றுவதற்கான திருத்தங்களும் கொண்டு வரப்படும் திருத்தங் களுக்கான திருத்தங்களும் கொண்டு வருவதைப் பற்றி முன்னறிவிப்பு கள் எனக்கு வந்துள்ளன. இந்த விதிகளுக்கு மாற்றாக வந்த விதிகள்*

சம்பந்தமான திருத்தங்களை எடுத்துக் கொள்வதே சிறப்பானது என நினைக்கிறேன். டாக்டர் அம்பேத்கர் ஒரு திருத்தத்தைக் கொண்டு வந்துள்ளார். பண்டிட் தாகுர் தாஸ் பார்க்கவாவின் பெயரில் இன்னொரு திருத்தம் உள்ளது.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு** (ஐக்கிய மாகாணங்கள்): டாக்டர் அம்பேத்கர் தாம் முன்மொழிந்துள்ள திருத்தத்துக்கு ஆதரவாக ஏதாவது சொல்லப்போகிறாரா என்பதை நான் தெரிந்து கொள்ளலாமா? அது மிக முக்கியமான விஷயம் சம்பந்தப்பட்டது. விதி 289க்கு திருத்தம் ஒன்றைக்கொண்டுவந்த டாக்டர் அம்பேத்கர் அந்தத் திருத்தத்துக்கு ஆதரவாக ஏதாவது கூறுவது விரும்பத்தக்கது இல்லையா? பழைய விதி 289க்குப் பதிலாக புதிய விதியை மாற்ற வேண்டிய காரணத்தை அவைக்கு விளக்கும் சிரமத்தை அவர் மேற்கொண்டால், அவர் சரியான பாதையில் செல்கிறார் என்று நான் நினைக்க முடியும். விஷயம் மிக முக்கியமானது. ஆனால் டாக்டர் அம்பேத்கர் இந்தத் தீர்மானம் சம்பந்தமாக சில கருத்துக்களைத் தெரிவிப்பது பயனுள்ளதாக இருக்கும் என்று கருதாதிருப்பது வருந்தத்தக்கது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, அந்தத் தீர்மானத்திற்கு ஆதரவாக கருத்து எதையும் தெரிவிக்காததற்கு இரு காரணங்கள் உள்ளன. இந்த விதியின் மீது விவாதம் தொடங்கினால், கடுமையான விவாதம் சந்தேகத்துக்கிடமின்றி நடக்கத்தான் போகிறது. விவாதத்தின்போது சில கேள்விகள் எழுப்பப்படும். என் உரையை இருமுறை நிகழ்த்துவதை தவிர்ப்பதற்கு, இறுதியில் அதற்குப் பதிலளிப்பதே சிறந்தது. இது ஒரு காரணம்.

என்னுடைய திருத்தத்தை எல்லோரும் கண்டிப்பாகப் படித்திருப்பார்கள் என்று நான் நினைத்தது இரண்டாவது காரணம். அது எல்லோரும் புரிந்துகொள்ளும் அளவுக்கு அவ்வளவு எளிதாக உள்ளது. எனது மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ரு அவசரத்தில் என்னுடைய வரைவைப் படிக்கவில்லை என்று தெரிகிறது.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு:** அதன் ஒவ்வொரு வரியையும் படித்துவிட்டேன். மாண்புமிகு உறுப்பினர் இந்த அவையை சிறிது மரியாதையுடன் நடத்த வேண்டும் என்று விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகளின் மிக ஆரம்பகட்டத்தில் அடிப்படை உரிமைகள் என்பதை நடைமுறைக்குக் கொண்டுவருவதைப்பற்றி ஒரு குழு அமைக்கப்பட்டது என்பதை அவை மறந்திருக்க முடியாது.

அந்தக்குழு ஓர் அறிக்கையைத் தயாரித்து வெளியிட்டது. சுதந்திரமான தேர்தலையும் சட்டமன்றத்துக்கு நடைபெறும் தேர்தல்களில் நிர்வாக இயந்திரத்தின் குறுக்கீடு இருக்கக்கூடாது என்பது அடிப்படை உரிமையாக அங்கீகரிக்கப்படவேண்டுமென்றும் அந்தக் குழு அறிக்கையில் கூறியது. அடிப்படை உரிமைகள் சம்பந்தப்பட்ட அத்தியாயத்தில் இதற்கு வழிவகுக்கப்பட வேண்டுமென்று அது வலியுறுத்தியுள்ளது. இந்த விஷயம் அவையின் பரிசீலனைக்கு வந்த போது, இது அடிப்படை முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை அது அங்கீகரித்தபோதும், அடிப்படை உரிமைகள் சம்பந்தப்பட்ட அத்தியாயத்தில் இதற்கான வழிவகைகள் செய்யப்படுவதைவிட அரசியல் அமைப்பு சட்டத்தின் வேறு ஏதாவது பகுதியில் இதற்கு வழிவகுக்கப்பட வேண்டும் என்று கருதப்பட்டது. சட்டமன்ற அமைப்புக்களுக்கான தேர்தல்கள் சுதந்திரமாகவும், அப்பழுக்கற்ற முறையிலும் நடத்தப்படுவதற்காக, அன்றைக்குப் பதவியில் இருக்கும் நிருவாக அமைப்பின் எந்தவித தலையீடும் இருக்கக்கூடாது என்பது மிக முக்கியமானது என்று எந்தவிதக் கருத்து வேறுபாடுமின்றி அவை வலியுறுத்தியது. எனவே அடிப்படை உரிமைகள் என்ற அத்தியாயத்தில் இருந்து இந்தக் கேள்வியை எடுத்து விதிகள் 289, 290 மற்றும் இதர விதிகள் உள்ள தனிப்பகுதியில் வரைவுக்குழு சேர்த்துள்ளது. எனவே அடிப்படைப் பிரச்சினையைப் பொறுத்த வரையில் நிருவாக அமைப்புக்கு அப்பால் தேர்தல் எந்திரம் இருக்க வேண்டும் என்பதில் எந்தவிதக் கருத்து வேறுபாடும் இருக்கவில்லை. அரசியல் நிர்ணய சபை முடிவின் அந்தப் பகுதியைத்தான் விதி 280 நிறைவேற்றியுள்ளது. மாநில சட்டமன்றங்களின், நாடாளுமன்றத்தின் தேர்தல் அனைத்துக்குமான வாக்காளர் பட்டியல்கள் தயா ரிப்பது, அதைத் தயாரிக்க உத்தரவிடுவது, அதன் தயாரிப்பை மேற்பார்வையிடுவது ஆகிய பணிகளை அரசு நிருவாக இயந்திரத்துக்கு வெளியேயுள்ள தேர்தல் ஆணையம் என்று அழைக்கப்படும் அமைப்பிற்கு அது மாற்றுகிறது. உட்பிரிவு (1)ல் இதற்கான வழிவகை வகுக்கப்பட்டுள்ளது.

ஒரு தலைமைத் தேர்தல் ஆணையரும் அவ்வப்போது குடியரசுத் தலைவர் நியமிக்கும் மற்ற உதவியாணையர்களும் இருப்

பார்கள் என உட்பிரிவு (2) கூறுகிறது. வரைவுக் குழுவுக்கு, தம்முன் இருந்த இரண்டு வழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. தங்குதடையின்றி நிரந்தரமாக பணியாற்றக்கூடிய நான்கு, ஐந்து உறுப்பினர்களைக் கொண்ட நிரந்தர அமைப்பான தேர்தல் ஆணையத்தை அமைப்பது அல்லது தேர்தல் வரும் நேரத்தில் தாற்காலிகமாக ஓர் அமைப்பை உருவாக்குவது என்பதே அவை. வரைவுக்குழு ஓர் இடைப்பட்ட வழியைத் தேர்ந்தெடுத்தது. தலைமைத் தேர்தல் ஆணையர் என்பவர் நிரந்தரமாக பணியில் இருக்க உட்பிரிவு (2)ன் மூலம் வரைவுக்குழு வழிவகை செய்துள்ளது. இதனால் எந்த நேரத்தில் வேண்டுமென்றாலும் தேர்தலைச் சந்திக்கத் தயாராக உள்ள அடிப்படை கட்டமைப்பு இருக்கும். ஐந்தாண்டின் இறுதியில்தான் பொதுவாகத் தேர்தல் நடைபெறும் என்பதில் ஐயப்பாடு கிடையாது. ஆனால் எந்த நேரத்திலும் ஓர் இடைத்தேர்தல் நடை பெறக்கூடும். ஐந்தாண்டு காலம் முடிவதற்குள் ஒரு சட்டமன்றம் கலைக்கப்படலாம். எனவேதான், புதிய தேர்தல் எந்த சிக்கல்களும் இல்லாமல் நியாயமான முறையில் நடைபெற வாக்காளர் பட்டியல், அண்மையில் தயாரிக்கப்பட்டதாக இருக்க வேண்டும். எனவேதான் இந்த மாதிரி சாத்தியப்பாடுகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு தலைமைத் தேர்தல் ஆணையர் என்று அழைக்கப்படும் அதிகாரியை நிரந்தரமான பணியில் ஈடுபடுத்துவது போதுமானது என்று கருதப்பட்டது. தேர்தல்கள் வரும் நேரத்தில் தேர்தல் ஆணையத்துக்கு மேலும் உறுப்பினர்களை நியமிப்பதன் மூலம் குடியரசுத் தலைவர் இந்த ஆணையத்தை வலுப்படுத்துவார் என்று கருதப்பட்டது.

ஐயா, மத்தியச் சட்டமன்றங்களுக்கு, மேலவை மற்றும் கீழவை சம்பந்தமான தேர்தல்களைக் கவனிக்க ஓர் ஆணையமும், ஒவ்வொரு மாகாணம் மற்றும் சமஸ்தானத் தேர்தலைக் கவனிக்க தேர்தல் ஆணையம் ஆளுநர் அல்லது சமஸ்தான மன்னரால் நியமிக்கப்பட வேண்டும் என்று விதி 289-ன்படி ஆரம்பத்தில் தீர்மானிக்கப்பட்டது. தற்போதைய விதி 289-ஐ அதனுடன் ஒப்பிட்டால் பெரும் மாற்றத்தைக் காணமுடியும். ஒரு தனியான ஆணையத்தின் கீழ் தேர்தல் எந்திரத்தை மையப்படுத்தவே இந்த விதி அமைந்துள்ளது. மாகாண அரசுகளின் பணியில் இல்லாத மத்திய தேர்தல் ஆணையத்தின் மேற்பார்வையிலும், கண்காணிப்பிலும் பணியாற்றும் பிராந்திய ஆணையர்கள் இந்த ஆணையத்துக்கு உதவி புரிவார்கள். நான் ஏற்கெனவே கூறியபடி இது ஐயத்துக்கிடமின்றி ஒரு அடிப்

படையான மாற்றமே. ஆனால் பல்வேறு மாகாணங்களில் பல்வேறு பிரிவில் உட்பட்ட மக்கள் கூட்டாக கலப்பாக வாழ்ந்து வருவதால் இந்த மாற்றம் அவசியமாகிறது. குறிப்பிட்ட மாகாணத்தின், ஆரம் பத்திலிருந்தே குடியிருந்து வரும் அந்த மாகாணத்தின் குடிமக்கள் உள்ளனர். அவர்களுடன் வேறுபல மக்களும் அங்கு வசிக்கின்றனர். அந்தக் குறிப்பிட்ட மாகாணத்தின் மக்களிடமிருந்து இனரீதியாக, மொழிரீதியாக, கலாசார ரீதியாக வேறுபட்ட மக்களும் அவர்களுடன் வசிக்கின்றனர். இந்த மாகாணங்களில் அரசாங்கத்தின் நிருவாக அமைப்பு, பிராந்தியத்தின் முக்கிய வகுப்பினருக்கு, இனரீதியாக மொழிரீதியாக, கலாசார ரீதியாக வேறுபட்ட மக்களை வாக்காளர் பட்டியல்களில் சேர்ப்பதைத் தடுக்க உத்தரவு அளிக்கவோ அல்லது அதற்குரிய நடவடிக்கைகளை எடுக்கவோ கூடும் என்பது மத்திய அரசுக்கும் அதேபோன்று வரைவுக்குழுவின் கவனத்திற்கும் கொண்டு வரப்பட்டுள்ளது. ஒரு குடியரசு ஆட்சி முறையில் வாக்களிப்பது என்பது மிகவும் அடிப்படையான உரிமை என்பதை அவை நன்கு உணரும். அரசியல் அமைப்புச் சட்டத்தில் குறிப்பிட்டுள்ள அடிப் படைகளின்படி வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டிய எந்த நபரின் பெயரும் அதாவது 21 வயதான நபர் எவரின் பெயரும் ஒரு வட்டார அரசின் விருப்பு வெறுப்பின் காரணத்தினாலோ அல்லது ஓர் அதிகாரியின் சலன சித்தத்தாலோ விடுபட்டுப் போய் விடக்கூடாது. குடியரசு அமைப்பின் அடிப்படை வேரையே அது அரித்துவிடும். எனவேதான் மாநில மக்களிலிருந்து இன, மொழி, கலாசார வேறுபாடுள்ள பிற மக்கள் மாகாண அரசுகளால் பாதிப் படைவதைத் தடுக்க, ஆளுநர் மற்றும் மாகாண அரசின் வழிகாட்டு தலில் ஒவ்வொரு மாகாணத்திற்கும் தனியான தேர்தல் ஆணையம் அமைக்கவேண்டுமென்ற ஆரம்ப தீர்மானத்திலிருந்து வேறுபடுவது என்று விருப்பம் தெரிவிக்கப்பட்டது. எனவேதான் இந்த புதிய மாற்றங்கள் கொண்டுவரப்பட்டன அதாவது மத்திய தேர்தல் ஆணை யத்தின் கீழ் தேர்தல் எந்திரம் முழுவதும் இருக்க வேண்டும், வாக் காளர் பட்டியலை தயாரிப்பதிலும் மறுபரிசீலனை செய்வதிலும் ஈடுபடும் தேர்தல் அதிகாரிகள், வாக்குச் சாவடி அதிகாரிகள் மற்றும் உத்தரவுகள் அனுப்புவது ஆகியவை மத்திய தேர்தல் ஆணையத்தின் கைகளில் இருக்கவேண்டும். இந்த அரசியல் அமைப்புச் சட்டப்படி வாக்கு பட்டியலில் இடம் பெற உரிமையுள்ள எந்த இந்தியக் குடிமக னுக்கும் அநீதி இழைக்கப்படக்கூடாது. வரைவு அரசியல் அடிப்

படைச் சட்டத்தின் தற்பொழுதுள்ள வழிவகைகளில் செய்துள்ள அடிப்படையான முக்கியமான மாற்றங்கள் இவை எனலாம்.

பிரிவு (4)-ஐ பொறுத்தவரையில் தேர்தல் ஆணைய உறுப்பினர்களின் பணிநிலைமைகள் மற்றும் பணிக்காலத்தைப் பற்றி ஒன்றிரண்டு நிபந்தனைகளுக்குட்பட்டு குடியரசுத் தலைவரின் தீர்மானத்திற்கே விட்டுவிட்டோம். உச்ச நீதிமன்றத்தின் நீதிபதி நீக்கப்படும் அதே முறையைத தவிர, வேறு எந்த விதத்திலும் தலைமை தேர்தல் ஆணையரை பதவியிலிருந்து நீக்கமுடியாது. தேர்தல்கள் சம்பந்தமான எல்லா விஷயங்களும் அன்றைக்குப் பதவியிலுள்ள அரசின் கட்டுப்பாட்டிற்கு வெளியே இருக்க வேண்டுமென்பது இந்த அவையின் நோக்கம் என்றால், நாம் உருவாக்கிக் கொண்டிருக்கும் புதிய நடைமுறை அதாவது தேர்தல் ஆணையம், நிருவாகத் துறையின் ஒரு சிறு உத்தரவின் மூலம் நீக்கக்கூடியதாக இருக்கக் கூடாது என்பது முற்றிலும் அவசியமானது. பதவியிலிருந்து நீக்குவது சம்பந்தமாக உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கு விதிக்கப்பட்ட நிபந்தனைகளைப் போலவே அதேபோன்ற நிபந்தனைகள் தேர்தல் தலைமை ஆணையரை பதவியிலிருந்து நீக்குவதிலும் உள்ளன. ஆனால் ஆணையத்தின் மற்ற உறுப்பினர்களுக்கு இந்தச் சலுகையை வழங்க நிச்சயமாக நாம் தீர்மானிக்கவில்லை. தேர்தல் ஆணையத்தின் மற்ற உறுப்பினரை நீக்குவதைப் பொறுத்தவரையில், சூழ்நிலையின் தன்மையைப் பொறுத்து குடியரசுத்தலைவரின் தீர்மானத்துக்கு அதை விட்டுவிட்டோம். ஆனால் இதற்குத் தலைமைத் தேர்தல் ஆணையர் இந்தப் பதவி நீக்கம் நியாயமானது, சரியானது என்று பரிந்துரை செய்ய வேண்டுமென்ற நிபந்தனைக்குட்பட்டுத்தான் இது சாத்தியமாகும்.

தனக்குப் பொறுப்பு அளிக்கப்பட்டுள்ள பணிகளை நிறைவேற்ற தனிப்பட்ட சொந்தப் பணியாளர்களை வைத்துக் கொள்ளும் அதிகாரம் தேர்தல் ஆணையத்துக்கு அவசியமா என்பது அடுத்த கேள்வி. வாக்காளர் பட்டியலைத் தயாரிக்கும் பணி, பட்டியலைத் திருத்தியமைக்கும் பணி, தேர்தல்களை நடத்துவது மற்றும் இதரப் பணிகளுக்கு ஒரு சுதந்திர எந்திரத்தைத் தேர்தல் ஆணையம் வைத்துக் கொள்ள அனுமதிப்பது, உண்மையிலேயே ஏற்கெனவே உள்ள அரசமைப்பில் மீண்டும் உருவாக்கப்பட்ட எந்திரமாக அது அமைவதுடன் தேவையற்ற நிருவாகச்செலவுமாகும். நான் ஏற்கெனவே கூறியபடி

தேர்தல் ஆணையத்தின் பணி சில நேரங்களில் அதிகமாகவும் சில நேரங்களில் வேலையேதும் இல்லாமல் இருக்கின்ற காரணத்தால் இதை எளிதாகத் தவிர்த்து விடலாம். தேர்தல் ஆணையத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள பணிகளை நிறைவேற்றத் தேவைப்படும் எழுத்தர்கள், அமைச்சக ஊழியர்களை மாகாண அரசிடமிருந்து ஆணையம் பெற்றுக் கொள்ள பிரிவு (5)-ல் வழிவகை செய்யப்பட்டுள்ளது. தேர்தல் பணி முடிந்தவுடன் அமைச்சு ஊழியர்கள் தங்கள் பணிக்கு மாகாண அரசுக்குச் சென்று விடுவார்கள். அவர்கள் தேர்தல் ஆணையரின்கீழ் பணி செய்யும்போது நிருவாக சம்பந்தமான முறையில் ஆணையத்துக்குப் பொறுப்பான வர்களே தவிர நிருவாக ஆட்சிக்கு அல்ல. இந்த விதியில் வழிவகை செய்யப்பட்டுள்ளவைகள் இவைகளே. இப்பொழுது அந்த விதியின் சாரத்தையும் வரைவு அடிப்படைச் சட்டத்தின் ஆரம்ப விதியிலிருந்து இது எவ்வகையில் மாற்றம் கொண்டுள்ளது என்பதையும் அவை நன்கு உணர்ந்திருக்கும் என நினைக்கிறேன்.

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய், பொது). தலைவர் அவர்களே, என்னுடைய இந்தத் திருத்தம் பல்வேறு கருத்தோட்டங்களிலிருந்து விமர்சனத்துக்குள்ளாகியிருக்கிறது. ஆனால் விவாதத்தின் போது எழுப்பப்பட்ட எல்லாப் பிரச்சினைகளையும் என்னுடைய பதிலில் அலசப் போவதில்லை. என்னுடைய நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா எழுப்பியுள்ள பிரச்சினைகளுக்கும் எனது நண்பர் பண்டிட் இருதயநாத் குன்ஸ்ரு வலியுறுத்தியுள்ள பிரச்சினைகளுக்கும் மட்டும் விளக்கம் அளிக்க நான் தீர்மானித்துள்ளேன். எனது நண்பர் சாக்சேனாவின் திருத்தத்தின்படி உண்மையிலேயே நம்முடைய கவனத்தை இரண்டு கேள்விகள் ஈர்க்கின்றன. இந்தத் தேர்தல் ஆணையத்துக்கு ஆணையரை நியமிப்பது சம்பந்தமானது முதலாவது கேள்வி. தேர்தல் ஆணையரின் நீக்கத்தைப் பற்றியது இரண்டாவது கேள்வி. நான் கொண்டுவந்துள்ள திருத்தத்தில் எந்தவித மாற்றமும் தேவை என்று தனிப்பட்ட முறையில் நான் நினைக்கவில்லை தேர்தல் ஆணையரின் நீக்கத்தைப் பொறுத்தவரையில் உச்சநீதிமன்றத்தின் நீதிபதியின் நிலையில்தான் தலைமை ஆணையரும் உள்ளார் என்பதை அவை உணர்ந்திருக்கும். பிரிவு (4)ன் வரம்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜுன் 1949, பக்கம் 928-930.

புரையில் நாம் வழிவகை செய்துள்ள பாதுகாப்பைவிட வேறு எந்த அரசியல் அடிப்படைச் சட்டத்திலும் எந்தவித வழிவகைகளும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

மற்ற ஆணையர்களைப் பொறுத்தவரையில், அவர்களை நீக்குவதற்கான அதிகாரம் குடியரசுத் தலைவரின் கைகளில் விடப்பட்டிருந்தாலும் அந்த அதிகாரம் ஒரு முக்கியமான வரம்புரைக்கு உட்பட்டுள்ளது. அதாவது மற்ற ஆணையர்களை நீக்கும் விஷயத்தில் தலைமைத் தேர்தல் ஆணையரின் ஆலோசனைப்படிதான் நடவடிக்கை எடுக்க முடியும். பதவி நீக்கப் பிரச்சினையைப் பொறுத்தவரையில் என்னுடைய வாதம் என்னவென்றால் என்னுடைய திருத்தத்தில் சேர்க்கப்பட்டுள்ள வழிவகைகளே போதுமானவை; மேலும் அதற்காக வேறு எதுவும் தேவையில்லை.

நியமனப் பிரச்சினையைப் பொறுத்தவரையில் எனது நண்பர் பேராசிரியர் சாக்சேனா கூறியதில் ஆழ்ந்த பொருள் உள்ளது என்பதை நான் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நிருவாகத் துறையின் கைப்பாவையாக இருக்கக்கூடிய ஒரு நபரை அல்லது கொள்கையற்ற ஒருவரை அல்லது முட்டாள் ஒருவரை நியமனம் செய்வதிலிருந்து தடுப்பதற்கு அரசியல் அமைப்புச் சட்டத்தில் வழிவகைகள் எதுவும் இல்லாதபோது தேர்தல் ஆணையருக்கு நிரந்தர பாதுகாப்பான பதவிக்காலம் அளிப்பதில் எந்தவித பயனும் இல்லை என்றார். தலைமை தேர்தல் ஆணையர் மற்றும் பிற தேர்தல் ஆணையர்களின் பதவிக்கு பொருத்தமற்ற ஒருவரை நியமிப்பதற்கு எதிராக என்னுடைய விதிவகைகளில் எதுவும் இல்லை என்பதை நான் மறுப்பதற்கில்லை. இது மிகவும் முக்கியமான பிரச்சினை என்பதை நான் மிகவும் அழுத்தமாகவே கூறுகிறேன். எனக்கு அது பெரும் தலைவலியைக் கொடுத்தது இந்த அவைக்கும் பெருத்த தலைவலியைக் கொடுக்கப் போகிறது என்பதில் ஐயப்பாடு ஏதுமில்லை. இந்தப் பிரச்சினையை அமெரிக்க ஐக்கிய நாடுகள் தங்கள் அரசியல் அமைப்புச் சட்டத்தின் பிரிவு (2)ன் விதி 2ன் மூலம் தீர்வு கண்டிருக்கிறார்கள். இதன்படி விதி (2)ன் பிரிவு 2ல் குறிப்பிடப்பட்டுள்ள சில நியமனங்கள் செனட் சபையின் இசைவின்றி அதிபரால் செய்ய முடியாது. எனவே நியமனங்களைப் பொறுத்த வரையில் அதிபருக்குப் பொறுப்பு அளிக்கப்பட்டிருந்தும், அது செனட் சபையின் ஒப்புதலுக்கு உட்பட்டிருந்தது. எனவே குறிப்பிட்ட நபரின் பெயர் முன்மொழியப்பட்டபோது, செனட் சபை அவரைப் பற்றிய விவரங்களைத் தெரிந்துகொண்டு அந்த நபர் அந்தப் பதவிக்குப் பொருத்த

மான நபர்தானா என்பதை தீர்மானிக்க முடியும். அது சண்டித்தனமாக மிகவும் ஊர்ந்து செல்லும் சிக்கலான நடவடிக்கை. அந்த நியமனம் செய்யப்படும்போது நாடாளுமன்றம் அமர்வில் இல்லாமல் இருக் கலாம். உடனடியாக அந்த நியமனத்தைச் செய்யப்பட வேண்டிய தாக இருக்கும். இரண்டாவதாக அமெரிக்க நடைமுறையில் நியமனம் செய்வதில் அரசியல் பரிவுக்கான சாத்தியப்பாடுகள் உருவாகக் கூடும். நியமனம் செய்வதில் குடியரசுத் தலைவரின் தாராள மனப் பான்மைக்கு, அமெரிக்க அரசியல் அமைப்புச் சட்டத்தின் வழிவகை கள் ஆரோக்கியமான கட்டுப்பாடாக இருக்கும் என்றாலும், பல நிருவாக இடர்ப்பாடுகளை உருவாக்கக்கூடும் என்பதால், நம்முடைய அரசியல் அடிப்படைச் சட்டத்தின் பின் பகுதியில் அமெரிக்க வழி முறைகளை ஏற்றுக் கொள்ளலாமா என்பதில் எனக்குத் தயக்கம் உள்ளது. வரைவுக்குழு இந்தப் பிரச்சினை குறித்து ஆழ்ந்து கவனம் செலுத்தியுள்ளது. ஏனென்றால் நான் ஏற்கெனவே கூறியபடி அது பெரும் தலைவலியாக இருக்கப்போகிறது. எனவே ஓர் இடைப் பட்ட வழிமுறையாக, குடியரசுத் தலைவருக்கான நெறிமுறைகள் ஆவணம் ஒன்றை இந்த சட்டப் பேரவை நிறைவேற்றி, நியமனம் ஏதாவது செய்யும் முன் குடியரசுத் தலைவர் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியத்தை அதில் ஏற்பாடு செய்யலாம் என்று கருதப் பட்டது. இதன் மூலம் அமெரிக்க அரசியல் சட்டத்தின் சாதகங் களைப் பெறுவதுடன்,அதன் விளைவாக ஏற்படும் சிக்கல்களையும் தவிர்க்கலாம் என்று நினைக்கிறேன். அந்தக் குறிப்பிட்ட வரைவு நெறிமுறை ஆவணம் அவைமுன் வரும்போது இந்த அவை எவ்வித அணுகுமுறையைக் கைக்கொள்ளும் என்பதை இந்தக் கட்டத்தில் என்னால் எதிர்பார்க்க முடியாது. மற்ற வழிவகைகளுடன், நியமனங் கள் செய்வது குறித்து வழிவகை ஒன்றைக் கொண்ட, குடியரசுத் தலைவருக்கான நெறிமுறை ஆவணம் தேவையென்ற வரைவுக் குழுவின் தீர்மானத்தை அவை நிராகரித்தால், அந்த நடைமுறையை ஏற்றுக் கொள்வதன் மூலம் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணப் படும். நான் ஏற்கெனவே கூறியபடி என்ன நடக்கும் என்று எதிர் பார்ப்பது மிகவும் கடினமான விஷயம். எனது மதிப்பிற்குரிய நண்பர் பேராசிரியர் சாக்சேனாவின் விமர்சனத்திற்கும், அவரை ஆதரிக்கும் மதிப்பிற்குரிய நண்பர் பண்டிட் குன்ஸ்ருவின் வாதத் திற்கும் மறுமொழியாக திருத்தம் எண் 99ல் சில திருத்தங்கள் செய்ய நான் தயாராக உள்ளேன். இந்தத் திருத்தங்களைச் சுற்றுக்கு விட எனக்கு நேரம் இருக்கவில்லை. ஆனால் நான் அதைப் படிக்கும் போது என் சிந்தனை என்ன என்பதை அவை தெரிந்து கொள்ளும்.

எனது முதல் திருத்தம்

''பிரிவு (1)ன் இறுதியில் வரும் 'குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவார்' என்ற சொற்களை நீக்குவது.''

''பிரிவு (2)ன், 4-வது வரியில் 'நியமிக்க' என்ற வார்த்தைக்குப் பதிலாக 'நிச்சயிக்க' என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொண்டு அதற்குப் பிறகு பின்வரும் சொற்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:

''தலைமை தேர்தல் ஆணையர் மற்றும் இதர ஆணையர்களின் நியமனம், நாடாளுமன்றம் இது சம்பந்தமாக நிறைவேற்றும் சட்டத்தின் வழிவகைகளுக்குட்பட்டு, குடியரசுத்தலைவரால் செய்யப்படும்.''

''அந்தப் பிரிவில் வேறு தேர்தல் ஆணையர் எவராவது நியமனம் செய்யப்படும்போது என்ற சொற்களுக்குப் பிறகுள்ள எஞ்சிய பகுதி பிரிவு (2அ) என்ற இலக்கமிடப்படும்.''

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** (சென்னை - பொது) ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. புதிய விஷயம் அறிமுகப்படுத்தப்படுகிறது, இந்தக்கட்டத்தில் அதை அனுமதிக்கமுடியாது. இல்லையென்றால் வேறு ஒரு விவாதம் அவசியம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மற்ற உறுப்பினர்கள் தங்கள் கருத்துகளை எடுத்துச் சொல்ல தலைவர் அனுமதிப்பார் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த நிலையில் இந்த விதியை பரிசீலிப்பதை ஒத்திப் போடுவதுதான் சிறந்த வழி என்று நான் நினைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தத் திருத்தங்கள் குறித்து வருந்த வேண்டியதில்லை, அவை நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்துக்குட்பட்டு எதுவும் இருக்க வேண்டுமென்று கூறுகின்றன.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): இந்தத் திருத்தங்களுக்கு நகல்கள் எடுத்து சுற்றுக்கு விடலாம் என நினைக்கிறேன். பிறகு அவற்றைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு திரு கே. சந்தானம்** (சென்னை : பொது): வரைவுக் குழு இவைகளைப் பரிசீலனை செய்யட்டும் என்பதே என்

*மாக அல்லது அது குறித்த எல்லா விஷயங்களையும் அந்த அவை அல்லது அவைகளை உரிய வகையில் அமைப்பது உள்ளிட்ட மற்றும் தொகுதிகளை வரையறுப்பதற்குத் தேவையான விஷயங்கள் சம்பந்த மாகவும் அவ்வப்போது நாடாளுமன்றம் சட்டமியற்றலாம்.*

*ஐயா, இதற்குத் திருத்தமளிக்கும் திருத்தத்தை உங்கள் அனுமதியுடன் முன்மொழிகிறேன்:*

*பட்டியல் (1)ல் (ஐந்தாவது வாரம்) உள்ள திருத்தம் 123 சம்பந்தமாக புதிய விதி 290ல் 'உள்ளிட்ட' என்ற சொல்லுக்கு பின் 'வாக்காளர் பட்டியல் தயாரிக்க மற்றும் இதர' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.*

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** *விதி 290க்கான பேராசிரியர் சிபன் லால் சாக்சேனாவின் திருத்தத்துக்கான முன்னறிவிப்பை காண்கிறேன். திருத்தங்கள் முன்மொழியப்பட்டபோது அவர் இங்கே இல்லை. அது ஒரு முக்கியமான திருத்தம் அல்ல.*

*டாக்டர் அம்பேத்கர் பதில் ஏதும் கூற விரும்பவில்லை என்றால் அதை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *ஐயா எனக்குச் சொல்வதற்கு ஒன்றுமில்லை.*

*(டாக்டர் அம்பேத்கரின் மேற்குறிப்பிட்ட திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப் பட்டன. திருத்தம் செய்யப்பட்ட விதி 290 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

## விதி எண் 291

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** *நான் முன்மொழிகிறேன்:-*

*''விதி 291க்கு பதில் பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:-*

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 933.
2. அதே நூல், பக். 934

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை ஐயா, அப்படி இல்லை. நான் இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்துள்ளேன். நான் ஏன் அதைக் கொண்டுவந்தேன் என்பதற்கான காரணத்தைத் தான் விளக்கினேன்.

புதிய விதி 289-ஆ சேர்த்துக் கொள்ள மற்ற திருத்தத்தையும் நான் முன்மொழிகிறேன்:-

மக்களவைக்கும், ஒவ் வொரு மாநிலச் சட்டப் பேரவைக் குமான தேர்தல்கள் வயது வந்தோருக் கான வாக்குரிமை யின் அடிப்படை யில் இருக்கும்.

"திருத்தங்கள் பட்டியலில் உள்ள திருத்தம் 3087க்குப் பதிலாக பின்வருபவற்றை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

விதி 289-அ-வுக்கு பின், பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்."

289-ஆ. மக்களவைக்கும் ஒவ்வொரு மாநில சட்டப் பேரவைக்குமான தேர்தல்கள் வயதுவந்தோருக்கான வாக்குரிமையின் அடிப்படையில் இருக்கும் அதாவது உரிய சட்ட மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின்படி அல்லது அதன் வழியாகவோ இதற்காக நிச்சயிக்கப்பட்ட குறிப்பிட்ட தேதியில் இருபத்தோரு வயதுக்குக் குறையாமல் இருப்பவரும் இந்தியக் குடிமகனாகவும் இந்த அரசியல் அமைப்புச் சட் டத்தின்படி அல்லது உரிய சட்டமன்றம் இயற்றிய சட்டம் எதனாலோ அல்லது அதன் வழியாலோ குடியிருப்பின்மை, பித்துப் பிடித்த நிலை, குற்றம் புரிதல் ஒழுங்கீனமான மற்றும் சட்டத்துக்கு முரணான நடவடிக்கைகளால் தகுதி இழக்கப்படாத ஒவ்வொருவரும் அத்தகைய தேர்தலில் ஒரு வாக்காளராக பதிவு செய்து கொள்ள உரிமை பெற்றவர் ஆவர்."

**(திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. விதி 289-ஆ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது).**

## விதி 290

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

சட்டமன்றங்களுக் கான தேர்தல்களை நடத்தும் வழிவகை கள் வகுப்பது சம் பந்தமாக நாடாளு மன்றத்துக்குள்ள அதிகாரம்.

விதி 290க்கு பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:-

இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் வழிவகைகளுக்குட் பட்டு நாடாளுமன்ற இரண்டு அவைகளின் எதற்காவது அல்லது ஒரு மாநிலத்தின் சட்டப் பேரவைக்கு அல்லது இரு சட்டமன்றங்களில் எதற்காவது தேர்தல்கள் சம்பந்த

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 932.

இந்த அவையில் ஒத்திப் போடுவதற்கு ஆதரவாக பெரும்பான்மைக் கருத்து இருப்பதால் விவாதம் தள்ளிப்போடப்படுகிறது.

## புதிய விதி 289-அ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழி கிறேன்:

> "பட்டியல் (1)ன் (ஐந்தாவது வாரம்) திருத்தம் எண் 110 சம்பந்தமாக புதிய விதி 289 அ-விற்குப் பதிலாக பின் வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

சமயம் இனம் சாதி அல்லது பாலினம் காரணமாக வாக்காளர் பட்டியலில் இருந்து எவரும் நீக்கப்படுவ தற்கோ அல்லது சேர்க் கப்பட தகுதி யற்றவர் என்றோ ஆகார்.

> 289-அ. நாடாளுமன்ற அவைகளில் எதற்கும் அல்லது மாநில சட்டமன்றம் அல்லது சட்டமன்றங்களில் எதற்கும் நடைபெறும் தேர்தலுக்காக ஒவ்வொரு தொகுதி நிலப் பகுதிக்கும் ஒரு பொதுவான வாக்காளர் பட்டியல் இருக்கும். சமயம், இனம், சாதி, அல்லது பாலினம் காரணமாக வாக்காளர் பட்டியலில் இருந்து எவரும் நீக்கப்படுவதற்கோ அல்லது சேர்க்கப்படத் தகுதியற்றவர் என்றோ ஆகார்."

ஐயா, எதிர்காலத்தில் தனித் தொகுதிகள் இருக்கக்கூடாது என்ற அவையின் தீர்மானத்திற்கு உருவம் கொடுப்பதுமட்டுமே இதன் நோக்கமாகும். ஆங்கிலோ இந்தியர்கள், சீக்கியர்கள், முஸ்லீம்கள் ஆகியோரின் பிரதிநிதிகளுக்கு வழிவகைசெய்யும் வரைவு அரசியல் அமைப்புச் சட்டத்திலுள்ள விதிகளை பின்னால் கொண்டு வரப்போகும் திருத்தங்களால் நீக்கப்போவதால், உண்மையைச் சொல்வதென்றால் இந்தப் பிரிவு தேவையற்றது. கடந்தகால நடைமுறையை முற்றிலும் நீக்கம் செய்யும் ஒரு முக்கியமான தீர்மானத்தை நாம் எடுத்துள்ளதாக பொதுவாக உணரப்படுவதால், அரசியல் அமைப்புச் சட்டம் இதைத் தெளிவான முறையில் தெரிவிக்க வேண்டும் என்ற காரணத்திற்காகத்தான் நான் இந்தத் திருத்தத்தை கொண்டுவர முன்வந்துள்ளேன்.

**திரு அவைத் தலைவர்:** விவாதத்திற்காகவே நீங்கள் இதை கொண்டு வந்துள்ளீர்கள். இதை உண்மையிலேயே நிறைவேற்ற வேண்டுமென்று நீங்கள் விரும்பவில்லை என்று நான் எடுத்துக் கொள்ளலாமா?

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 930-31.

ஆலோசனை. சட்ட நுணுக்கம் கொண்டதாக இருந்தால்கூட அதைப் பரிசீலிக்க நமக்கு ஒரு சந்தர்பம் அளிக்கப்பட வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** வரைவுக்குழுவைக் கலந்தாலோசித்த பிறகே இந்தத் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டுள்ளன.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர் :** திருத்தங்களை முன்மொழியுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது அடுத்த திருத்தம்:

> "பிரிவு (4)ன் ஆரம்பத்தில் பின்வரும் சொற்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.
>
> 'இதற்காக நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் ஏதாவதின் வழி வகைகளுக்குட்பட்டு.'

**மாண்புமிகு திரு கே. சந்தானம்:** ஐயா, இது ஒரு அடிப்படையான திருத்தம். ஏனெனில் குடியரசுத் தலைவரின் விருப்புரிமையை நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் தடை செய்வது போலாகும் இது.

**திரு. அவைத் தலைவர்:** மேலும் எந்த விவாதமும் தேவையில்லை என நான் நினைக்கிறேன். இவைகளை முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** சட்ட நுணுக்கங்கள் கொண்ட விஷயங்களால் அரசியல் அமைப்புச் சட்டத்தை உருவாக்கிவிட முடியாது? அதிகமான தொழில்நுட்ப விஷயங்களில் மூழ்குவது ஒரு அரசியல் அமைப்புச் சட்டம் உருவாவதை அழித்து விடும்.

**திரு. எச்.வி. காமத் :** சில நாட்களுக்கு முன்பு அதிமுக்கியமான திருத்தங்கள் தள்ளிப் போடப்படும் என்று கூறினீர்கள்.

**திரு. அவைத் தலைவர்:** இவைகள் மிக முக்கியமான திருத்தங்கள் என்று கருதப்படுமானால் அவைகளை ஒத்திப் போடலாம்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 930.

சட்டமன்றத் தேர்தல்கள் நடத்த ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அதி காரங்கள்.

291. இந்த அரசியல் சட்டத்தின் வழிவகைகளுக்குட் பட்டு நாடாளுமன்றத்தால் இதற்காக வழிவகை செய்யப் படாதிருக்கும் அளவுக்கு அந்த மாநிலத்தின் சட்டப் பேரவை அல்லது சட்டமன்ற ஈரவைகளில் ஒன்றுக்கான தேர்தல்கள் சம்பந்தமான அல்லது அதுகுறித்த எல்லா விஷயங்களையும் செயல்படுத்த, அத்தகைய அவையை அல்லது அவைகளை அமைப்பது உட்படத் தேவை யான விஷயங்கள் குறித்து அந்த மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டமியற்றலாம்.''

ஐயா, பட்டியல் 1 (ஐந்தாவது வாரம்) உள்ள திருத்தம் எண் 211 உங்கள் அனுமதியுடன் முன்மொழிகிறேன்:

திருத்தம் இதுதான்:

''பட்டியல் 1ல் (ஐந்தாவது வாரம்) திருத்தம் 128 சம்பந்தமாக புதிய விதி யில் 'உட்பட்ட' என்ற சொல்லுக்குப் பதிலாக 'வாக்காளர் பட்டியல் தயாரிப்பு மற்றும் இதர' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** விதிகள் 290 மற்றும் 291-ஐ திரு. காமத் சரியாகப் படிக்கவில்லை அல்லது சரியாகப் புரிந்துகொள்ளவில்லை என்று நினைக்கிறேன்.

விதி 290 நாடாளுமன்றத்துக்கு அதிகாரம் அளிக்கிற அதே வேளையில் நாடாளுமன்றம் ஏதாவது விஷயத்தில் வழிவகை களுக்கு ஏற்பாடு செய்யவில்லை என்றால் அதை மாநிலச் சட்ட மன்றமே செய்து கொள்வதைப் பற்றி விதி 291 கூறுகிறது. இது ஒரு வகையில் நாடாளுமன்றம் மாநிலச் சட்டமன்றத்துக்கு விடப்பட்ட விஷயம். இது ஒரு எஞ்சிய பொருள் பற்றிய விதி. இதுதவிர வேறொன்றுமில்லை.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை** (திருவாங்கூர் சமஸ்தானம்): கால அட்டவணைப்படி எப்பொழுது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப் படும், மத்திய நாடாளுமன்றம் என்ன செய்யும் என்பதை எல்லாம் தல சட்டமன்றம் காத்திருந்து பார்க்க வேண்டுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 290ன் படி வழிவகைகள் செய்ய வேண்டிய கடமை அடிப்படையில் நாடாளு

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 935.

மன்றத்துக்குள்ளது. நாடாளுமன்றத்தின் இந்தப் பொறுப்பு வெளிப் படையாக அளிக்கப்பட்டுள்ளது. விதி 290ல் கூறப்பட்டுள்ள விஷயங்கள் சம்பந்தமாக சட்டத்தின் மூலம் வழிவகைகள் செய்யும் பொறுப்பும் கடமையும் நாடாளுமன்றத்துக்கு அளிக்கப்பட்டுள்ளது. விதி 290ல் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களுக்கு வழிவகைகள் செய்கையில் நாடாளுமன்றம் ஏதாவது விஷயம் சம்பந்தமாக குறிப் பிட்டு வெளிப்படையாக ஏற்பாடு செய்யாவிட்டால், நாடாளு மன்றம் விதி 290ல் எந்த விஷயத்தைக் குறித்து வழிவகைகள் செய்யத் தவறியதோ அது சம்பந்தமாக மாநில சட்டமன்றம் வழி வகைகள் செய்வதற்கு விதி 291 வகைசெய்கிறது.

**திரு. ஏ. தாணுப்பிள்ளை:** ''கால அட்டவணைப்படி தேர்தல் நடைபெற மத்திய சட்டமன்றம் அல்லது மாநில சட்டமன்றத்துக்கு இந்த விஷயத்தில் முழுப் பொறுப்பையும் கொடுப்பது சிறந்த வழியாக இருக்காதா என்பதை டாக்டர் அம்பேத்கரிடமிருந்து தெரிந்து கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. முக்கியமான சில விஷயங்கள் உள்ளன. நாடாளுமன்றம் அதற்கான ஏற்பாடுகளைத் தானே செய்ய வேண்டும் என்று நினைக்கலாம். வேறுசில விஷயங்கள் வட்டாரத் தன்மை யுடையதாக, மாநிலத்துக்கு மாநிலம் வேறுபட்டதாக இருக்கலாம். நாடாளுமன்றம் அவற்றை மாநிலச் சட்டமன்றத்துக்கு விட்டுவிட லாம். இதுதான் விதி 290 மற்றும் 291 இடையேயான வேறுபாடுகள்.

(டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தம் செய்யப்பட்ட விதி 291 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).

### விதி 291-அ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா நான் முன் மொழிகிறேன்:

''விதி 291க்குப் பிறகு பின்வரும் விதியைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:-

தேர்தல் விஷயங்களில் நீதிமன்றங்களின் அதிகார வரம்புக்குத் தடை.

291-அ இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தில் கூறப்பட்டிருப்பது எது வாயினும்-

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 936.

தேர்தல் சம்பந்த மான விஷயங் களில் நீதிமன்றங் களுக்குள்ள தடை

அ) தொகுதிகளை வரையறுத்தல் அல்லது இந்தத் தொகுதி களுக்கான பதவியிடங்களைப் பகிர்ந்தளித்தல் சம்பந்தமாக, இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் விதிகள் 290 அல்லது 291-ன்படி இயற்றப்படும் அல்லது இயற்றப்பட்டதாகக் கருதப் படும் சட்டம் ஏதாவதின் செல்லும் தன்மையை எதிர்த்து நீதிமன்றம் எதிலும் கேள்வி எழுப்பக்கூடாது.

ஆ) நாடாளுமன்ற ஈரவைகள் எதற்கும், மாநில சட்டப் பேரவைக்கு அல்லது ஈரவைகளில் ஏதாவது ஒன்றுக்கான தேர்தலை உரிய சட்டமன்றம் நிறைவேற்றிய சட்டத்தாலோ அதன் வழியாலோ வகை செய்யப்பட்டுள்ள முறையிலும் அதிகார அமைப்புக்கு தேர்தல் வழக்கு மனு தாக்கல் செய்வதன் மூலமே எதிர்த்து வாதிடலாம்.

இ) இது போன்ற தேர்தல் சம்பந்தமான, அல்லது தொடர் புடைய நட வடிக்கைகளைக் குறித்து, தேர்தலின் எந்தக் கட்டத் திலும், உரிய சட்டமன்றம் சட்டம் இயற்றுவதன் மூலம் வழி வகைகள் செய்யலாம்.

ஐயா, நான் மேலும் முன்மொழிகிறேன்:

"பட்டியல் (1)ல் (ஐந்தாவது வாரம்) திருத்தம் 132 சம்பந்தமாக புதிய விதி 291-அ-ல் உட்பிரிவு (இ) நீக்கப்படுகிறது."

(டாக்டர் அம்பேத்கரால் திருத்தம் செய்யப்பட்ட விதி 291-அ அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்படுகிறது.)

★ ★ ★

## விதி 297

[1]**திரு எச்.வி. காமத்:** தலைவர் அவர்களே, நான் முன்மொழி கிறேன்:

''விதி 297ல் உட்பிரிவு (2)ல் 'மற்ற சமூகங்களுடன் ஒப்பிடுகையில் தகுதி யின் அடிப்படையில் நியமனத்திற்கு இந்த உறுப்பினர்கள் பொருத்தமான வர்கள் என்று கருதப்பட்டால், என்ற சொற்களுக்குப் பதில் 'மற்ற சமூகத் தின் உறுப்பினர்களுடன் ஒப்பிடுகையில், இந்த வகை நியமனம் தகுதியின் அடிப்படையில் இருந்தபோதிலும்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.''

ஐயா, இந்தத் திருத்தம் வரைவு தன்மையுடையது என்று நான் கருதுவதால் வரைவுக்குழுவின் மேலான பரிசீலனைக்கு உரிய கட்டத்தில் விட்டுவிடுகிறேன்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 937.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது வரைவுக் குரியதென்று நான் நினைக்கவில்லை. எனினும் நாம் அதை பின்பு கவனிக்கலாம்.

*(விதி 297 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது)*

★ ★ ★

## விதி 300

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''திருத்தங்களின் பட்டியலில் உள்ள திருத்தம் 3186 சம்பந்தமாக விதி 300 பிரிவு (1)க்குப் பிறகு பகுதி I என்ற சொற்களுக்கும் எண்ணுக்கும் பிறகு 'பகுதி III' என்ற சொல்லையும் எண்ணையும் சேர்க்க வேண்டும்.''

[2]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் நீங்கள் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை. ஐயா,

*(டாக்டர் அம்பேத்கரின் மேற்குறிப்பிட்ட திருத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. திருத்தப்பட்ட விதி 300 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப் பட்டது).*

★ ★ ★

## விதி 301

★ ★ ★

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் முன்மொழி கிறேன்:

> ''விதி 301-ல் பிரிவு (3)ல் 'நாடாளுமன்றம்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு அவையும்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

*(டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தம் செய்யப்பட்ட விதி 301 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட்டது).*

★ ★ ★

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜுன் 1949, பக்கம் 942.
2. அதே நூல், பக். 943.
3. அதே நூல் 945.

[1]**திரு. அவைத் தலைவர்:** அது ஒரு அவையின் அமர்வாக இருக்கும் என்று நீங்கள் கற்பனை செய்கிறீர்கள்.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர் :** நிச்சயமாக அந்தக் கருத்தின் அடிப் படையில்தான் எனது வேண்டுகோள் இருந்தது. வேறு எந்தவித மான கருத்து இருக்க முடியும் என்பதை நான் அறியேன். குடியரசுத் தலைவர், துணைத் தலைவர் மற்றும் மாநிலங்களின் மேலவை உறுப்பினர்களை சட்டமன்ற உறுப்பினர் என்ற நிலையில் இருந்துதான் தேர்ந்தெடுக்கிறார்கள் என்பதை எங்கும் காண்கிறோம். உதாரணமாக விதி 55ன் படி துணைக் குடியரசுத் தலைவர் நாடாளுமன்ற இரு அவைகளின் உறுப்பினர்கள் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுவார் என்று அறிகிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு கூட்டுக் கூட்டத்தில் என்றச் சொல்லாக்கத்தைக் கவனிக்கவும், அமர்வு அல்ல.

**திரு. ஜஸ்பத் ராய் கபூர்:** இந்த விதி வேறுவிதமாக விளக்கப் படுவதைத்தவிர்க்க, அவையில் அந்தக் கருத்து அதிகாரபூர்வமாக தெரிவிக்கப்பட்டால் சரிதான்.

★ ★ ★

## விதி 289

★ ★ ★

[2]**திரு. அவைத் தலைவர் :** டாக்டர் அம்பேத்கர் கடைசியாக முன்மொழிந்துள்ள திருத்தத்தை இப்பொழுது உங்கள் முன் வைக் கிறேன். இதுதான் திருத்தம்:

*பட்டியல் 1ல், திருத்தம் 99 விதி 289ல்...*

*(i) பிரிவு (1)-ல் இறுதியில் வரும் சொற்களான 'குடியரசுத்தலைவரால் நியமிக்கப்படுவார்' என்ற சொற்களை நீக்குவது.*

*(ii) பிரிவு (2)ஐ நீக்கிவிட்டு பின்வரும் உட்பிரிவுகளைச் சேர்த்துக் கொள்வது:-*

*'(2) தேர்தல் ஆணையம், தலைமைத் தேர்தல் ஆணையரையும் குடியரசுத் தலைவர் அவ்வப்போது நிச்சயித்திடும் குறிப்பிட்ட எண்ணிக்கையிலான பிற தேர்தல் ஆணையர்கள் எவரேனுமிருப்பின் அவர்களையும் கொண்டிருக்கும், நாடாளுமன்றத்தால் இதற்காக இயற்றும் சட்டம் ஒன்றின் வழிவகை*

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், தொகுதி VIII, 16 ஜூன் 1949, பக்கம் 952.
2. அதே நூல், பக். 958.

களுக்குட்பட்டு தலைமைத் தேர்தல் ஆணையரும், மற்ற தேர்தல் ஆணையர்களும் குடியரசுத்தலைவரால் நியமிக்கப்படுவர்."

(2 அ) இவ்விதம் வேறு தேர்தல் ஆணையர் நியமிக்கப்பட்டால் தலைமைத் தேர்தல் ஆணையர், ஆணையத்தின் தலைவராகப் பணியாற்றுவார்.

(ii) பிரிவு (4)ல் பணி நிலைகளின் தன்மை என்ற சொற்களுக்கு முன் 'நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தின் வழிவகைகளுக்குட்பட்டு' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(மற்ற உறுப்பினர்களின் ஆறு திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன)

(திருத்தம் செய்யப்பட்ட விதி 289 அரசியல் அமைப்புச் சட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

(குடியரசுத் தலைவரால் தீர்மானிக்கப்படும் 1949 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் ஒரு தேதிக்கு சட்டமன்றம் ஒத்திவைக்கப்பட்டது.)



# சிறப்புப் பெயரகராதி

